வைக்கம் முகம்மது பஷீர்

# காலம் முழுதும் கலை



ஈ.எம். அஷ்ரஃப்
தமிழில் : குறிஞ்சிவேலன்



''போடா, உன் பொண்டாட்டிக்கு வரதட்சணையா வந்ததாடா இந்த மலையாள மொழி? எனக்கு என்ன இஷ்டமோ அதைத்தான் எழுதுவேன். எனக்குத் தெரிஞ்ச எழுத்துகளைக் கொண்டே எழுதுவேண்டா, நான். உன்னோட ஏட்டு எலக்கணத்த நீயே வச்சுக்கடா!''

- பஷீர்

# ஒன்று

மனக்குன்னம் வைப்பேல் காயி அப்துல் ரஹ்மானுக்கு புத்தன் காஞ்ஞூர் குஞ்ஞாச்சும்மாவுக்கும் ஆறு பிள்ளைகள் - முகமது பஷீர், அப்துல் காதர், ஃபாத்திமா என்கிற பாத்தும்மா, ஹனீஃபா, அபுபக்கர், குஞ்ஞானும்மா.

காயி அப்துல் ரஹ்மான் ஒரு செல்வாக்குள்ள மர வியாபாரி. அதனால் மூவாட்டுப் புழையில் மிதவை கட்டி அதன்மூலம் கொச்சிக்கு மரங்களை இழுத்து வந்து கரையில் சேர்ப்பதற்கென்றே வாடகைக்கு யானைகளைக் கொண்டு வேலை வாங்கியவர். மிகவும் செல்வ செழிப்பான நிலையில்தான் அவர் வாழ்ந்து வந்தார். அவ்வாறு நல்ல நிலையில் இருக்கும்போதே சில நாள்களுக்குப் பின் ஏதோவொரு விவகாரத்தில் அகப்பட்டு அப்துல் ரஹ்மான் பாப்பராகிவிட்டார். வீட்டில் பட்டினி நாள்கள் என்பவை அதிகரிக்கத் தொடங்கின. ஆனால், இப்படிப்பட்ட எல்லா கஷ்டங்களுக்கு இடையிலும் தம் பிள்ளைகளுக்கு படிப்பை அளிப்பதற்கு மட்டும் அப்துல் ரஹ்மான் தயங்கவே இல்லை.

மூத்த மகன் பெயர்தான் முகம்மது பஷீர். ஆனால், அலவோ, கொச்சுமம்மது, கையிட்டு

வாரிக்கூதிகொச்சாமு, மும்மது, ஏ.கே.முகமது - இப்படிப்பட்ட பட்டப் பெயர்களாலேயே அவரை அழைத்தார்கள். தலையோலைப் பரம்பிலுள்ள முஸ்லிம் எல்.வி. பள்ளியில்தான் பஷீரும், அவருக்கு நேர் இளைய தம்பியான அப்துல்காதரும் படித்துக் கொண்டிருந்தார்கள். முதல் வகுப்பில் படிக்கும்போதே பஷீர் நிறமையானவராக இருந்தார். அதே நேரத்தில் குறும்பானவராகவும் இருந்தார். வீட்டிலும் பள்ளியிலும் அவர் செய்யாத குறும்புத்தனங்களே இல்லை எனலாம்.

வீட்டிலிருந்து ஆறு கிலோ மீட்டர் தூரம் நடந்து சென்றுதான் அவர் பள்ளிக்கூடத்துக்குப் போய்வந்தார். இந்த பள்ளிப் பயணம் அவருக்கு மிகவும் சுவையானதாகவே இருந்தது. குறைந்தது, பத்து சிறுவர்கள் வரையில் சேர்ந்து சென்றால் குறும்பு விளையாட்டுகளுக்கு கேட்கவா வேண்டும். வீட்டிலிருந்து காலையில் ஏழுமணிக்குப் புறப்பட்டால் பள்ளிக்கு பத்து மணிக்குத்தான் சென்று சேருவார்கள். அதுவரையில் ஒரே குறும்புத்தனம்தான். வழியிலுள்ள பறம்புகளில் நுழைந்து மாங்காய்களையும் மற்ற காய்களையும் பறித்துத் தின்பார்கள். தம்பி அப்துல் காதரின் கால் ஒன்று பிறவி ஊனம். அவர் நொண்டியானதால் சட்டாம்பிள்ளை என்றுதான் நண்பர்கள் அழைத்தார்கள். மற்றவர்களின் பறம்பிலிருந்து திருடிய மாங்காய்களையும் மற்ற காய்களையும் அப்துல் காதருக்கும் கொண்டு போவார்கள். இதுவொரு தந்திரம்தான். திருடும்போது யாராவது பிடித்துவிட்டால் பஷீரும் அவருடைய கும்பலைச் சேர்ந்தவர்களும் அப்துல்காதரை பறம்பிலேயே விட்டுவிட்டு ஓடிவிடுவார்கள். அதனால் ஓட முடியாமல் தவித்துக் கொண் டிருக்கும் அப்துல்காதரைத்தான் தோட்டத்துச் சொந்தக்காரன் பிடித்துச் செல்வான்.

ஒருமுறை அப்படி ஒரு சம்பவம் நிகழ்ந்து. அலிக்குஞ்ஞி என்பவரின் தோட்டத்திலுள்ள மாமரத்தில் ஏறிய பஷீரும் நண்பர்களும் தங்கள் விருப்பம்போல் மாங்காய்களைப் பறித்துத் தின்றார்கள். அதைக் கண்டுவிட்டு அலிக்குஞ்ஞி ஓடி வந்ததும் வழக்கம்போல் அப்துல்காதரை மட்டும் அம்போவென தரையில் உட்கார வைத்துவிட்டு மற்றவர்கள் ஓடி மறைந்துவிட்டார்கள். பப்பு பிள்ளை, எலிஞ்ஞிக்கல் செரியான், மம்மி, அந்துக்காயா, கொச்சுராமன் என்பவர்கள்தான் அன்றைய பஷீரின் கூட்டாளிகள். அலிக்குஞ்ஞும் அவன் வீட்டாரும் கைகோர்த்து

மஞ்சமாக்கி, அப்துல்காதரை அதில் தூக்கி வைத்து அவர்களின் வீட்டிலுள்ள ஓர் அறையில் கொண்டுபோய் போட்டு அடைத்து விட்டார்கள். பஷீருக்கும் கூட்டத்தாருக்கும் விவரம் தெரிந்தது. அவர்கள் அந்தச் சிறையிலிருந்து அப்துல்காதரை மீட்பதற்காக அலிக்குஞ்ஞி வீட்டு வாசலில் கூச்சல்போட்டார்கள். அந்தக் கூட்டத்தில் திடீர் கவிஞனான கொச்சம்மு ஒரு கவிதை எழுதி அலிக்குஞ்ஞி வீட்டுப் படிக்கட்டில் நின்று உரக்கப் பாடினான்.

இந்தக் கவிதையைக் கேட்டவுடன் அலிக்குஞ்ஞும் அவன் வீட்டாரும் ஓடிவந்து பஷீரையும் அவருடைய கூட்டாளி களையும் பிடித்து சக்கையாகச் சாத்தினார்கள். சிறையிலிருந்த அப்துல்காதரையும் விடுவித்தார்கள். ஆனால் இதில் சுவையான விஷயம் இதுவல்ல. இப்படிச் சிறைப்படுவதில் அப்துல் காதருக்குதான் மிகவும் விருப்பமாக இருந்தது. அதற்குக் காரணம், இப்படி மாட்டிக் கொள்ளும் போதெல்லாம் தன் விருப்பம்போல தின்பண்டம் கிடைத்ததுதான்.

இரண்டாம் வகுப்பில் படிக்கும்போதும் ஒரு திருட்டுச் சம்பவம் ஏற்பட்டது. ஒரு மாணவியிடம் ஒரு முனையில் மஞ்சளும் மறுமுனையில் கருப்பு நிறமுமுள்ள வண்ணப் பென்சில் இருந்தது. பஷீரும் அப்துல்காதரும் சேர்ந்து அதைத் திருடிவிட்டார்கள். அதன்பின் பென்சிலை உடைத்து ஆளுக்குப் பாதியாக இருவரும் எடுத்துக்கொண்டார்கள். திருடியதைப்போலவே சீக்கிரத்தில் பிடிபட்டுவிட்டார்கள். 'அண்ணன்தான் திருடினான்' என்று அப்துல்காதரும், 'தான் அப்படிப்பட்டதொரு பென்சிலையே கண்டதில்லை' என்று பஷீரும் கூறினார்கள். அந்த நிகழ்ச்சி எப்படியிருந்தாலும் அதன்பின் பஷீர் வகுப்புக்குள் நுழையும் போதெல்லாம் 'திருடன் வருகிறான், திருடன் வருகிறான்' என்று பெண்பிள்ளைகள் கூச்சல் போடத் தொடங்கினார்கள். இது தினசரி நடக்கத் தொடங்கியதும் கொச்சுராமன் இடைபுகுந்து, 'எல்லோ ரும் பஷீரை 'இக்காக்கா'ன்னுதான் கூப்பிடறாங்க. அப்படிப்பட்ட இக்காக்காவை யாராவது திருடன்னு கூப்பிட்டா நான் அடிச்சே பஞ்சராக்கிடுவேன்' என்று கூச்சல் போட்டு பெண்பிள்ளைகளுக் கெல்லாம் ஓர் எச்சரிக்கை கொடுத்தான். இப்படி எச்சரித்தது மட்டுமல்ல, தன் அருகில் இருந்த பெண்ணின் கன்னத்தில் ஓர் அறையும் கொடுத்தான். இதனால், வகுப்பு ஆசிரியர் புதுச்சேரி நாராயண பிள்ளை சார் பிரச்னையில் தலையிட்டார். நடந்த நிகழ்ச்சி முழுவதையும் புரிந்துகொண்ட பின் நாராயண பிள்ளை

சார் அப்துல்காதரை அழைத்து, அவர் காதில், 'நீ சின்னவன். அதனால் பென்சிலை நீதான் திருடிக்கிட்டேன்னு சொல்லணும். பஷீரை திருடனாக்கிவிடக்கூடாது' என்று கிசுகிசுத்தார். அப்துல்காதரும் அதேபால் கூறினார். அதன்பின், யாரும் பஷீரை திருடனென்று அழைக்கவில்லை. நாராயண பிள்ளை சாருக்கு பஷீரை மிகவும் பிடிக்கும்.

பஷீர், வீட்டிலும் ஒரு குறும்புக்காரராகத்தான் இருந்தார். உம்மா ஒரு சிறிய குடுவையில் போட்டு வைத்திருந்த சில்லறைகளை பஷீரும் இன்னொரு தம்பியான ஹனீபாவும் சேர்ந்து 'சுட்டு' விட்டார்கள். இதுபற்றி இருவரும் யாரிடமும் சொல்வதில்லை என்றும் ஒப்பந்தமும் செய்து கொண்டார்கள். ஆனால், திருடியதைப் பங்கிட்டுக்கொள்ளும்போது 'கசமுசா' உண்டாகி விட்டது. அதனால், அண்ணன்தான் பணத்தைத் திருடினார் என்று ஹனீபா உம்மாவிடம் சொல்லிவிட்டார். இதை அறிந்தவுடன் வீட்டுக்குப் பின்னாலுள்ள ஒரு பாக்கு மரத்தில் பஷீரைக் கட்டினார்கள். ஆனால், ஒரு மணி நேரம் கழிந்த பின், கட்டப்பட்டிருந்த இடத்திலிருந்து பஷீர் காணாமல் போய் விட்டிருந்தார். உம்மாவும் மற்றவர்களும் தேடத் தொடங்கினார்கள். அப்போதுதான் பாக்கு மரத்தின் உச்சியிலிருந்து, 'உம்மா, நான் இங்கே இருக்கேன்' என்றொரு குரல். அண்ணாந்து பார்த்தால். பாக்குமரத்தில் கட்டிய கயிற்றைப் பிடித்துக்கொண்டு மரத்தின் உச்சியில் ஏறி அமர்ந்திருக்கிறார் பஷீர்.

மாத்தன் குஞ்ஞு என்னும் மாத்யூ மத்தாயியின் வீட்டில்தான் பஷீர் தன் விடுமுறை நாள்களைச் செலவழிப்பார். பஷீர் பிறந்த அதே நேரத்தில்தான் மாத்தன் குஞ்ஞும் பூமியில் அவதரித்தார். அதனால், இவர்களை 'இரட்டைச் சகோதரர்கள்' என்றுதான் நண்பர்கள் அழைத்துக் கொண்டிருந்தார்கள். பள்ளி முடிந்தால் போதும் பேட்மிண்டன்தான் இவர்களுக்கு முக்கிய விளையாட்டு. ஞாயிற்றுக்கிழமைகளில் பஷீர் ஏறக்குறைய மாத்தன் குஞ்ஞின் வீட்டில்தான் உண்டு உறங்கிக் கிடப்பார்.

முஸ்லிம் எல்.பி. பள்ளியில் தேறி வெளியேறிய பின், வைக்கம் ஆங்கிலப் பள்ளியில் சேர்ந்து படித்தார் பஷீர். பள்ளிக்கூடப் படிப்போடு அகமது முஸலியார் வீட்டுக்குச் சென்று குரானும் கற்றுக்கொண்டார். ஆங்கிலத்தை மத்தாயி சாரும், இந்தியை சங்கர்ஜி என்றழைக்கப்படும் சங்கரன் நாயரும் கற்றுக் கொடுத்தார்கள். வைக்கம் ஆங்கிலப் பள்ளியில் படிக்கும்

காலத்தில் பஷீரை ராமய்யர் சாருக்கு மிகவும் பிடிக்கும். அதனால் வைக்கத்தில் படிக்கும்போது வைக்கத்து அஷ்டமி நாளை எதிர்நோக்கிக் காத்திருப்பார் பஷீர். அதற்குக் காரணம், அந்த நாளில்தான் புத்தக விற்பனையார்கள் நகரத்துக்கு வருவார்கள். அவர்களிடமிருந்து குறைந்த விலையில் வாசிப்பதற்கு புத்தகங் கள் கிடைக்கும். சில சமயம் பணம் கொடுக்காமலும் புத்தகம் கிடைக்கும். முதல்நாள், இலவசமாகக் கிடைக்கும் புத்தகத்தை கசங்காமல் கிழிக்காமல் மறுநாள் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என்பதுதான் இலவசப்புத்தகம் பெறுவதற்கான நிபந்தனையாகும். வீட்டின் ஏழைமை நிலையால், இப்படிப் பட்ட புத்தகம் கிடைத்து படிப்பதற்கான வசதியை பஷீரின் நண்பர்கள்தான் செய்து கொடுத்தார்கள். அதன்மூலம் இதிகாசக் கதைகளையும் நாவல்களையும் மற்றவற்றையும் வீட்டுக்கு கொண்டுசென்று இரவு முழுவதும் கண்விழித்து படிப்பார் பஷீர். மறுநாள் விடியும் நேரத்தில்தான் கொஞ்சம் தூங்கி விடுவார். அதேநரத்தில் வாசலைப் பெருக்கி சுத்தம் செய்ய வரும் நங்ஙலி பஷீரின் தலையில் தண்ணீரைத் தெளித்து எழுப்பிவிடுவார்.

இப்படிப் படித்த நாவல்களிலுள்ள முரட்டு கதாபாத்திரங்களும் வில்லன்களும் முஸ்லிம்களாகவே இருந்தார்கள் என்பதை பஷீர் கண்டுபிடித்தார். 'தன் சமுதாயத்தில் முரடர்களும் துஷ்டர்களும் மட்டும்தானா இருக்கிறார்கள்?' - இப்படியொரு சிந்தனை பஷீரை இளம்வயதிலிருந்தே அலட்டிக் கொண்டிருந்தது. அத னால், முஸ்லிம் சமுதாயத்திலும் நல்லவர்கள் உண்டென்னும் உண்மையை வெளிப்படுத்த வேண்டுமென்று அன்றே முடிவு செய்தார் பஷீர். அதற்குத் தகுந்தாற்போல் பிற்காலத்தில் அவர் ஒரு மாபெரும் எழுத்தாளராக உருவெடுத்த பின் அந்த எண்ணத்தைச் செயல்படுத்தினார்.

காயி அப்துல் ரஹ்மான் ஆண் பிள்ளைகளை மட்டுமல்லாமல் தன் பெண் பிள்ளைகளையும் பள்ளிக்கு அனுப்பி படிக்க வைத்த நிகழ்ச்சி அப்போது முஸ்லிம் சமுதாயத்தில் பெரும் பிரச்னையை உண்டாக்கிவிட்டது. திருவிதாங்கூரில் சர்.சி,பி.ராமசாமி ஐயர் அரசாளும் காலம் அது. அப்போது பஞ்சாயத்தில் பொதுக்காரிய சபை இயங்கிக்கொண்டிருந்தது. முஸ்லிம் சமூக வாழ்க்கை முறையை பள்ளிவாசல் கமிட்டிதான் கட்டுப்பாட்டுக்குள் வைத் திருந்தது. ராத்தீப் கமிட்டி முதலான பழமைவாதிகளின் சபையும் அப்போது இருந்தது.

ஆனால், அப்துல் ரஹ்மான் இவற்றுக்கெல்லாம் ஓர் எதிர்பாளராகத்தான் இருந்தார். அப்போது முஸ்லிம்களுக்கிடையே நடைபெறும் விருந்துகளில் ஆறு பேர்கள் ஒன்றாக வட்டமிட்டு அமர்ந்து ஒரே தட்டில் விருந்து உண்ணும் சம்பிரதாயம் நடைமுறையில் இருந்தது. அசுத்தமான இந்த நடைமுறைக்கு எதிராக அப்துல் ரஹ்மான் குரலெழுப்பினார். ஒவ்வொருவரும் உண்பதற்கு ஒவ்வொரு பாத்திரம் தேவைஎன்னும் குரலால் முஸ்லிம் பழமைவாதிகளின் குடும்பங்களிலிருந்து அப்துல் ரஹ்மானுக்கு எதிர்ப்புகள் எழுந்தன. இது மட்டுமல்லாமல், மேல் அங்கியும் முக்காடும் அணிந்து இளையமகள் குஞ்ஞானும்மாவை ஆங்கிலம் கற்க அனுப்பியதும்கூட முஸ்லிம்களுக்கிடையே விவாதமாயிற்று.

அதேபோல், அன்றைய முஸ்லிம் சமுதாய வழக்கத்தை அனுசரித்து பஷீர் மொட்டை அடிக்கவில்லை. அப்படி மொட்டை அடிக்காததோடு மட்டுமல்ல, கிராப்பும் வெட்டிக்கொண்டார். இவ்வாறு நடைமுறை வழக்கங்களை ஒதுக்கிவிட்டு, அப்துல் ரஹ்மானும் அவரது குடும்பமும் புதிய பாதைக்குள் சென்ற போது பிள்ளைகளெல்லாம் தவறான வழிக்குப் போய்விடுவார்களோ என்று தாய்மாமன் எச்சரித்தார். அதேபோல் கிராமத்திலும் இஸ்மாயில் குட்டி, கொச்சுக்காயி முதலான குண்டர்களும் பலவகையான ஆட்சேபணைகளைப் பரப்பினார்கள். இந்த நேரத்தில்தான் ஒரு சிறிய பிச்சுவா கத்தியை இடுப்பில் செருகிக் கொண்டு பஷீர் நடமாடியதும். அந்த பிச்சுவா கத்தியால் அவர் யாரையும் குத்தவோ கலவரப்படுத்தவோ செய்யவில்லை என்றாலும் கிராமத்தில் பலருக்கும் இதுவே ஒரு முக்கிய பேச்சாயிற்று. தன்னைப் பற்றியோ தன் குடும்பத்தைப் பற்றியோ யாராவது மோசமாகப் பேசுவது தெரிந்தால் போதும், இந்த பிச்சுவாவை உருவி கையில் பிடித்துக்கொண்டு அவர்களின் அருகே மெல்ல செல்வார். அவ்வளவுதான், எதிராளிகள் நிசப்தமாகி விடுவார்கள். பிற்காலத்தில் கூட ஒரு கட்டாரியை எப்போதும் தன் கையில் வைத்து பாதுகாத்தார் பஷீர்.

இளம் வயதில் குறும்புத்தனங்களுக்கிடையே அவரிடம் ஒரு காதலும் தோன்றியது. காதலியின் பெயர்தான் சுஹாரா. 'பால்யகால சகி' (இளம் பருவத்து தோழி)யின் நாயகி. தன் வீட்டுக்குப் பக்கத்து வீட்டிலுள்ள பெண் அவள். வகுப்பில் கணக்குப் பாடத்தில் மிகவும் மோசமானவர் பஷீர். ஒன்றையும்

ஒன்றையும் கூட்டினால் கொஞ்சம் பெரிய ஒன்று என்னும் பதிலால் பஷீர் ஓர் ஏளனக் கதாபாத்திரமாகவே மாறினார். அப்போதெல்லாம் தான் எழுதி வைத்திருக்கும் கணக்கை யாருக்கும் தெரியாமல் பஷீருக்குக் காட்டி அவரைக் காப்பாற்றிய இளம் பருவத்து தோழிதான் அவள்... ஆனால் இந்தக் காதல் ஒரு துன்பியல் கதையாகத்தான் பரிணமித்தது.

வைக்கம் பள்ளிக்கூடத்தில் பஷீர் நான்காம் படிவத்தில் படித்துக் கொண்டிருந்த காலத்தில்தான் மகாத்மா காந்தி வைக்கம் சத்தியா கிரகப் போராட்டத்தில் பங்கு கொள்வதற்கு வந்திருந்தார். காந்திஜியின் இந்த வருகைதான் பஷீரின் பிற்கால வாழ்க்கையை மிகவும் கவர்ந்த ஒரு நிகழ்ச்சியாயிற்று.

## இரண்டு

பிரிட்டிஷ்காரர்களுக்கு எதிரானதும் சுதந்தரப் போராட்டத்தை ஒட்டிய வரலாற்று முக்கியத் துவமும் வாய்ந்ததுதான் இந்த வைக்கம் சத்தியாகிரகம். இது எல்லா தாழ்த்தப்பட்ட இந்துக்களுக்கும் கோயில் பிரவேசத்தை அனுமதிக்க வேண்டுமென்னும் முக்கியமான கோரிக்கையால், மேல் ஜாதி இந்துக்கள் எல்லாரும் சேர்ந்து சத்தியாகிரகிகளின் கண் களில் சுண்ணாம்பைக் கொட்டி நிரப்பி குரூர மாக அடிக்கவும் செய்தார்கள். இந்த நிகழ்ச்சி திருவிதாங்கூரில் பலத்த கண்டனப் புயலைக் கிளப்பியது. காந்திஜி இந்தப் போராட்டத் துக்கு ஆதரவு தெரிவித்து சத்தியாகிரகிகளைச் சந்திக்கவும் தீர்மானித்தார். அதன்படி காந்திஜி வந்தபோது அவரை வரவேற்பதற்கு வைக்கம் தோணித்துறையிலும் காயல் ஓரத்திலும் பெரும் மக்கள் கூட்டம் காத்திருந்தது. பஷீரும் சில மாணவர்களும் வகுப்புக்கு மட்டம் போட்டுவிட்டு அந்த 'அரை நிர்வாண பக்கிரி'யைக் காண்பதற்குச் சென்றார்கள்.

ஒரு படகில் காந்திஜி வருவதைக் கண்ட வுடன் அங்கு குழுமியிருந்த மக்கள் வெள்ளம் ஒரே குரலில் 'மகாத்மா காந்திக்கு ஜே...' என முழங்கியது. அந்த உற்சாக முழக்கம் காற்றுக்கும் ஆகாயத்துக்கும் அப்பால் எழுந்த பல சிங்கங்களின் ஒட்டுமொத்த கர்ஜனை

போலிருந்தது. அந்தக் கர்ஜனை பஷீரின் காதுகளிலிருந்து இருதயத்துக்குள் நுழைந்து தீப்பிழம்பாக இருந்தது. இவ்வுலகம் முழுவதும் தம் விரிந்த கண்களால் மாட்டுமே நோக்கும் காந்திஜியை நேரில் கண்டதால் நேர்ந்த தரிசனத்தின் மூலம் அந்த தேஜஸ் பஷீரின் உள்ளுக்குள் நுழைந்தது. இனி தொடுவணர்வு மட்டும்தான் மிச்சம். பற்களில்லாத தன் வாயின் ஈறை மட்டுமே காட்டியவாறு களங்கமில்லாமல் சிரித்துக்கொண்டே கரையில் இறங்கினார் காந்திஜி. பின், திறந்த காரில் ஏறி அமர்ந்தார். நிரம்பி வழிந்த மக்கள் கூட்டத்தின் வழியே கார் சத்தியாகிரக ஆசிரமத்தை நோக்கி மெல்ல நகர்ந்தது. மக்கள் கூட்டத்தில் பஷீரும் நின்றிருந் தார். அப்போதுதான், காந்திஜியைத் தொடவேண்டும் என்னும் ஆசையானது பஷீரினுள் ஓர் ஆவேசமாக மாறியது. ஆயிரக்கணக் கில் கூடியிருந்த மக்கள் கூட்டத்துக்கு நடுவே அங்குல அங்குலமாக நகர்ந்து சென்ற பஷீர், தன்னுடைய அந்த ஆசையை காந்திஜியின் வலது தோளில் ஒருமுறை தொட்டு நிறைவேற்றிக்கொண்டார். இதற்கிடையே அந்தக் கூட்ட நெரிசலில் கீழே விழுந்து விடாம லிருப்பதற்காக காரின் பக்கவாட்டில் பிடித்துக்கொண்டே போனபோதுதான் காந்திஜி பஷீரை நோக்கி புன்னகைத்தார்.

அவ்வாறு, காந்திஜியைத் தொட்ட நிகழ்ச்சியானது மேலும் பலருக்கும் ஏற்பட்டிருக்கலாம். கட்டிப் பிடித்தும் காலில் விழுந் தும் தொழுதிருக்கலாம். ஆனால் பஷீருக்கு மட்டும் இது ஓர் உள்ளுணர்சி நிகழ்வாக இருந்தது. சுதந்தரமில்லாமையினால் ஏற்பட்ட பெரும் துன்பங்கள் தெரிந்தும் தெரியாததுமான வகையில் மனத்தைக் காயப்படுத்தியபோது தீர்க்கத்தரிசியான காந்திஜியைத் தொட்ட அந்தச் சம்பவம், பஷீரினுள் மின்சக்தி யாக மாறிக்கொண்டிருந்தது. அன்று மாலை வீட்டுக்குச் சென்றதும், தானும் காந்திஜியைத் தொட்டதைப் பற்றி உம்மா விடம் கூறினார். 'காந்திஜி' என்றதும் என்ன பொருள் என்று கூட அறியாத உம்மா மிகவும் பயந்துவிட்டார். அவர் திக்பிரமையுடன் பஷீரை நோக்கி, 'மகனே, உனக்கு ஒன்றும் ஆகலையே...' என்று கூறினார். அபபோதுதான் காந்திஜியைப் பற்றி தன் உம்மாவின் சந்தேகம் வேறு மாதிரியாக இருந்தது. 'இந்த காந்திஜி நம்ம பசியைப் போக்குவாரா மகனே?' என்பதுபோல்.

பஷீர் காந்தியைத் தொட்டுவிட்டு வந்த நிகழ்ச்சியை வாப்பா அறிந்தார். கிராமத்தில் அதுவொரு பாடலாகவே உருவெடுத்தது. 'காந்திஜியைத் தொட்டுவிட்டு வந்த என்னைப் பார்த்தீர்களா

மக்களே' என்னும் பாவனையில் பஷீர் மார்பு புடைக்க நடக்கவும் தொடங்கினார். வாப்பாவும் சுதந்தரப் போராட்டத்தில் ஈர்க்கப்பட்டவரானார். மர வியாபாரத்துக்காக எர்ணாகுளத்துக்குப் போய் வரும்போது சில படங்களை வாங்கி வரத் தொடங்கினார் வாப்பா. அப்படி அவர் வாங்கி வந்த படங்களில் காந்திஜி, மௌலானா அபுல்கலாம் ஆஸாத், டாக்டர் கிச்லு, ஜவஹர்லால் நேரு, மௌலானா முகம்மதலி, சவுகத் அலி போன்ற தலைவர்களின் ஆழகான படங்கள் இருந்தன. பஷீர் அவற்றையெல்லாம் சுவரில் ஒட்டிவைப்பார். அதற்கும் மேல் சுதந்தரப் போராட்டத்தைப் பற்றிய சூடான செய்திகளைத் தாங்கியவாறு பத்திரிகைகளும் வந்து சேரும். அந்தச் செய்திகளை ஊர்க்காரர்களிடம் பஷீர்தான் படித்துக்காட்டுவார். ஔசேப்பு மாப்பிளாவும் கேசவன் நாயரும் மற்றும் சில ஊர்க்காரர்களும்தான் பஷீருக்குப் பத்திரிகைகளைக் கொண்டுவந்து கொடுத்தார்கள். காலையிலேயே கருப்பு டீயைக் குடித்துவிட்டு வெற்றிலைப்போட்டு துப்பிக்கொண்டே வந்து அமர்வார்கள் - பஷீர் உரத்த குரலில் பத்திரிகை படிப்பதைக் கேட்பதற்காகவே. பஷீரைத் தவிர இன்னுமொருவரும் கூட அங்கே பத்திரிகையைப் படித்துச் செய்திகளைச் சொல்பவராக இருந்தார். அவர்தான் கே.ஆர். நாராயணன் (நமது முன்னாள் குடியரசுத் தலைவர்). அப்போது கே.ஆர். நாராயணன் ஏராளமான பத்திரிகைகளுக்கு பிராந்திய செய்தி நிருபராக இருந்தார்.

அப்போதெல்லாம் பஷீர் கதர் துணிகளை மட்டும்தான் அணிந்திருப்பார். அதனால், ''உன்னோட காந்திக்கு எங்கேர்ந்துப்பா இந்தச் சாக்கைப்போல் முண்டு(வேட்டி) கெடச்சிது?'' என்று கேட்டார் உம்மா. அதேபோல் பஷீர் படித்த ஆங்கிலப் பள்ளிக்கூடத்தின் தலைமையாசிரியரும், ''இந்தக் கதர்துணியைத்தான் உன் வாப்பாவும் அணிஞ்கிருக்காராடா?'' என்று கேட்டார். அதன்பின் வைக்கம் கோயில் பிரவேச சத்தியாகிரக ஆசிரமத்துக்கு பஷீர் தினசரிவரத் தொடங்கினார். காலையில் வெகு சீக்கிரத்திலேயே வீட்டிலிருந்து புறப்படுவார். ஐந்து மைல் தூரமும் கால்நடைதான். இருந்தாலும் ஆசிரமத்துக்குள் நுழைந்த பிறகுதான் பள்ளிக்கூடத்துக்குப் போவார். அதற்குள் வகுப்பில் நுழைவதற்கான மணி அடித்துவிட்டிருக்கும். சத்தியாகிரகிகளின் போராட்டமும் ஆவேசமும் நாடி நரம்புகளில் சூடுபிடிக்கும் நேரத்தில்தான் பள்ளி வகுப்பைப் பற்றி நினைவுக்கு வரும்.

போலீஸாரும் மேல்தட்டு வர்க்கத்தினரும் சேர்ந்து போராட்டக் காரர்களை அடித்து உதைப்பதை பஷீர் நேரிலேயே கண்டார். கண்ணில் சுண்ணாம்பைத் தேய்ப்பது, அடிபட்டு கீழே விழுபவர் களின் மேல் சிறுநீர் கழிப்பது, கருங்கற்களால் அவர்களின் பற்களை அடித்து உடைப்பது - இவை எல்லாம்தான் மேல்ஜாதி யினரின் கொடூரமான தண்டனை வகையாகும். அதே நேரத்தில் தாழ்த்தப்பட்டவர்களுக்கும், 'கோயில் பிரவேசம்' அனுபதிக்க வேண்டும் என்னும் கோரிக்கையுடன் போராடுபவர்களில் பெரும்பாலானவர்களும் அதே மேல்தட்டு வர்க்கத்தைச் சேர்ந்த நல்ல மனிதர்கள்தான். சத்தியாகிரகப் பந்தலில் ஈ.வெ.ராமசாமி நாயக்கரும், டி.கே.மாதவன், கே.பி.கேசவமேனன் போன்ற தலைவர்களையும் பஷீர் பார்த்ததுண்டு. இவர்களுக்கும் மேலாக வைக்கத்தைச் சேர்ந்த இண்டன் துருத்தி குடும்பத்தின் நம்பூதிரி களும் அந்தப் போராட்டமெனும் தீக்காளவாயிலில் இருந் தார்கள்.

இவ்வாறு சத்தியாகிரக ஆசிரமத்திலிருந்து நேரம் கழித்து வரும் பஷீரை உயர்நிலைப் பள்ளி தலைமையாசிரியர் வெங்கடேஸ்வர அய்யர் தடுத்து நிறுத்தினார். அதோடு மட்டுமல்ல, ''நீ இவ்வளவு நேரம் எங்கே போய்இருந்தே?'' என்று கேட்கவும் செய்தார். பஷீர் அதற்குப் பொய் சொல்லவில்லை. அதனால் அவர் உடனே அடுத்த கேள்வியாக, ''உன் வாப்பாவாடா ஆசிரமத்தில் இருக் கார்?'' என்று கேட்டுவிட்டு சக்கைப்போடு போட்டார். உதையை வாங்கிக்கொண்டு வகுப்புக்குப் போகும்போது ''இனி நீ சத்தியாகிரக ஆசிரமத்துக்குப் போனாய் என்று தெரிந்தாலே போதும், உன்னை பள்ளிக்கூடத்தில் இருந்தே வெளியேற்றி விடுவேன்'' என்று முதுகிலும் ஓர் அடி அடித்து விரட்டினார். ஆனால், அதற்கெல்லாம் பஷீர் மசியவில்லை. எல்லா நாள்களி/ லும் அவர் ஆசிரமத்துக்குச் சென்றுகொண்டுதான் இருந்தார். கதர் ஆடைகளையும் உதறித்தள்ளவில்லை. மேலும், தன் உம்மா/ விடம், ''நான் ஒருவேளை செத்துப்போனால் என்னை இந்தக் கதரினால் போர்த்தித்தான் அடக்கம் செய்யணும்'' என்றும் கூறினார்.

அவ்வாறு சுதந்தரப் போராட்டத்தின் தீவிரம் மோலாங்கி இருந்த நேரம் அது. சட்ட மறுப்பு இயக்கம் நாடெங்கும் நடைபெற்றுக் கொண்டிருந்த காலக்கட்டம்தான் அவரது இளமைக் காலமும் கூட. குழப்பமும் பழிபாவமும் உள்ள வெளியுலகத்தின் கடும்

வெயிலுக்கு கொஞ்சம் அமைதியளித்தது புத்தகங்கள்தான். சமுதாய விலங்கை உடைத்துக்கொண்டு வாப்பா தன் மகனை மலையாளமும் ஆங்கிலமும் இந்தியும் கற்றுக் கொள்ள அனுப்பினாரல்லவா... அப்படி 'காஃபரின் மொழி'யைக் கற்ற பஷீர் மேல்படிப்புக்கும் சென்றார். ஆனால் வீட்டில் உள்ள நிலைமையோ மிகவும் இரக்கம் கொள்ளத்தக்கதாக இருந்தது. படிப்பதற்கும் சத்தியாகிரக ஆசிரமத்துக்குச் செல்வதற்குமாக இருந்த பஷீரை வீட்டின் ஏழைமை மிகவும் நிலைகுலையச் செய்தது. அதனால், அவர் பள்ளியில் மதிய உணவாகத் தண்ணீரை மட்டும் குடித்துத்தான் வயிற்றை நிரப்பினார்.

பிள்ளைகளின் படிப்பும் வீட்டுச் செலவும் கழுத்தைப் பிடிக்கும் அளவில் கடனும் சேர்ந்து வாப்பாவை மிகவும் துன்பத்துக்கும் இயலாமைக்கும் தள்ளின. அதனால் அவரை ஒரு நேசமிக்க தந்தையெனும் தகுதியிலிருந்து வழி மாற்றியது. ஒரு ரம்ஜான் நோன்பின்போது மாலை நேரத்தில் வாப்பா, தன் அன்பு மகன் பஷீரை அடித்துவிட்டார். வயலில் அறுவடை செய்து அடித்து காய வைத்திருந்த நெல்லை, தோணியில் கொண்டு வருமாறு பஷீரிடம் கூறியிருந்தார். ஆனால் பஷீர் நெல்லைக் கொண்டு வராமல் உழப்பினார். இதுதான் நல்ல நேரம் என நினைத்த தோணிக்காரர்கள் நெல்லை வழியிலேயே விற்கத் தொடங்கி விட்டார்கள். சாப்பிடுவதற்கு எதுவுமில்லாமல் பட்டினி கிடந்த சமயத்தில் கடனாகக் கிடைத்த நெல்லையும் பஷீர் இப்படி விரயமாகியதால், மாலையில் வாப்பா வீட்டுக்கு வரும்போது மிகவும் துக்கத்துடனும் கோபத்துடனும்தான் வந்து சேர்ந்தார். வந்த சுவடு மாறாமல் பஷீரின் கன்னத்தில் ஓங்கி அறைந்தார். மீண்டும் மீண்டும் உதைத்தார். பிள்ளை அடிபடுவதைத் தடுக்க வந்த உம்மாவுக்கும் உதை விழுந்தது. அடுக்களையிலுள்ள பாத்திரங்களையெல்லாம் தூக்கிப்போட்டு உடைத்தார். பஷீரின் இரண்டு சகோதரிகளும் உரத்த குரலில் அழுதார்கள். அதன்பின், சிறிது நேரத்துக்குள் அமைதி ஏற்பட்டது. இருளில் அமர்ந்திருந்த பஷீர் சிறிது நேரம் அழுதார். தன்னை ஆசுவாசப்படுத்தவோ சமாதானப்படுத்தவோ யாருமே இல்லை என்று அவருக்குத் தோன்றியபோது அந்தச் சங்கடத்தை பஷீரால் சகித்துக்கொள்ள முடியவில்லை. அந்த நேரத்தில்தான் வாப்பாவும், ''போடா போ, நீ ஊரைச் சுற்றி வந்தே உன் படிப்பை படிச்சுக்கோ...'' என்று பெருத்த குரலில் கூச்சலிட்டார். இது பஷீரை மௌனமாக் கியது. தன் இளமைக்காலத்தின் யதார்த்தங்களுக்குள் தன்னையறி

யாமலேயே திரும்பிப் பார்த்தார்.... சத்தியாகிரக ஆசிரமத்துக்குப் போனால் வகுப்பிலிருந்து டிஸ்மிஸ் செய்துவிடுவேன் என்னும் தலைமையாசிரியரின் பயமுறுத்தலும் உதையும் ஒருபக்கம். வீட்டிலுள்ள ஏழ்மையினால் தனக்குக் கீழேயுள்ள சகோதரர் களின் படிப்பு பாதியிலேயே நின்றுவிடுமோ என்ற இயலாமை மறுபக்கம். பதில் கிடைக்காத சில கேள்விகளுக்கு நடுவே இளம் பருவத்துத் தோழியான சுஹாராவும் ஒருத்தி.

இப்படிப்பட்ட குழப்பமான நிமிடங்களைக் கடந்து செல்லும் போது பஷீர் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். அதுதான், ஊரை விட்டுச் செல்வது என்பது. அதன்பின் அவர் வேறு எதையும் யோசிக்கவில்லை. அந்த இரவே தன் தாயிடம் ஒரு டம்ளர் தண்ணீரை மட்டும் வாங்கிக் குடித்துவிட்டு, வீட்டை ஒரு முறை திரும்பிப் பார்த்துவிட்டு இருளில் நடக்கத் தொடங்கினார். போவதற்கு முன் தன்னுடைய இளம் பருவத்துத் தோழியை ஒரு முறை பார்க்க வேண்டும் போல் தோன்றியது.

''வழக்கமாக அமரக்கூடிய மாமரத்தின் கீழே இருளில் தனிமை யில் நின்றேன். தூரத்தில் சுஹாராவின் அந்த இனிமையான குரல் ஒலித்தது. மண்ணெண்ணெய் விளக்கின் முன்னால் அமர்ந்து அவள் குரானைப் பாராயணம் செய்துகொண்டிருந்தாள். இடையே அவள் தன் முகத்தை நிமிர்த்தி மாமரம் நிற்குமிடத்தை நோக்கினாள். என்னவோ கேட்கவேண்டும் என்பதுபோல கண்கள் அசைவற்றிருந்தன... கொஞ்சம் நேரம் அதேபோல் இருந்தவள் மீண்டும் தன் படிப்பைத் தொடர்ந்தாள்.

''சுஹாரா' - இது மஜீத்தின் அழைப்பு. உதட்டைக் குவித்து இதயத்திலிருந்து அது வந்தது. இன்னும் உரத்த குரலில் அழைக்க வேண்டுமென்று தோன்றியது. தன் இறுதிப்பயணத்தைச் சொல்ல வேண்டுமென்று. வேண்டாம்..'' இளம் பருவத்துத் தோழியில் வரும் அந்த மஜீத் கதாபாத்திரம் பஷீர் அல்லவா!

## மூன்று

வைக்கம் காயல் கரையோரம் பஷீர் போய் நின்றார். நல்ல இருள். பயணிகள் யாரு மில்லை. இருந்தாலும் படகு ஒன்று வந்தது. அதில் ஏறி எர்ணாகுளத்தை அடைந்தார். இடுப்பில் அணிந்திருந்த வேட்டியும் மேல் சட்டையும் மட்டும்தான் அவரிடம் அப்போ தைக்கு இருந்தன. எர்ணாகுளம் படகுத்துறை யில் இறங்கி நடந்தார். இடப்பள்ளியை அடைந்தார். அங்குள்ள புகைவண்டி நிலையத்துக்குச் சென்றபோதுதான் வண்டி வருவதற்குச் சிறிது நேரமாகும் என்று தெரிந்தது. எங்கே போவது?

பிறந்த ஊரும் வீடும் தன்னை ஒதுக்கி விட்டது. வெளியுலகில் எங்கே செல்வது என்னும் உறுதியுமில்லை. அப்போதுதான் காந்திஜியைத் தொட்டுப் பார்த்ததன் நினைவு மனத்துக்குள் வந்தது. 'ஃபீலிங் டச்'. அதோடு யாருக்கும் சுதந்தரமில்லாத அந்தக் கால கட்டத்தின் தீப்பொறிகளும் மனத்துக்குள் வந்து விழுந்து பற்றின. வாப்பா அடித்ததும், உம்மா அழுததும், சுஹாராவைப் பற்றிய நினைவுகளும் அவருள் புகுந்தன. ஆமாம், அவை சமூக நிலையின் எதிரொலிகள்தான். வாழ்க்கையின் வெப்பத்தன்மை இழக்கப் படும் இந்த அடிமை பாரதத்தில் யாருக்கும் எங்கேயும் விமோசனம் இல்லை, அமைதி

யில்லை. அதனால்தான் கோழிக்கோட்டுக்குப் போகலாம் என்றோரு தீர்மானத்தை பஷீர் எடுத்தார்.

கோழிக்கோடு அப்போது சுதந்தரப் போராட்டத்தின் தீக்காளவாயாக மாறிவிட்டிருந்தது. பத்திரிகைகளின் மூலம் இதைப் படித்துத் தெரிந்துகொண்ட அந்த நிமிடம் முதல் அந்த அலை கடலிலுள்ள ஒரு துளியாக மாறுவதற்குத்தான் பஷீர் காத்துக் கொண்டிருந்தார். இப்போது அதற்கான சந்தர்ப்பமும் கூடி வந்துவிட்டது. இனிமேல் வேறு எதைப்பற்றியும் சிந்திக்க வேண்டாம். ஆனால், கோழிக்கோட்டுக்குப் போவதற்கான புகைவண்டி வருவதற்கு இன்னும் வெகு நேரமிருக்கிறது. ரயில்வே ஸ்டேஷனில் பிச்சைக்காரர்களும் உதவியற்றவர்களும் தரையில் படுத்திருக்கிறார்கள். பஷீரும் அவர்களோடு சேர்ந்து படுத்துக்கொண்டார். அப்போது ஒரு போலீஸ்காரன் பஷீரின் வயிற்றில் லத்தியினால் தட்டியெழுப்பி முகத்துக்கு அருகில் விளக்கை கொண்டு வந்து அவருடைய முகத்தைப் பார்த்துவிட்டு ''நீ எங்கேடா போகப்போறே?'' என்று கேட்டான்.

அதற்குப் பஷீர், ''ஷோரனூருக்குப் போகணும்'' என்றார்.

''எதற்கு?''

''அங்கே எங்க மாமனுக்கு டீக்கடை இருக்குதுங்க...''

போலீஸ்காரன் அதற்குமேல் அவரை எதுவும் கேட்கவில்லை. அவர்கள் ஒரு திருடனைத் தேடி அலைந்து கொண்டிருந்தார்கள்.

பஷீர் ஷோரனூர் வரைக்கும் டிக்கெட் வாங்கிக்கொண்டு, அங்கே இறங்கி பட்டாம்பி வரையில் நடந்தார். அதற்குமேல் பயணம் செய்ய டிக்கெட்டுக்கு காசு இல்லை. இருந்தாலும் திருட்டுத்தனமாக வண்டியேறி கோழிக்கோட்டுக்குப் போய்ச் சேர்நதார். இந்தப் பயணம் முடியும் வரையில் பசியை அடக்கிக்கொண்டேதான் சென்றார் பஷீர். வீட்டை விட்டு வெளியேறியபோது கூட ஒரே ஒரு டம்பளர் தண்ணீர் மட்டும் தான் குடித்திருந்தார். அதன்பின் தன்னிடமிருந்த கைகாசுக்கு ஷோரனூர் வரையில் டிக்கெட் எடுத்தார். பஷீருக்கு இப்படி பட்டினி கிடப்பது என்பது புதிய அனுபவமொன்றுமில்லையே? அதனால்தான், தண்ணீரை மட்டும் குடித்துக்கொண்டு ஒருநாள் முழுவதும் நடந்தார்.

கோழிக்கோட்டை அடைந்ததும் முகம்மது அப்துல் ரஹ்மான் சாஹேபையும் இ.மொய்து மௌலியையும் பார்ப்பதற்குத் தீர்மானித்திருந்தார். அதன்பின், வைக்கத்தைச் சேர்ந்த செய்து முகம்மது என்றொருவர்கூட கோழிக்கோட்டுக்கு வந்திருப்பது தெரிந்தது. ஆனால், கோழிக்கோட்டுக்குச் சென்றபின்தான் செய்து முகம்மது பெல்லாரி சிறையில் இருக்கிறார் என்பது தெரிந்தது.

பஷீர் நேராக 'அல்-அமீன்' பத்திரிகை அலுவலகத்துக்குச் சென்றார். முகம்மது அப்துல் ரஹ்மான் சாஹேபைப் பார்த்தார். தன்னுடைய நிலைமை முழுவதையும் சொல்லி அப்துல் ரஹ்மானைக் கேட்கச் செய்தார் பஷீர். தியாகம் நிறைந்ததான அந்த அரசியல் வரலாற்றின் வனப்புமிக்க செயல்பாட்டை காணிக்கையாக்கிய அந்த தேசியத் தலைவர், பஷீர் கதை முழுவதையும் பொறுமையாகக்கேட்டார். அந்த ஈரம் நிறைந்த மனத்திலிருந்து முரண்பாடற்ற தீப்பிழம்பு.

''பஷீர் உங்களுக்கு இளம் வயது. வீட்டு நிலையைவிட அரசியல் வாழ்க்கை நிலை மிகவும் வித்தியாசமானதாகும். இங்கேயே தங்குங்கள் எல்லாம் சரியாகிவிடும்...''

அவ்வாறுதான் 'அல்-அமீன்' லாட்ஜில் பஷீர் தங்கினார். அங்கிருந்தே செய்து முகம்மது இருந்த பெல்லாரி சிறைக்குக் கடிதம் எழுதினார்.

''...என் எல்லாவற்றையும் பாரதமாதாவின் பாதங்களில் அர்ப்பணித்துக் கொள்ள உறுதி கொண்டிருக்கிறேன். அடிமைச் சங்கிலியை உடைத்தெறிவதற்கு என்னுடைய சர்வசக்தியையும் நான் தானம் செய்கிறேன். இப்போதே கைதாவதற்கும் நான் தயாராக இருக்கிறேன்.''

அதற்கு செய்து முகம்மது, ''இன்னும் சில நாள்கள்தான் எனக்கும் உள்ளன. விரைவிலேயே நான் விடுதலையாவேன். அதனால், நாம் நேரில் கலந்து பேசிய பின் காங்கிரசில் சேர்ந்தால் போதும்.'' என்று எழுதினார்.

இந்த செய்து முகம்மது 'அல்-அமீன்' பத்திரிகையின் சக ஆசிரியராகவும், சுதந்தரப்போராட்டத்தில் அப்துல் ரஹ்மான் சாகேபின் முக்கிய சீடருமாக இருந்தார். ஒட்டப்பாலத்தில்

மொய்து மௌலவியோடு சேர்ந்து ஆமு சூப்பிரண்டெண்டின் கொடூரமான சித்திரவதையை அனுபவித்தார். ஆனால் செய்து முகம்மது சிறையிலிருந்து விடுதலையாகும் வரையில் காத்திருப் பதற்கு பஷீருக்கு பெறுமை இல்லாமலிருந்தது... முடியாது, இனிமேலும் தாமதிக்க முடியாது. சுதந்தர பாரதத்துக்குத் தேவை யான போராட்டத்தை நடந்த இனியும் காலம் கடத்தக்கூடாது. இதற்கு இன்னுமொரு காரணமும் இருந்தது. தேசபக்தர்கள் ஆனைவரும் சுதந்தரத்துக்காக அடியுதை பட்டு பலவித இன்னல் களுடன் போராடுகிறார்கள். இந்தப் போராட்டத்தில் தன் கிராமத்திலுள்ள முஸ்லிம்கள் எழுச்சியுடன் முன்னுக்கு வரவில்லை. மொய்து மௌலவி, அப்துல் ரஹ்மான் சாகேப், செய்து முகமது போன்ற கோழிக்கோட்டைத் தலைமையிட மாகக் கொண்ட அநேக முஸ்லிம்கள் தேசிய நீரோட்டத்துக்கு வந்துள்ளார்கள். ஆனால், இவர்களில் வைக்கத்திலிருந்து யாரும் அதிமில்லை. முதலில் இந்தக் குறையைப் போக்க வேண்டும். அதனால் பஷீர் தனக்கான பங்கைச் செலுத்துவதற்குத் தீர்மானித் தார்.

அவ்வாறு தீர்மானித்திருக்கும் போதுதான், ஒருநாள் அல்-அமீன் லாட்ஜுக்கு பஷீரின் வாப்பா நுழைந்தார். தன் மகன் ஊரைவிட்டு ஓடிவிட்டதால் துயரமுற்றவராக இருந்த அந்த வாப்பாவின் மனம் பச்சாதாபத்தால் நிறைந்து இருந்தது. தான் சொன்ன வேலையைச் செய்யாததால் மகனை பல சமயங்களில் அவர் அடித்ததுண்டு... அன்றைய கோபமும் மிகவும் தலைக்கேறி விட்டது உண்மைதான்.. தன் மகனை எங்கெல்லாமோ தேடி யலைந்தபோது, கடைசியில் கோழிக்கோட்டில் இருக்கிறான் என்பதை அறிந்தார் அந்தத் தந்தை. மகன் சுதந்தரப்போராட்டத் தில் எப்படியும் பங்கு கொள்வார் என்னும் உறுதி இருந்தமையால் தான் 'அல்-அமீன்' அலுவலகத்தை அவர் அடைந்தார். பஷீர் தன் தந்தை மேல் எவ்வித வெறுப்பையும் காட்டவில்லை. வீட்டின் நிலைமையையும், பட்டினி கிடந்து அனுபவித்த வாழ்க்கையை யும் உணர்ந்தவனான தனக்கு வாப்பாவின் அடியுதை பெரிய தொரு பிரச்னையே இல்லையென்று கூறினார். ஆனால் அந்த வாப்பாவோ தன் மகனை அப்படியும் வீட்டுக்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்னும் எண்ணத்தில் வந்திருந்தார். உம்மா வும் உறங்காமல் காத்துக் கொண்டிருக்கிறாராம். மூத்த மகனல் லவா. வாப்பாவின் காலத்துக்குப்பின் குடும்பத்தைப் பார்க்க வேண்டியவனாயிற்றே!

'மகனே, நீ கண்டிப்பாகத் திரும்பி வந்துவிடு. உன்னை ஒரு முறையாவது நான் பார்க்கணும்' என்னும் உம்மாவின் துக்கத்தை வாப்பாவின் மூலம் பஷீர் அறிந்தார். ஆனால் அவருடைய கால்சுவடு என்வோ முன்னோக்கிதான் இருந்தது. செய்து முகம்மதுவின் கடிதத்தைக் காட்டினார். பின்பு வாப்பாவிடம்:

''வாப்பா நான் காங்கிரசில் சேரப்போவதில்லை. பள்ளிக்குப் போகப்போவதில்லை. நான் இங்கே ஒரு வேலைக்காக அலைந்து கொண்டிருகிறேன். எப்படியும் சீக்கிரம் எனக்கொரு வேலை கிடைச்சிடும்'' என்று கூறினார்.

இந்தச் சமாதானத்துக்கு வாப்பா மசியவில்லை. பஷீரை விட்டுப் போவதற்கும் துணியவில்லை. உம்மாவிடம் என்ன சமாதானம் கூறுவது? கடைசியில் பஷீர் வாப்பாவைச் சமாதானப்படுத்தி தான் அனுப்பி வைத்தார்.

இதற்கிடையே ஒரு சொற்பொழிவு மேடையில் வைத்து அப்துல் ரஹ்மான் சாகேபை போலீஸ் கைது செய்தது. அவருடைய கழுத்தில் லத்திக்கம்புகளைச் சேர்த்துப் பிடித்து நெரித்தார்கள். இந்த நிகழ்ச்சி உப்புச் சத்தியாகிரகத்துக்கு முன்பாக நடந்த சம்மேளனத்தில்தான் நிகழ்ந்தது. உணர்விழந்து கீழே விழுந்த அப்துல் ரஹ்மான் சாகேபை கைது செய்து சிறையில் அடைத் தார்கள். இது காங்கிரஸ் செயல்வீரர்களுகிடையே எதிர்ப் பெனும் புயலை உருவாக்கியது. பஷீருக்கும் என்னவென்று சொல்ல முடியாத கோபம் மூண்டது.

ஒருநாள் அல்-அமீன் லாட்ஜிலிருந்து நேராக காங்கிரஸ் அலுவலகத்துக்குச் சென்றார். அப்போதைக்கு அவருடைய சிந்தனை, காங்கிரஸ் நடவடிக்கைகளில் பங்கு கொள்ள வேண்டு மெனவும் போராட வேண்டும் எனவுமே இருந்தது. அல்-அமீன் பத்திரிகை அலுவலகத்துக்கு வரக்கூடிய காங்கிரஸ் செயல்வீரர் களுடன் அவருக்குப் பழக்கமும் ஏற்பட்டிருந்தது. அதனால் அவர்களையும் எதிர்நோக்கிதான் அவர் அங்கே சென்றார். ஆனால் பஷீரின் பெரிய காலர்களையுடைய சட்டையையும், மேல்நோக்கி முறுக்கிவிடப்பட்டுள்ள மீசையையும், கம்பீரம் குடிகொண்டு துடிக்கும் முகத்தோற்றத்தையும் கண்டவுடன், தங்கள் அலுவலகத்துக்கு வந்துள்ளவர் சி.ஐ.டி. அதிகாரிதான் என்று அங்குள்ளவர்கள் கருதினார்கள். இப்படி அவர்கள் கருதுவதற்கு இன்னுமொரு காரணமுமுண்டு. தன் கையிலிருந்த

டைரியை மேஜைமேல் வைத்துவிட்டு பஷீர் சிறுநீர் கழிப்பதற் காகச் சென்றபோது அங்கிருந்தவர்கள் அந்த டைரியைப் புரட்டிப் பார்த்தார்கள். அதில் ஆங்கிலம், இந்தி, அரபி, மலையாளம் என பல மொழிகளில் என்னென்னவெல்லாமோ பல குறிப்புகள் எழுதப்பட்டிருந்தன. வெறுமனே ஒரு பொழுதுபோக்குக்காக பஷீரால் எழுதப்பட்டிருந்த அக்குறிப்புகளை அந்த காங்கிரஸ் அலுவலக செயலாளர் கவனமாகப் படித்தார். உண்மையில் அவற்றில் என்னவெல்லாம் எழுதப்பட்டுள்ளன என்று புரிய வில்லை என்றாலும் ஒட்டுமொத்தத்தில் பஷீரை அவர் சந்தேகித்தார். செய்து முகமதுவின் கடிதத்தைக்காண்பித்தும் கூட அவருக்குச் சந்தேகம் தீர்ந்தபாடில்லை. பஷீரின் தோற்றத்தையும் பார்வையையும் பார்த்துக்கொண்டே இருந்தார்.

இதற்கிடையில்தான் சுவரில் தொங்கிக்கொண்டிருந்த போட்டோ ஒன்று பஷீரின் கவனத்தில் பட்டது. ஃபெல்ட் ஹாட்டை சாய் வாகப் போட்டுக்கொண்டு, பெரும் கலர்களைஉடைய வெள்ளைச் சட்டையை அணிந்துகொண்டு, மேல் நோக்கி முறுக்கி விடப் பட்ட மீசையும் கம்பீரமான முகத்தோற்றமும் உடைய அந்த ஆளின் புகைப்படம் பஷீரை மிகவும் ஈர்த்தது. ஒரு வெள்ளைத் துரையின் வேடத்திலிருந்து அந்தத் தலைவர் யாரென்று செயலாளரிடம் கேட்டார்:

'பகத்சிங்!' என பதில் வந்தது.

அந்தப் பெயரைக் கேட்டவுடன் என்னவென்று சொல்ல முடியாத அளவுக்கு பஷீருக்கு ஆனந்தம் உண்டாயிற்று. அந்தக் காலத்தில் பகத்சிங் இளைஞர்களின் வீர தீர பராக்கிரமசாலியாக இருந்தார். அவருடன் ராஜ்குரு, சுகதேவ் என்பவர்களும் இளைஞர்களின் மனத்தில் குடியேறியிருந்தார்கள். இவர்களெல்லாம் சுதந்தரப் போராட்ட நாள்களில் மின்னிக்கொண்டிருந்த நட்சத்திரங்கள். இந்த வீரத் தலைவர்களைப் பற்றியெல்லாம் தான் ஏராளமாகப் படித்திருந்ததை பஷீர் நினைத்துப் பார்த்தார். அசெம்பிளி ஹாலில் குண்டு எறிந்ததையும், வைஸ்ராய் ஏறிய புகைவண்டியைத் தகர்ப்பதற்கு முயற்சித்ததையும் எல்லாம்...

''பகத்சிங்கின் முகத்தோற்றம் உங்களுக்கு உண்டு. உங்கள் மீசையும் சட்டையின் காலரும் அதேபோலத்தான் இருக்கின்றன. ஒரு ஃபெல்ட் ஹாட்டை மட்டும் போட்டுக்கொண்டால்...'' என்ற செயலாளரிடம் பஷீர் எதுவும் பேசவில்லை.

செயலாளர் மீண்டும் பஷீரிடம், ''உண்மையில் நீங்கள் ஒரு முஸ்லிம்தானா?'' என்று கேட்டவுடன், பஷீர் தன்னுடைய சொந்த வாழ்க்கை வரலாற்றை மிகவும் சுருக்கமாகச் சொல்லி கேட்கவைத்தார். அவற்றையெல்லாம் கேட்டுக்கொண்டு நின்ற செயலாளருக்கு பஷீரின் மேல் தோழமையுணர்வு உண்டாயிற்று.

''மிஸ்டர் பஷீர், நாளைக்கு கடற்கரையில் உப்புச்சத்தியாகிரகம் நடைபெறப் போகிறது. நீங்களும் போகிறீர்களா?''

''தயார்.''

அன்றிரவு பஷீரால் உறங்க முடியவில்லை. விடியும்போது சுதந்தரப்போராட்டத்தில் தானும் பங்குகொள்ளப் போகிறோம் என்னும் ஆனந்தமும் ஆவேசமும் அவருள் கிளர்ந்தன. அன்று ஞாயிற்றுக் கிழமையாகவும் இருந்தது. போராட்ட வீரர்கள் காங்கிரஸ் கமிட்டி அலுவலகத்தை அடைந்தார்கள். அவர்கள் யாரும் அதுவரையில் எதுவும் சாப்பிட்டிருக்கவில்லை. உறக்கக் களைப்பும் பசித்த வயிறுமாக பஷீரும் அவர்களோடு சேர்ந்து கொண்டார். உப்புக் காய்ச்சுவதற்கான சட்டியுடனும் மூவர்ணக் கொடியுடனும் கடற்கரையை நோக்கிப் போவதற்காக இருக்கும் போது போலீஸ் வந்துவிட்டது. இதை யாரும் எதிர்பார்க்க வில்லை. கமிட்டி அலுவலத்துக்கு வெளியே நின்றவர்கள் திசைக்கு ஒருவராகப் பிரிந்து சென்றுவிட்டார்கள். உள்ளே இருந்த பதினொரு பேர்களை மட்டும் போலீஸ் இன்ஸ்பெக்டர் கைது செய்தார். அந்தக்கூட்டத்தில் பஷீரும் இருந்தார்.

இந்தப் பதினொரு பேர்களையும் போலீஸ் ஸ்டேஸனுக்குக் கொண்டு சென்றார்கள். அவர்களுக்குப் பின்னால், பெரும் மக்கள் வெள்ளமும் சென்றன. வாளையும் பயனெட்டையும் கைவிலங்குகளையும் ஸ்டேஷன் சுவர்களில் கண்டவுடன் பஷீர் சிறிது நடுங்கினார். பஷீர் அப்போதுதான் போலீஸ் ஸ்டேஷனை முதன்முதலாகக் காண்கிறார். ஆக மொத்தத்தில் அவர் பயந்தே விட்டார்.

சத்யாகிரகிகளை வராந்தாவில் வரிசையாக நிறுத்தினார்கள். பின்பு இன்ஸ்பெக்டர் உள்ளே போனார். ஆஜானுபாகுவான ஒரு போலீஸ்காரன் வெளியே வந்தான். அவன் சத்யாகிரகிகள் ஒவ்வொருவரையும் மாறி மாறி நோக்கினார். பின்பு, இரையைக் கண்ட சிங்கத்தைப் போல் உறுமினான்.

பஷீர் அவனுடைய நம்பரை மட்டும் நோக்கினார். -பி.சி.270.

அப்புறம் தயங்கவில்லை. அவன் ஒவ்வொருத்தராக உள்ளே அழைத்தான். அப்புறமென்ன் அடி, உதை, கூச்சல்தான். இதயம் நெகிழும்படியான அழுகை வெளியில் கேட்டுக்கொண்டிருந்தது. இடையிடையே ஒவ்வொருத்தரின் பெயரையும் ஊரையும் பற்றி விசாரிப்பதும் கேட்டுக்கொண்டிருந்தது. கண்ணூர், தலைச்சேரி, பொன்னானி என்று பலரும் தங்களின் ஊர்ப்பெயர்களைச் சொன்னார்கள்.

பஷீரின் முறை வந்தது.

''பேரு?''

''முகம்மது பஷீர்.''

''இடம்?''

''வைக்கம்.''

''அடேய் நீ தெக்கத்திக்காரனா?'' என்றவன், பின் வெறுப்போடு ஒரு கேள்வியும் கேட்டான்: 'திருவிதாங்கூருக்கு இப்போ சுயாட்சி கிடைத்து விட்டதா என்ன?''

''இல்லை. உள்நாட்டு அரசுகளை எதிர்த்துப் போராட்டம் வேண்டாம்னு காந்திஜி சொல்லியிருக்கிறார்...''

அதைக்கேட்டதுதான் தாமதம், பஷீரின் கன்னத்தில் படபட வென்று அறைந்தான். மேலும், பிடரியைப் பிடித்துக் குனிய வைத்து அடிக்கத் தொடங்கினான். பஷீர், தன்மேல் விழும் அடிகளின் எண்ணிக்கையைக் கணக்குக் கூட்டிக்கொண்டிருந்தார். பதினேழு அடிகள் வரை எண்ணினார். அதன் பின் நினைவு தடுமாறி கீழே விழுந்தார். உடனே இரண்டு போலீஸ்காரர்கள் பஷீரின் தலையையும் கால்களையும் பிடித்து இழுத்து உள்ளே கொண்டு போய் போட்டார்கள்.

'உம்.. என்ன?' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

ஒரு போலீஸ்காரர், 'நம்பியார் வெளுத்துட்டார்' என்று கூறினான்.

'உம்...' என்ற இன்ஸ்பெக்டர் எதுவும் பேசவில்லை.

சிறிது நேரம் கழித்து முகத்தில் தண்ணீர் தெளித்து உலுக்கி எழுப்பினார்கள். சட்டையைக் கழற்றி உயரம், நிறம், அடையாளங்களைக் குறித்தார்கள். பதினொரு பேர்களையும் லாக்கப்பில் அடைத்தார்கள். அந்த லாக்கப் அறையோ முற்றிலும் சுத்தமில்லாமல் இருந்தது. அறையின் ஒரு மூலையில் சிறுநீர் நிறைந்த குடம் இருந்தது. இரும்புக் கம்பிகள் மேலே ஒளிமிகுந்த பல்ப் எரிந்தது. சிறுநீரின் சகிக்க முடியாத நாற்றத்துடன் உறங்க முடியாத வெளிச்சமும் சேர்ந்து கொண்டது. அத்தோடு மட்டுமல்ல, அன்றிரவு டிபனும் கொடுக்கவில்லை. உட்கார்ந்து கொண்டே நேரத்தைக் கழித்தார்கள்.

மறுநாள் காலையில் சத்தியாகிரகிகள் பரஸ்பரம் பார்த்துக் கொண்டார்கள். குத்துப்பட்ட முகங்கள் வீங்கி கறுத்துப்போய் இருந்தன. பலரால் நடக்கவே முடியவில்லை. கைவிலங்கிட்டு ஸ்டேஷனிலிருந்து கோர்ட்டுக்குக் கொண்டுபோகப்பட்டார்கள். கோழிக்கோடு கடைவீதி வழியாக துப்பாக்கிகளும் வாளும் ஏந்திய போலீஸ்காரர்கள்தான் அவர்களை கிரிமினல்களைப் போல அழைத்துச் சென்றார்கள். கோர்ட்டும் பதினான்கு நாள்கள் ரிமாண்ட் செய்து கோழிக்கோடு சப்ஜெயிலுக்கு அனுப்பியது. அதன்பின் மூன்று மாதம் கடுந்தண்டனை எனவும் தீர்ப்பளித்தது. ஆதனால், கோழிக்கோட்டிலிருந்து கண்ணனூர் சென்ட்ரல் ஜெயிலுக்கு அனுப்பினார்கள்.

பஷீரின் சிறைவாசத்திலேயே அதிக உதைபட்டது கோழிக்கோடு போலீஸ் லாக்கப்பில் இருந்தபோதுதான். பி.சி. 270-ன் உதை, அந்த அளவுக்கு பயங்கரமாக இருந்தது. சத்தியாகிரகிகள் பஷீரின் முதுகு முழுவதும் சுருட்டிய கை முஷ்டியின் குத்துகள் பட்டு கன்றிப்போயிருந்தன.

கண்ணனூர் சென்ட்ரல் ஜெயிலில் இ.மொய்து மௌலவி, டி.பிரகாசம், பாட்லிவாலா, கே.ஏ.கேளீயன், பி. காங்காதரன் என அறுநூறுக்கு மேற்பட்ட கைதிகள் இருந்தார்கள். எல்லோருமே சுதந்தரப்போராட்ட வீரர்கள்தான். பஷீரும் அவர்களோடு சேர்ந்து கொண்டார். ஜெயிலில் தந்த உணவுகள் மிகவும் மோசமாக இருந்தன. கஞ்சியில் விரல் அளவுக்குப் புழுக்கள். அந்தப் புழுக்களைப் பொறுக்கிப் போட்டுவிட்டுதான் கஞ்சி குடிக்க வேண்டும். இருந்தும், பஷீர் பலவகையான குறும்புகளை ஜெயிலிலும் செய்தார். ஒரு நாள் பிரமாணரைப் போல் பூணூல் போட்டுக்கொண்டு, ஒரு மொந்தையில் தண்ணீரை

நிறைத்து அதில் துளசி இலைகளைத் தூவிக்கொண்டு ஜெயில் படிக்கட்டில் நின்றார். புதிதாக சிறைக்கு வருபவர்கள் மேல் துளசித்தீர்த்தம் தெளித்து சுத்தப்படுத்துவதற்காம். இதற் கிடையே சத்தியாகிரகிகளின் தலைமுடிகளை வெட்டுவதற்காக வந்த நாவிதற்களிடமிருந்து பஷீரே அந்தப்பணியை ஏற்று முடிவெட்டவும் தொடங்கினார். ஆனால், அவரிடம் முடி வெட்டிக்கொள்ளத்தான் பலரும் தயக்கம் காட்டினார்கள். துணிந்து தலையைக்காட்டுபவர்களோ சுத்தமாக மொட்டை அடித்துக்கொள்ள வேண்டியதாயிற்று.

அந்த நேரத்தில்தான் பகத்சிங்கையும் சுகதேவையும் தூக்கி லிட்டுக்கொன்றுவிட்டார்கள் என்னும் செய்தி சிறைக்கு வந்து சேர்ந்தது. இதற்கு எதிர்ப்புக்காட்டி சத்தியாகிரகிகள் மூன்று நாள்கள் வரை உண்ணாவிரதம் இருந்தார்கள். இந்தக்காலத் தில்தான் நாட்டின் பல்வேறு பக்கங்களிலிருந்தும் மேலும் பல சத்தியாகிரகிகள் அந்தச் சிறைக்கு வந்து சேர்ந்தார்கள். அவர் களில் பகத்சிங்கின் தொண்டர்களும் ஆராதகர்களும் இருந்தார் கள். பஷீர் அவர்களுடன் நெருங்கிப் பழகினார். இதுதான் பின்னாள்களில் தீவிரவாத அரசியலோடு நெருக்கமாவதற்கு அவருக்குத் தூண்டுகோலாக இருந்தது.

காந்தி - இர்வின் ஒப்பந்தத்தின்படி, கண்ணனூர் சென்ட்ரல் ஜெயிலிலிருந்து விடுதலையான பஷீரின் மனத்துக்கு, தன்னை அடித்து உதைத்த பி.சி.207-ம் எண்ணுடைய அந்த நம்பியாரைக் கொல்ல வேண்டுமென்னும் பகைக்கொழுந்து அதிகரித்து மேலெழும்பியது. அவருடைய அப்போதைய ஒரே சிந்தனை அது மட்டுமாகத்தான் இருந்தது. அந்த நினைவிலேயே கோழிக்கோட்டுக்கு வந்து சேர்ந்தார்.

ஆனால், அவருடைய கையில் அப்போது ஆயுதமில்லை. ஒரு ரிவால்வர் கிடைத்தால்... அல் - அமீன் லாட்ஜிலிருந்து ஒரு பேனா கத்தியைக் கண்டுபிடித்து எடுத்துக்கொண்டார். அதனுடன் வெளியே வந்தார். அப்போது பாளையம் ரோட்டில் டிராஃபிக் டியூட்டியில் அந்த போலீஸ்கார நம்பியார் நிற்பதைப் பார்த்துவிட்டார். அவன் ஆறடி உயரமுள்ள பயங்கரமானவன். ஒற்றையாக எதிர்ப்பதற்கு பஷீரால் முடியாதுதான். இருந்தாலும் பேனாக்கத்தியால் அவன் மார்பில் குத்திக் கிழிப்பதற்குத் தீர்மானித்துவிட்டார். அப்போதுதான் காங்கிரஸின் சாத்வீக போராளியான அச்சுதன் தன் முன்னால் நிற்பது தெரிந்தது. பஷீர்

தயங்கினார். அச்சுதன் அவரிடம் வந்து அனைத்தையும் நேசத்துடன் கேட்டுத் தெரிந்துகொண்டார்.

அதன்பின், ''பஷீர், நீங்களா சுதந்தரப்போராட்ட வீரர்? நீங்க ஒரு உண்மையான சத்தியாகிரகிதானா? அப்படியென்றால் உங்கள் லட்சியம் போலீஸ்காரனை கொல்வது இல்லையே...'' என்று கூறியவர், மகாத்மா காந்தியின் பற்கள்போன கதையைக் கூறி கேட்கவைத்தார்.

''நீங்கள் நம்பியாரைக் கொல்வதற்கு ஆசைப்படநீங்கன்னா இங்கே இந்த சுதந்தரமற்ற பூமியில் உயிரோட வாழ்வதற்கு அருகதையுள்ள ஒரே ஒரு போலீஸ்காரன்கூட இப்போது இருக்க மாட்டான். அதனால், அவர்கள் எல்லோரும் வெள்ளைக்கார னுக்கு அடிமை வேலை செய்பவர்களாக மட்டுமே உள்ளார்கள். அவர்களைக் கொல்வதால் எந்தப் பயனுமில்லை... நீங்கள் இப்போது அமைதியாக இருங்கள்.. வீட்டுக்குப் போங்கள்... அங்கு உங்கள் அம்மாவும் அப்பாவும் காத்துக்கொண்டு இருப்பார்கள்...'' என்றெல்லாம் அறிவுரை கூறி அச்சுதன் ஒரு கதர் சால்வையை அளித்தார்; அத்துடன் வைக்கம் செல்வதற்கான ரயில் டிக்கெட்டுக்கு பணமும் கொடுத்தார்.

திராட்சைக் கொடி உருவத்தில் சித்திரவேலைப்பாடுள்ள கதர் சால்வையை மேலே போட்டுக்கொண்டு கோழிக்கோட்டி லிருந்து எர்ணாகுளத்துக்கு வந்து சேர்ந்தார் பஷீர். அங்கே முஸ்லிம் ஹாஸ்பிட்டலில் ஒருமாதம் தங்கியிருந்தார். வீட்டுக்குச் செல்வதற்கு அப்போது ஒரே வெட்கம். அத்துடன் நிராசையும் வேதனையும் தயக்கமும் கூட அவருக்குள் இருந்தன. கடைசியில் ஒரு நாள் இரவு நேரத்தில் 'போட்' வழியாக வைக்கத்தை அடைந்தார். அங்கிருந்து தலையோலைப் பறம்புக்கு நடந்தார். நான்கைந்து மைல்கள் நீண்ட நடைபயணம் விடியற்காலை மூன்று மணி இருக்காலம். முற்றத்தையடைந்து நின்றதும் 'யாரது?' என்று உம்மா கேட்டாள்.

பஷீர் வராந்தாவில் ஏறி நின்றார். உம்மா விளக்கு ஏற்றினார். எதுவுமே நேரவில்லை என்பதுபோல், 'நீ ஏதாச்சு சாப்பிட்டியா மகனே?' என்றுதான் கேட்டார். அப்போது அந்தத்தாய்.

'அம்மா' என்னும் கதையில் இந்தச் சம்பவத்தை பஷீர் கீழ்வருமாறு தொடர்கிறார்:

...நான் எதுவும் சொல்லவில்லை. நான் ஆகமொத்தத்தில் வெடித்தே விட்டேன். உலகமெல்லாம் தூக்கத்தில் கிடக்கிறது. என் உம்மா மட்டும் உறக்கமில்லாமல் உட்கார்ந்திருக்கிறார். தண்ணீரையும் கிண்டியையும் கொண்டுவந்து வைத்துவிட்டு கைகால்களை கழுவிக்கொள்ளும்படி என்னிடம் கூறினார். அதன்பின் சோற்றுப் பாத்திரத்தை நகர்த்தினார்.

வேறு எதுவும் கேட்கவில்லை.

எனக்கு ஆச்சரியம் தோன்றிற்று. 'நான் இன்னிக்கு வருவேன் என்று உங்களுக்கு எப்படி உம்மா தெரிந்தது?'

உம்மா அதற்குப் பதில் கூறுவதுபோல், 'சோற்றையும் குழம்பையும் வைத்துக்கொண்டு நான் எல்லா ராத்திரியிலும் உனக்காகக் காத்திருந்தேனே...'' என்று கூறினாள்.

மிகச் சாதாரணமான ஓர் அறிவிப்பு...

நான் வீட்டுக்குச் செல்லாமலிருந்த ஒவ்வொரு இரவிலும் உம்மா உறக்கமில்லாமல் அல்லவா என் வருகைக்காகக் காத்துக் கொண்டு இருந்துள்ளார்!

# நான்கு

வீட்டில் அதிகநாள் தங்கியிருக்க முடிய வில்லை. படிப்பும் நின்றுவிட்டது. வேறு வேலையுமில்லை. வாப்பாவும் உம்மாவும் சகோதர சகோதரிகளும் மிகவும் வறுமையில் உழலுகின்றனர். திரும்பிப் போய்விடுவது தான் நல்லது.

ஆனால், எங்கே போவது?

அப்போதுதான் கண்ணனூர் மத்திய சிறைச் சாலையில் இருக்கும்போது பழக்கப்பட்ட மட்டாஞ்சேரியைச் சேர்ந்த பி.ஏ.ஸைனுத் தீன் என்பவரைப் பற்றி நினைவுக்கு வந்தது. சுதந்தரப் போராட்ட வீரரான ஸைனுத்தீன், பஷீரை தன் சொந்த ஊரான மட்டாஞ்சேரி வருமாறு அழைத்திருந்தார். அவர் சிறையி லிருந்து புறப்படும்போது, ''ஜெயிலிலிருந்து வெளியே வந்ததும் எங்க ஊருக்கு வாங்க. நாம அங்கே சில வேலைகளையெல்லாம் செய்ய வேண்டியதிருக்கு'' என்று கூறியிருந் தார். அதனால்தான் பஷீர் கொச்சியை நோக்கிப் புறப்பட்டார்.

முப்பதுகளின் தொடக்கக்கட்டம். பஷீர் மட்டாஞ்சேரியை அடைந்தார். ஸைனுத் தீனைச் சந்தித்ததும் அவர் தன் எண்ணத்தை பஷீர் முன் வைத்தார்: ''ஒரு பத்திரிகை தொடங்கணும்'' என்று. பத்திரிகையின்

பெயர் 'உஜ்ஜீவனம்' .சகோதரர் அய்யப்பனின் ஒரு கவிதை பெயர்தான் 'உஜ்ஜீவனம்' என்பது. பத்திரிகை வேலை வேகமாக நடந்தது. இந்த இதழை தொடக்கத்திலேயே ஓர் வார இதழாகத்தான் வெளியிட்டார்கள். 16 பக்கங்கள். விலை ஒரு அணா. இரண்டாயிரம் பிரதிகள் அச்சிட்டனர். பத்திரிகையின் அதிபராவுகம் ஆசிரியராகவும் ஸைனுத்தீன் இருந்தாலும், பஷீர் தான் அவ்விதழின் பின்னணியில் முழுமையாகச் செயல்பட்டார். கே. எஸ் திவாகரன் என்ற நண்பரும் பஷீருக்குப் பின்னால் இருந்தார். அவ்வாறு அந்த 'உஜ்ஜீவனம்' இதழை நடத்திக் கொண்டிருக்கும்போதுதான் பஷீரின் உள் மனத்தில் தீவிரவாத அரசியலோடிருந்த அபரிமிதமான ஆர்வமும் ஒளிந்து கொண்டு தான் இருந்தது. அதனால், மேலும் தாமதிக்காமல் பகத்சிங் மாடல் பயங்கர இயக்கம் ஒன்றை ஆரம்பித்தார். 'காங்கிரஸை யார் எதிர்க்கிறார்களோ அவர்களைக் கொல்லுங்கள்!' அதுதான் அந்த இயக்கத்தின் செயல்பாடு. ரகசியமாக ஆயதப் பயிற்சியை யும் தொடங்கினார். கட்டாரி, வாள், ஈட்டி போன்றவைதான் அவர்களின் பயிற்சியில் பயன்பட்ட ஆயுதங்கள். அவர்களுக்குத் துணையாக சிறுவர்களின் சங்கம் ஒன்றும் உருவாக்கப்பட்டது. அதன் பெயர் 'வானர சேனை'. இந்தச் சங்கத்தில் பள்ளியில் படிக்கும் சிறுவர்கள்தான் உறுப்பினர்களாக இருந்தார்கள்.

இவர்களுக்கும் மேலே இளைஞர்களின் தீவிரவாத இயக்கம் ஒன்றும் தொடங்கப்பட்டது. பஷீர் இப்போது பகத்சிங்கைப் போன்று தனி முத்திரையில் இருந்தார். மீசை, சாய்வாக வைத்த ஃபெல்ட் தோப்பி, அரை நிஜார் இப்படி வானர சேனையின் கேப்டன் என்னும் நிலையில் மிக உயர்ந்த பதவியில் இருந்தார். எங்கே என்ன செய்ய வேண்டும் என்று கேப்டன் தீர்மானிப்பார். இந்த அணியினர் தன்னிச்சையாகப் போராட முடியாது. அதனால் எந்த விஷயம் என்றாலும் கேப்டனுடன்தான் முதலில் விவாதிக்க வேண்டும். அவர்களுக்குள் இதுவொரு எழுதப் படாத சட்டமாக இருந்தது.

முஸ்லிம், ஈழவர், நாயர் குடும்பத்தவர்களைத் தவிர சேட்டு களின் பிள்ளைகளும் கூட இந்தத் தீவிரவாத இயக்கத்தில் இணைந்தார்கள். இப்படி இருக்கும்போதுதான் மட்டாஞ்சேரி நகரத்தில் வானர சேனையினர் ஓர் ஊர்வலம் நடத்தினார்கள். ஊர்வலத்தில் சுதந்தரம், தேசபக்தி ஆகியவற்றின் பெருமையை வெளிப்படுத்துவது போன்ற கோஷங்களை முழங்கினார்கள். மூவர்ணக் கொடியுடன்தான் அந்த வானரசேனையின் ஊர்வலம்

நடைபெற்றது. இதைக்கண்டதும் எல்லோரும் அவர்களைக் கவனிக்கத் தொடங்கினார்கள். இதற்குக் காரணம், ஊர்வலத்தினர் அனைவரும் சிறுவர்களாகவே இருந்தார்கள். இப்படி இந்த ஊர்வலம் முன்னோக்கிச் செல்லும்போது எதிர்பாராத சம்பவம் ஒன்றும் நிகழ்ந்தது. ஊர்வலத்தின் முன்னால் ஒரு பொலிகாளை மதம் கொண்டு ஓடி வந்தது. பஷீர்தான் அப்போது ஊர்வலத்தின் கேப்டனாக இருந்தார். ஓடிவரும் அந்தக் காளை ஊர்வலத்துக்குள் புகுந்தால் எல்லாமே குழப்பமாகி விடும் என்று பஷீர் புரிந்துகொண்டார். உடனே தனது வலது கையினால் காளையின் கொம்பைப் பிடித்தார். அதே நேரத்தில் தனது இடது கையிலிருந்த கொடியையும் விடவில்லை. பஷீருக்கும் காளைக்குமிடையே ஒரு போராட்டமே நடந்தது. பஷீரின் உடலில் பல பகுதிகளிலும் காளையின் கொம்பினால் பல காயங்கள் ஏற்பட்டன. இதற்கிடையே வானரசேனையிலுள்ள சிறுவர்கள் அங்கும் இங்கும் ஓடி தப்பித்திருந்தார்கள். காளையுடன் நடந்த யுத்தத்தில் தரையில் விழுந்து ரத்தத்தில் குளித்திருந்த பஷீரை, மட்டாஞ்சேரியில் ஹோமியோபதி மருத்துவமனை நடத்திக் கொண்டிருந்த டாக்டர். கே.பி.தையில்தான் பிடித்துத் தூக்கினார். காங்கிரஸ் தலைவராக இருந்த டாக்டர் தையில் அதன்பின் பஷீரின் நண்பராகிவிட்டார். (டாக்டர் தையில் பின்பு இஸ்லாம் மதத்தை ஏற்றுக்கொண்டு கமால் தையில் ஆனார்.)

டாக்டர் தையில் பஷீரைத் தன் வீட்டுக்கு ஹோமியோபதி கற்றுக்கொடுக்க அழைத்துச் சென்றார். அங்கு சென்றபின்தான் பகலில் பத்திரிகை வேலையும் இரவில் ஹோமியோபதி படிப்பையும் பஷீர் மேற்கொண்டார். ஆனால், இந்தச் செயல்பாடு தீவிர நடவடிக்கைகளுக்கு ஒரு திரையாக ஆகிவிட்டது. அதனால், இரவு நேரங்களில் தீவிர செயல்களின் பணி என்பது கட்டாரி, கத்திக் கொடுவாள் முதலியவைகளின் படங்களை போஸ்டரில் வரைந்து வைப்பதோடு நின்றுவிட்டது.

''யாராவது காங்கிரஸ்காரர்களைத் தொந்தரவு செய்தால் அதன் விளைவுக்கு அவர்களே பொறுப்பு. ஜாக்கிரதை!'' என்று சுவரெட்டிகளில் எழுதும் வேலை பஷீரினுடையதாயிற்று. அத்துடன் இரவுகளில் இந்த சுவரொட்டியையும் பசையையும் ஒரு சைக்கிளில் வைத்துத் தூக்கிக்கொண்டு தன் சீடன் திவாகர

னுடன் சேர்ந்து அவற்றை ஒட்டவும் சென்றார் பஷீர். இப்படி இரவுகளில் ஒட்டப்படும் போஸ்டர்களிலுள்ள வாசம் மறுவார 'உஜ்ஜீவன'த்திலும் இருக்கும்.

'உள்ளூர் தீவிரவாதிகளின் வால் போஸ்டர்!' என்னும் வாசகம் வெண்டைக்காய் அளவு பெரிய எழுத்துகளில் 'உஜ்ஜீவனம்' பக்கங்களை நிரப்பும். இந்த 'உஜ்ஜிவனம்' இதழை சூடான வார்த்தைகளுடன் உரக்கக் கூவி விற்கச் செல்வதும் கூட இதே சுவரொட்டிகளை ஒட்டியவர்கள்தான். இந்தச் செயல்கள் யாருக்கும் தெரியவில்லை. ஆனால் இவையெல்லாம் போலீசாருக்கு மிகவும் தலைவலியாகிவிட்டன.

இதற்கிடையே வானரசேனை உறுப்பினர்களான பள்ளிக் குழந்தைகளின் தேர்வும் நெருங்கியது. அவர்கள் காங்கிரஸின் அடிமட்டத் தொண்டர்களான வானரசேனையில் இருந்ததால் அவர்கள் எதையும் சரியாகப் படிக்கவில்லை.தேர்வில் தோல்வி யடைந்து விடுவார்கள் போலிருந்தது. பொருளாதாரத்தில் சிறந்து விளங்கிய வீடுகளைச் சேர்ந்த பிள்ளைகளானதால் இந்த உறுப்பினர்களிடையே இது ஒரு சூடான பிரச்னையாகிவிட்டது. ஆனால், பஷீர் இதற்கு ஓர் உபாயத்தைக் கண்டுபிடித்தார்.

கேள்வித்தாள்களை தலைமையாசிரியர்தான் தன் அலமாரியில் பாதுகாப்புடன் வைத்திருக்கவேண்டும். தலைமையாசிரியர் ஒரு பாதிரியார். பெரியவர் இரவு எட்டு மணிக்குத்தான் சாப்பிடுவதற்காக வெளியேறுவார். அதை முடித்ததும் பத்துமணி வரைக்கும் சும்மாதான் அங்கும் இங்கும் இருப்பார். இந்தச் சமயத்தில் அலுவலகத்தில் நுழைந்து கேள்வித்தாள் களைத் திருடிவிட வேண்டும் - இதுதான் கேப்டன் பஷீரின் எதிர்ச்செயல். இத்றகாக அலுவலகத்திலுள்ள அலமாரியின் சாவியை எடுத்து வந்து ஒரு கொல்லன் மூலம் கள்ளச் சாவியையும் தயாரித்தார்.

கேப்டன் பஷீர் சொன்னதைப் போலவே சிறுவர்களும் நடந்துகொண்டார்கள். அலமாரியைத் திறந்து கேள்வித்தாளை வெளியே எடுத்தார்கள். ஆனால், அதில் ஒரு புதுப் பிரச்னை. அலமாரியைத் திறந்து பார்த்தபோது கொஞ்சம் பணமும் அதில் இருந்தது. சிறுவர்கள் அதை எடுக்கவில்லை. அதற்குக் காரணம் அதுபற்றி கேப்டனுடன் விவாதிக்க வேண்டும் அல்லவா? அதனால் பஷீரிடம் விவரம் கூறினார்கள். இந்த விஷயத்தை

யாருக்கும் தெரியாமல் கவுரவமாக விவாதிக்க கடற்கரையில் கூடினார்கள். ரகசியக் கூட்டம். அலமாரியிலுள்ள பணத்தை எடுப்பதா வேண்டாமா என்பது பற்றி வாதப்பிரதிவாதங்கள் நடந்தன. தீவிரவாதச் செயல்களுக்குப் பணம் தேவை என ஒரு பகுதியினரும், எடுக்கக்கூடாது என்று ஒரு பகுதியினரும் விவாதித்துக் கொண்டார்கள். கடைசியில் கேப்டன் பஷீர் இறுதி தீர்மானமாக 'பணத்தை எடுக்க வேண்டாம்' என்று தீர்ப்பளித்தார்.

சிறுவர்கள் கூட்டம் கலைந்துவிட்டது. விடியற்காலை இரண்டு மணிவரையில் பஷீர் கடற்கரையிலேயே தனிமையில் அமர்ந் திருந்தார். அவருக்குப் பின்னால் அவருடைய சைக்கிளும் நின்றது. பஷீர் தன் வாழ்க்கையைப் பற்றி யோசித்துக்கொண்டே அமர்ந்திருந்தார். தீவிரமான ஆழ்ந்த சிந்தனை. திடீரென்று ஒன்றிரண்டு நீர்த் திவலைகள் சரீரத்தில் வந்து விழுவதுபோல் தோன்றியது. அதை அவர் லட்சியம் செய்யவில்லை. ஆனால், மீண்டும் நீர்த்திவலைகள் அவர்மேல் விழுந்தன. திவலைகள் வந்த திசையை உற்று நோக்கினார். வெண்மை நிறத்தில் ஓர் அழகி முற்றிலும் நிர்வாண நிலையில் கடலில் முழ்கி குளித்துக் கொண்டிருந்தாள். பஷீருக்கு அப்போது கோபம்தான் வந்தது. 'எந்தவொரு கூச்சமும் இல்லாம் ஒரு பெண் நேரங்கெட்ட நேரத்தில் எவ்வித உடையுமில்லாமல் குளிக்கிறாள்; அதுவும் ஓர் அந்திய ஆடவனின் முன்னால். ஒருவேளை, அவள் தங்கள் கூட்டத்தின் ரகசியத்தைக் கண்டுபிடிப்பதற்காக வந்திருப் பாளோ?

இப்படி சிந்தித்துக் கொண்டிருக்கும்போதுதான் அந்தப் பெண் மீண்டும் பஷீரின் மேல் தண்ணீரைத் தெளித்துக் கொண்டிருந் தாள்.

க்டைசியில் பொறுமையை இழந்த பஷீர், ''ஒரு பொண்ணுக்கு மானம் மரியாதை வேணும். ஒரு அந்திய ஆடவன் உட்கார்ந் திருக்கும்போது இப்படி பிறந்தமேனிக்கு குளிக்கறது நல்ல தில்லை'' என்று கூறிவிட்டு ஏழுந்து கொண்டார். அப்போது அந்தப் பெண் பஷீரின் முகத்தை நோக்கவோ எதிர்த்துப் பேசவோ முயலவில்லை. மீண்டும் மீண்டும் தண்ணீரை விசிறிக் கொண்டுதான் இருந்தாள். பஷீருக்கு சொல்லவொண்ணாத கோபம் வந்தது. உடனே சைக்கிளைத் தள்ளிக்கொண்டு கொஞ்சம் தூரத்தில் போய் அமர்ந்தார். நன்கு குளிர்ந்த காற்று. சிரமப்பட்டு தீப்பெட்டியில் குச்சியை உரசி சிகரெட்டில் பற்ற

வைத்து இழுத்தார். அதன்பின் தான், அந்தப் பெண்ணிடம் சிலவற்றையெல்லாம் கேட்பதற்குத் தீர்மானித்தார்.

'இங்கே ஏன் வந்தாய்? தீவிரவாத இயக்கத்தைப் பற்றி ஒற்றறிய போலீசார் அனுப்பினார்களா?...'

அப்போதுதான் அவள் மீண்டும் நீரைத் தெளித்தவாறு பஷீரின் அருகில் ஓடி வந்தாள். தன்னை மிதித்துவிட்டு ஓடி விடுவாளோ என்ற நிலை வந்ததும் பஷீர் துள்ளியெழுந்தார். ஆனால், அவர் எழுந்து நின்று பார்த்தபோது இரண்டு இடுப்பிலும் கைகளை ஊன்றிக்கொண்டு அவள் அவர் முன்னால் கம்பீரமாக நிற்கிறாள்... நனைந்த அழகான ஒரு சிலையைப்போல், தலை முடியிலிருந்தும் உடம்பிலிருந்தும் தண்ணீர் சொட்டுச்சொட் டாக விழுகிறது. அப்போதுதான், பஷீர் சில கேள்விகளைக் கேட்டார். அவள் முதலில் சிருங்காரத் தோற்றமும் பின் ரௌத்ர உருவமுமாக மாறினாள். பின் அந்த நிர்வாண அழகி சைக்கிளைத் திருப்பி விட்டுவிட்டு நடந்தாள். நீர்த்திவலைகள் விழுகின்ற தலைமுடிகளின் வழியாக பஷீரை நோக்கினாள். ஏதோவொரு மெஸ்மரிஸப் பார்வை அது. சிறிது நேரம்தான் அப்படி கழிந்தது. பின் திடீரென அவள் காணாமல் போனாள்.

'நிலாவைப் பார்க்கும்போது' என்னும் கதையில் பஷீர் இந்த நிகழ்ச்சியை, 'உன் உடல் முழுவதும் குளித்துவிட்டது... அப் போதுதான் நான், என்ன நடந்தது, இப்போது அவள் எங்கே போனாள்? என்று எண்ணினேன். சூனியமான பரந்த கடல். நட்சத்திரங்கள் நிறைந்த நிலா ஒளிவீசும் ஆகாயம். சூனியமான மணல் பரப்பு. அவள் எங்கே போனாள்? ஒருவேளை கடல் தண்ணீ ரில் மூழ்கி இறந்த பெண்ணின் ஆவியோ... என் மனத்தில் பயத்தின் நிழல் படரத் தொடங்கியது. நான் சைக்கிளைத் தள்ளிக்கொண்டு நடக்க முயன்றேன். அப்போதுதான் அதுநேர்ந்தது.

'சைக்கிள் நகரவே இல்லை

'நான் சைக்கிளைத் தூக்கித் தோளில் வைத்துக்கொண்டு நடந்தேன். பின்னாலிருந்து கடலோசையைத் தவிர வேறு ஓர் ஒலியையும் நான் கேட்டேன். பத்திருபது பெண்கள் ஒன் றிணைந்து நின்று கொண்டு குலவையிடுவதுபோன்ற சத்தம். ஆனால், அது கொஞ்சம் தெளிவாக இருக்கவில்லை. இத னுடைய வெளிப்பாடுதான் அது. அதோடு மட்டுமல்லாமல் மண்ணும் என் மேல் விழுகின்றது.

'நான் திரும்பிப் பார்க்கவே இல்லை. காற்றும் மண்ணும் கடலின் இரைச்சலும் அந்தக் குலவையும் மட்டும் தொடர்ந்து கேட்டன. இறுதியில் மின் விளக்குகள் தெளிவாக ஒளிரும் ஏகாந்தமான சாலையை அடைந்தேன். பல நேரங்களில் இந்த நிகழ்ச்சியை நினைத்துக்கொள்வேன். முழு நிலாவைப் பார்க்கும் போதெல்லாம்.'

# ஐந்து

நிலவொளி வீசும் இரவில் கடலில் குளிக்கும் நிர்வாண அழகி. பின்பு அவள் மறைந்து போனது. அசாதாரணமானதும் நம்பமுடி யாததுமான அந்தச் சம்பவத்துக்குப் பின்பும் பஷீர் மட்டாஞ்சேரியில் தீவிரவாத இயக் கத்தையே தொடர்ந்து நடத்தினார்.

ஒருநாள் டாக்டர் தையலின் மருந்தகத்துக்கு முன்னால் தீவிரவாதக் குழு ஏதோவொரு ஆலோசனை நடத்திக் கொண்டிருந்தது. அப்போது கிழிந்த கந்தலான வேட்டியும் அழுக்கேறிய சட்டையும் அணிந்து சோர்ந்து போனவராக, கட்டுப் புத்தகத்துடன் இலக் கியவாதி ஒருவர் அங்கே வந்தார். அவர்தான் பி.கேசவதேவ்.

''இரண்டு மூணு நாளா எதுவும் சாப்பிடல. இந்தப் புத்தகங்களை வித்துக் கொடுக்கறீங் களா...'' என்று கூறிக் கொடுத்த புத்தகப் பொதி, 'அக்னியும் தீப்பொறியும்' என்னும் தேவுனுடைய புத்தகப்பிரதிகள் தான் அவை. லெனினையும் ட்ராட்ஸ்கியையும் அக்னியும் தீப்பொறியுமாக சித்திரிக்கப்பட்ட ரஷ்யப் புரட்சியைப் பற்றிய புத்தகம். பஷீரின் தீவிரவாத இயக்கக் குழுவினர் அவற்றை பத்தே நிமிடங்களில் விற்று பணத்துடன் வந்து சேர்ந்தனர். டிபனும் டீயும் கூட வாங்கி

வந்து கொடுத்தனர். அந்த நிமிடம் முதல் தேவும் பஷீரும் நெருங்கிய நண்பர்களாக மாறிவிட்டனர்.

மட்டாஞ்சேரியிலுள்ள தீவிரவாத இயக்கத்தைச் சேர்ந்த சிலர் பஷீருக்குத் தெரியாமல் ஒரு போஸ்டாபீஸில் ஆசிடை ஊற்றித் தீயிட்டனர். இது ஒரு கூச்சலைக் கிளப்பிவிட்டது. இந்த இயக்கத்தின் மிக உன்னதமான செயல் தலைவராக இருந்த டி.கே. வர்கீஸ் வைத்தியன் உள்பட பலரையும் போலீஸ் கைது செய்தது. இது நடப்பதற்குச் சில நாள்கள் முன்பு இன்னுமொரு சம்பவமும் நிகழ்ந்தது. சி.வி. ராமசாமி அய்யரைக் கொல்வதற்காகவே திருவிதாங்கூர் தலைவர்களாக இருந்த டி.ம்.வர்கீஸ், பி.கே. குஞ்ஞு முதலானவர்கள் பஷீரையும் அவருடைய இயக்கத்தையும் நெருங்கினார்கள்.

''சர்.சி.பி.யைக் கொல்வதற்கு ஒரு ஆள்தேவை. அதற்கு உங்க இயக்கத்தைச் சேர்ந்த யாராவது தயாரா?''

அதற்கு பஷீர், ''ஆள் உண்டு. ஆனால், அதற்கு ஆறாயிராம் ரூபாயும் ஒரு ரிவால்வரும் வேணுமே!'' என்று கூறினார்.

''அந்த ஆளோட பேரு?''

''அதுவொண்ணும் உங்களுக்குத் தேவையில்லை. ஆளு மலபார்க்காரன். பணமும் ரிவால்வரும் கொடுத்தால் உங்க குறிக்கோளை ஏத்துப்பான்'' என்றார் பஷீர்.

''சர்.சி.பி.யைக் கொன்ற பின்னால் பணம் கொடுத்தால் போதாதா...?''

அவர்கள் தயங்கினார்கள். காரணம் அன்றைய நாளில் ஆறாயிரம் ரூபாய் என்பது பெரும் தொகையாகும். அந்த அளவுக்கு அந்தத் தலைவர்களிடம் பணம் புரள்வதற்கு வசதியும் இல்லை.

பணம் அவசியம் தேவதான் என பஷீர் பிடிவாதமாக இருந்தார்.

-உண்மையில் சர்.சி.பியைக் கொல்வதற்குத் தயாராக இருந்த அந்த வீரர் பஷீர்தான். அப்போது பஷீர் அதற்கெல்லாம் கூட தயாராகத்தான் இருந்தார்.

இதற்கிடையேதான் 'உஜ்ஜீவன'த்தில் தீப்பொறி பறக்கும் கட்டுரைகளை பஷீர் எழுதினார். பல கட்டுரைகளும் பல பெயர்

களில் வெளிவந்தன. 'பிரபா' என்னும் புனைப்பெயரில்தான் அப்போது பஷீர் முக்கியமான கட்டுரைகளையெல்லாம் எழுதினார். அந்தக் கட்டுரைகளில் சில பயங்கரவாதத்தைத் தூண்டுபவையாக இருந்தமையால் போலீசாரால் சிலவற்றையெல்லாம் ஊகத்தால் தெரிந்து கொள்ள முடிந்தது. அதனால் பஷீருக்கு அரெஸ்ட் வாரண்ட் வந்தது. அப்போது ஸைனுத்தீன், ''பஷீர் நீங்க சீக்கிரம் ஊரைவிட்டு ஓடிவிடுங்க. இல்லேன்னா நீங்க போலீஸோட பிடியில அகப்பட்டுப்பிங்க...' என்று கூறினார்.

அதனால், பஷீர் சில நாள்கள் எர்ணாகுளத்தில் மறைந்து தங்கியிருந்தார். பிறகு, அங்கிருந்து ரயிலேறி கண்ணனூரை அடைந்தார். கண்ணனூரிலிருந்து கூர்க் வழியாக பெங்களூர் சென்றார். அதன்பின்பு ஒன்பதாண்டு காலம் இந்தியாவிலும் வெளிநாட்டிலுமாக பயணம் செய்தார். அந்தப் பயணம்தான் பஷீர் ஓர் எழுத்தாளராவதற்கு உதவி புரிந்தது. பல அனுபவங்கள்; பல வேதனைகள். மாறி மாறி வந்த கடும் பருவகால மாற்றங்களிலும் பயணம்... இந்த அகண்ட பாரதம் முழுவதும்... நாள்கள், மாதங்கள், வருடங்கள் என...

பஷீர் பயணித்துக்கொண்டே இருந்தார். நடந்தும் வாகனங்களிலும் பிச்சைக்காரர்களுடனும் திரிந்தார். பின், திக்கு சஞ்சாரிகளின் நண்பனாகவும், சாமியார்களின் சீடனாகவும், ஹோட்டல் தொழிலாளியாகவும், ஆபீஸ் கிளர்க்காசவும், அரசியல்வாதிகளின் பின்னாலும், பணக்காரனின் அதிதியாகவும்... இப்படி பல நிலைகளிலும் வாழ்ந்தார். பல மதங்களைச் சேர்ந்தவர்களுடன் அறிமுகமானர். அவர்களையெல்லாம் காண்பது, அறிந்து கொள்வது என்பவைதான் அவரின் நோக்கமாக இருந்தது. குக்கிராமங்களும் பெரும் நகரங்களும், சிற்றருவிகளும் பெரும் நதிகளும், சிறு குன்றுகளும் மகா பர்வதங்களும், பொடி மண் நிறைந்த விவசாய நிலங்களும் பாலைவனங்களும் என எல்லா இடங்களுக்கும் சென்றார். கடைசியில் மனிதர்கள் எங்கும் எல்லா இடங்களிலும் ஒரே மாதிரியாகத்தான் இருக்கிறார்கள் என்பதைக் கண்டு பிடித்தார். மொழிக்கும் வேடத்துக்கும் மட்டும்தான் வேறுபாடு இருக்கின்றன என்பதை அறிந்தார்.

கையிலிருக்கும் பணம் எல்லாம் தீர்ந்ததும் குளிர்ந்த நீரை குடித்துக்கொண்டு கண்களில் தென்படும் கடைகளுக்கும் ஹோட்டல்களுக்கும் சென்று வேலைகேட்பார். சிலர் உணவு மட்டும் கொடுப்பார்கள்; வேலை கொடுக்கமாட்டார்கள். சிலர்

சில்லறைக் காசுகளைக் கொடுத்துள்ளார்கள். யாசகமாக இல்லை. பசியைத் தாங்க முடியாத நிலை வரும்போது அறிமுகமான வர்களை கேட்பதால் கிடைப்பதுதான். இதற்கிடையே சில சிறுசிறு வித்தைகளையும் கற்றுக்கொண்டிருந்தார். மைசூரிலிருந்து பாதையோரங்களில் காண்பிக்கப்படும் மேஜிக்கை மனப்பாடம் செய்திருந்தார். அப்படியே சென்று கொண்டிருந்தவர் ஆந்திராவி லுள்ள ஒரு குக்கிராமத்தையடைந்தார். கிராமத்து மக்களை பஷீர் சத்தம் போட்டுக் கூட்டினார். ஓர் அழுக்குத்துணியை விரித்துவிட்டு மேஜிக் காண்பிக்கத் தொடங்கினார். சீட்டு கட்டுதாள்களினால் முதலில் ஒரு சிறு விளையாட்டைக் காட்டினார். ஆனால், அதுவே அந்த ஊர்க்காரர்களுக்கு ஆச்சரியமாகிவிட்டது. அவர்கள் சுற்றிலும் கூடி நின்றார்கள். சில்லறைக் காசுகள் அந்தக் அழுக்குத் துணியில் விழத்தொடங்கின; அவருக்குத் தெரிந்த வித்தைகள் அனைத்தையும் காட்டி முடித்தும்கூட மக்கள் மீண்டும் மீண்டும் வித்தை காட்டவேண்டுமென கேட்கத் தொடங்கினார்கள். பஷீர் என்னென்னவெல்லாமோ சால்சாப்புக் காட்டி அக்கூட்டத்தினரிட மிருந்து தப்பிக்க நினைத்தார். அப்போதுதான் இந்தியில் ஒரு குரல்:

'நான் சொல்லும் மேஜிக்கைக் காட்டுவாயா?' என்று கேட்ட வனைப் பார்த்தால், கடோத்கஜனைப்போல பஷீரின் முன்னால் நிற்கிறான். தலைப்பாகையும் கோட்டும் அணிந்திருக்கிறான். அவன் பெரிய பெரிய எண்களைக் காண்பித்து, 'இதைப்போல் செய்யணும்' என்று பஷீரிடம் கேட்டான். ஆக மொத்தத்தில் பஷீர் பயத்தால் அன்று வியர்வையில் குளித்துவிட்டார். ஊர்க்காரர்களும் அவனுடன் சேர்ந்து கூச்சலிட்டார்கள். துணி யில் கிடந்த சில்லறைக் காசுகளை பஷீர் எடுக்க முனைந்தபோது ஊர்க்காரர்கள் தடுத்தார்கள்.

''வேண்டாம், இவனை நானே பார்த்துக்கொள்கிறேன்'' என்று கூறிய அந்த கடோத்கஜன், பஷீரின் கழுத்தில் கையை வைத்து தள்ளிக்கொண்டே சென்று தூரத்தில் ஓர் இடத்தில் நிறுத்தி, ''நீ யாருடா?'' என்று கேட்டான்.

பஷீர், தன் துர்பாக்கிய கதையை இந்தியில் அவனிடம் கூறினார். பஷீரின் கழுத்தில் கையை வைத்திருந்த அந்த அறிமுகமற்றவன் பிடியைத் தளர்த்தி அவருக்கு மேலும் கொஞ்சம் பணம் கொடுத்தான். அத்துடன் மேஜிக்கில் உள்ள பல பெரிய வித்தை களையும் சொல்லிக்கொடுத்தான். ஒரு பெரிய ஹோட்டலுக்கு அழைத்துச் சென்று வயிறு நிறைய உணவையும் வாங்கிக்

கொடுத்தான். பிரியும் நேரம் வந்ததும் பஷீரின் முதுகில் அன்போடு தட்டியவன், ''குதா ஹாபீஸ்!'' சொன்னான்.

ஆந்திராவிலிருந்து பஷீர் சென்று சேர்ந்தது பம்பாயின் இருள் உலகம் என்றழைக்கப்படும் அடிமைப் பகுதிக்குத்தான்; திருடர் களும் கொலையாளிகளும், பேட்டை ரவுடிகளும், வேசிகளும் நிறைந்த அழகற்ற ஒரு தெருவுக்கு. பஷீரின் வேடத்திலும் மாற்றம் வந்திருந்தது. கதராடைகளை எல்லாம் பயணத்துக் கிடையே எங்கேயோ உதறிவிட்டிருந்தார். இப்போது பேண்ட் டும் கோட்டும் ஷூவும் ஹேட்டுமாகத் தோற்றமளித்தார். வடஇந்திய பயணத்துக்குத் தோதனா வேடம். தலைநிறைய முடியுள்ள பஷீரைக் கண்டால் யாரும் ஒரு நிமிடம் உற்றுப் பார்த்துவிட்டுதான் செல்வார்கள். 'சாந்த சுந்தர கம்பீரமான உருவம்!' இந்த வேடமும் மேஜிக்கும், அப்புறம் கைரேகை பார்த்தலும், முகலட்சணம் சொல்லுதலும், அரை வைத்தியம் செய்தலும் முடிந்த பின் மோட்டார் ஒர்க்ஷாப்பில் கேட் கீப்பராகவும், நியூஸ்பேப்பர் ஏஜெண்டாகவும் நாள்களைக் கடத்தினார். இவ்வாறு பல தொழில்களை மாறி மாறி செய்து கொண்டே பல கிராமங்களையும் நகரங்களையும் கடந்தவர், இறுதியில் இந்திய எல்லையிலிருந்த ஒரு சமஸ்தானத்தை அடைந்தார். அங்கேயும் ஓர் இருள் தெரு இருந்தது. கொலைகள் அங்கே மிகச்சாதாரண சம்பவமாகும். அங்கேயுள்ள ஒரு சுகாதாரமற்ற தெருவில் மிகமிக மோசமானதும் சிறியதுமான ஓர் அறையில் வசிக்கத் தொடங்கினார். அங்கு பஷீருக்கு குறிப் பிட்டுச் சொல்லும்படியான வேலை எதுவுமில்லை. போஸ்டா பீஸுக்கு வருபவர்களுக்கு ஆங்கிலத்தில் முகவரி எழுதிக் கொடுப்பதுதான். இந்தப் பணி அங்கே பெரும் கலையாகும். ஒரு முகவரிக்கு கால் ரூபாய் முதல் அரை ரூபாய் வரை கட்டண மாகும். அந்தக் காலத்தில் பகலில் நான்கு மணிக்குத்தான் பஷீர் விழித்தெழுவார். அந்த முறையால் அவருக்கு ஓர் ஆதாயமு மிருந்தது. காலையில் டிபன் டீயும் மதிய உணவும் சாப்பிட வேண்டியதில்லையல்லவா!

அவ்வாறு இருக்கும் போதுதான் ஒரு நாள்-வழக்கம்போல் நான்கு மணிக்கு ஹோட்டலுக்குச் சாப்பிடுவதற்காகப் போனார். அவருடைய பேண்ட் பாக்கெட்டில் அப்போது பதினான்கு ரூபாய்தான் இருந்தது. அதுதான் அப்போதைய அவருடைய ஜீவித சொத்து! வயிறு முட்ட சப்பாத்தியும் கறியும் தின்றார். பில்

முக்கால் ரூபாய். கவுண்டருக்குச் சென்று பாக்கெட்டில் கையை விட்டபோது, அங்கு பர்ஸ் இல்லை. பஷீர் மிகவும் குழம்பி விட்டார்.

ஹோட்டல்காரன் சட்டையைப் பிடித்துக் குலுக்கிக்கொண்டே, ''உன் வேலையையெல்லாம் இங்கே காட்ட நினைக்க வேண்டாம். மரியாதையா பணத்தை வைத்துவிட்டு போ! இல்லேன்னா உன் கண்கள் ரெண்டையும் தோண்டிடுவேன்'' என்றான்.

எப்போதும் கும்பல் சேரும் அந்த ஹோட்டலில் இது ஒரு பெரும் சம்பவமாக இருந்தது. கோட்டை கழட்டும்படி அவன் பஷீரிடம் கூறினான். பஷீர் கோட்டையும் சட்டையையும் கழட்டினார். கால் சட்டையையும் அவிழ்க்குமாறு அவன் கட்டளையிட்டபோது, ''உள்ளே ஒன்னும் போட்டிருக்கவில்லை'' என்று பதில் கூறினார். இதைக்கேட்டதும் ஹோட்டலிலுள்ள அனைவரும் ஆரவாரத்துடன் சிரித்தார்கள்.

''எனக்கு நம்பிக்கையில்லை'' என்று கூறிவிட்டு ஹோட்டல் நிர்வாகி பஷீரின் கால்சட்டைப் பொத்தான்களை ஒவ்வொன்றாக கழட்டத் தொடங்கினார்.

அப்போதுதான் கன கம்பீரமான ஒரு குரல், ''நான் அவனுக்காக பணம் தரேன்!'' என்று கூறியது.

சிவந்த தலைப்பாகையும் கருத்த கோட்டும் வெள்ளை கால்சட்டையும் அணிந்த வெள்ளைவெளேரென்ற ஆறடி உயரமுள்ள ஒருவன் எழுந்து நின்றான். அவன் முகத்தில் கொம்புமீசை; நீல நிறக்கண்கள். அவன் முக்கால் ரூபாய் ஹோட்டல்காரனுக்குக் கொடுத்தான். அதன்பின் பஷீரிடம் அடைகளை அணிந்துகொள்ளச் சொன்னான். தன்னுடன் நடந்துவரச் சொன்னான். மக்கள் நடமாட்டமில்லாத ஓர் இடத்தில் நின்றான். பின்பு, அவனுடைய பல பாக்கெட்டுகளிலிருந்து சில பர்ஸ்களை எடுத்துக் காண்பித்து ''சொல்லுங்க, இதில் உங்க பர்ஸ் எது?'' என்று கேட்டான்.

தன்னுடைய சொந்த பர்ஸை அந்தக் குவியலில் பஷீர் கண்டார் அதை எடுத்துத் திறந்துபார்த்தபோது பதினான்கு ரூபாயும் அப்படியே இருந்தது.

அந்த விசித்திர மனிதனை வாஞ்சையுடன் நோக்கினார். பஷீர் தன்னுடைய பர்ஸைக் களவாடிய அந்தத் திருடன், இப்போது தன்னை மானத்திலிருந்துமல்லவா காப்பாற்றியிருக்கிறான்! பஷீர் அந்த மனிதனின் பெயரைக்கேட்டார். அவன் எவ்வித பதிலும் சொல்லாமல் நடந்து அகன்றான். இறுதியில் பஷீரே அவனுக்கு ஒருபெயரைக் கண்டுபிடித்தார்: 'கருணை என்பதுதான் அவன் பெயராக இருக்கவேண்டும்.'

இதுவே பின்னாளில் பஷீரின் மிகச்சிறந்த கதைகளில் ஒன்றாக 'ஒரு மனிதன்' என்னும் பெயரில் வெளிவந்தது.

அதன்பின், கோவாவுக்குச் சென்றார். அங்கே பல சின்னச்சின்ன வேலைகளைச்செய்தார்- கணக்குப்பிள்ளை, மீனவத் தொழிலாளி என்று. இதற்கிடையில் தான் ஒரு சினிமா நடிகனாவதற்கும் அவர் தீர்மானித்தார். அப்போது கோலாப்பூரில் ஒரு சினிமா ஸ்டுடியோ இருக்கிறது என்று கேள்விப்பட்டார். அங்குதான் புகழ்பெற்ற இயக்குநர் வி.சாந்தாராம் இருக்கிறார் என்றும் அறிந்தார். சாந்தாராமை போய்ப்பார்த்தார். முடியை ஆக்ஸ்போர்டு கிராப்பாக வெட்டிக்கொண்டு, ஹேட்டும் பேண்டும் அணிந்து ஒரு கௌபாய் வேடத்தில் பஷீர் சென்றார். சாந்தாராமும் அவரை உற்சாகமிழக்கச் செய்யவில்லை. அதற்குப் பதில் தாங்கள் இப்போது ஸ்டுடியோவை பூனாவுக்கு மாற்றும் கெடுபிடியில் இருக்கிறோம் என்றும், பூனாவுக்கு வந்தால் சான்ஸ் கொடுக்கிறோம் என்றும், அதற்கு ஒரேயொரு நிபந்தனை மட்டுமே உள்ளது என்றும், அந்த நிபந்தனை மராட்டிய மொழியை பஷீர் கற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கூறினார். அதன்படி பஷீர் பூனாவுக்கும் சென்றார்.

அங்கே தனக்கு சான்ஸ் கிடைக்கும் வரையில் தங்குவதற்கு ஒரு தொழில் வேண்டுமே என்று கருதினார் பஷீர். முதலில் ஒரு ஹோட்டலுக்குள் சென்றார். அதுவொரு பார்ஸி ஹோட்டல். ஆனால் அங்கே வேலை எதுவும் கிடைக்கவில்லை. இருந்தும், அந்த ஹோட்டலின் உரிமையாளனுக்கு பஷீரின் மேல் கருணை பிறந்தது. அதனால், அவன், பஷீரிடம், 'ஒரு தொழில் கிடைக்கும் வரையில் இங்கேயே தங்கி சாப்பிட்டுக்கொள்'' என்று கூறினான்.

ஹோட்டலில் பசியைப் போக்கிக்கொண்டு தெருவில் இறங்கி நடந்தார். அப்போது, சில நபர்கள் ஒரு கட்டடத்தின் திண்ணையில் அமர்ந்து பீடி சுற்றிக்கொண்டு இருந்தார்கள். அவர்களைக்

கண்டதும் தன் பழைய தொழிலை - கைரேகை சாஸ்திரத்தையும் முக லட்சணம் பார்த்து குறிசொல்வதையும் - வெளிப்படுத்தி னார். அவருக்கு அப்போது ஹிப்னாடிஸமும் கொஞ்சம் தெரிந்திருந்தது. நல்ல வேளை, அங்கே அமர்ந்திருந்த பீடி தொழிலாளிகள் மலையாளிகளாகவும் இருந்தனர். அவர்களுக் கிடையே போய் அமர்ந்து கொண்டு தனக்குத் தெரிந்த வித்தை களையெல்லாம் ஆங்கிலத்திலும் இந்தியிலும் மலையாளத்திலு மெல்லாம் காண்பிக்கத் தொடங்கினார். அவர்களுக்கு பஷீரின் இந்த விளையாட்டுகளும் நகைச்சுவைகளும் வித்தைகளும் பிடித்துப் போய்விட்டன.

இதற்கிடையே பீடி கம்பெனியின் முதலாளி கஜானனும் அங்கு வந்து சேர்ந்தான். அவன் பஷீரின் ஆங்கிலத்தைக் கேட்டான். கஜானன் தன்னுடனேயே இருக்கும்படிக் கேட்டுக்கொண்டான். தினந்தோறும் அந்தி நேர சவாரி செய்யும்போது பஷீர் உரத்த குரலில் ஆங்கிலம் பேசவேண்டாம் என்பதுதான் அவனுடைய வேண்டுகோள். கஜானனுக்கு ஆங்கிலம் தெரியாது. அதனால் அந்த ஊரில் தனக்கென ஒரு கித்தாய்ப்பு வரவழைத்துக் கொள்வதற்குத்தான் இந்த முறையாகும். பஷீர் ஆங்கிலத்தில் மிகவும் புலமைப் பெற்றவரென்றும் இரட்டைப் பட்டம் பெற்றவரென்றும் கஜானன் எங்கும் புகழ் பரப்பினான். இதற்கு ஒரு பலனும் கிடைத்தது. பஷீர் தங்குவதற்கு ஓர் அறை கொடுத் தான். உணவும் இலவசமாகக் கிடைத்தது. அதற்குப் பதில் அவ னுடைய பெண்களுக்கு ஆங்கிலம் கற்றுக்கொடுக்க வேண்டும்; அவ்வளவுதான். அவர்கள் இன்டர்மீடியட் படித்துக்கொண்டிந் தார்கள். ஐந்தாம் படிவத்துடன் படிப்பை நிறுத்தி ஊரைவிட்டு ஓடிவந்த பஷீருக்கு ஒரே குழப்பம். மிகச்சிரமமான ஆங்கி லத்தைக் கற்றுக்கொடுப்பதற்கு டிக்ஷனரி வாங்கி, எப்படி யெல்லாமோ தானாகவே வார்த்தைகளை கண்டுபிடித்து டியூஷன் சொல்லிக்கொடுத்துக்கொண்டிருந்தார். இங்கேதான் ஒரு காதலும் மொட்டுவிட்டது. ஆனால் அது அதிகம் மலரவில்லை. இதற்கிடையே தன் பிள்ளைகளுக்கு கணக்குப் பாடமும் சொல்லிக்கொடுக்க வேண்டும் என்றும் கட்டளை கஜானனிடமிருந்து பிறந்தது. ஒன்றும் ஒன்றும் இன்னும் கொஞ்சம் பெரிய ஒன்று என்று கண்டுபிடித்த பஷீருக்கு கணக்கு விவரங்கள் பூஜ்யம். அதனால் ஒருநாள், மேல் படிப்புக்கு பம்பாய்க்குப் போய்வரவேண்டுமென்றும் பஷீர் கஜானனிடம் கூறினார். அவனுக்கு மிகவும் மகிழ்ச்சியாகிவிட்டது. உடனே

திரும்பி வந்துவிட வேண்டும் என்று கூறியவன் கொஞ்சம் பணமும் கொடுத்தான். அத்துடன் தன்னுடைய காதல் வெளிப் பட்டுவிடும் என்ற நிலை வந்ததும், அங்கிருந்து எப்படியாவது தப்பித்துவிட வேண்டும் என்ற எண்ணமும் பஷீருக்குத் தோன்றியிருந்ததால் இதுதான் சமயம் என்று கருதி பம்பாயை அடைந்துவிட்டார். பூனாவிலிருந்து போகும்போது, இடைக் காலத்தில் அறிமுகமாகி இருந்த பள்ளிக்கூட வாத்தியார் இர்ஷாத் ஹுஸைன் பம்பாயிலுள்ள தன் மருமகனின் முகவரியைக் கொடுத்திந்தார். அவருடைய மருமகன் ஸஜ்ஜாத் ஹைதர் காமாட்டிப்புரையில் தங்கியிருந்தான்.

திருடர்களும் ஹிஜடாக்களும் நிறைந்த இடம்தான் காமாட்டிப் புரை. அங்கேயுள்ள ஒரு தங்க நகைக் கடையில் பணிபுரிந்து கொண்டிருந்த ஹைதரின் உதவியுடன் பஷீர் ஒரு வேலையில் சேர்ந்தார். அவனுடனேயே தங்கிக் கொண்டார். பஷீருக்கு ஆயுர் வேத கடையில் வேலை. அப்துல் ரஹ்மான் தெருவிலிருந்தது அந்தக்கடை. வைத்தியரும் ஒரு மலையாளிதான.' அங்கே மருந்து அரைப்பதுதான் பஷீரின் பணி! குறுந்தோட்டி, முத்தங்கா என்பன போன்ற பச்சை மூலிகைகளை தண்ணீரில் போட்டு கலுவத்தில் அரைக்கும் பணி. அதுவும் காலை ஒன்பது மணி முதல் மாலை நான்கு மணி வரையில்தான் அந்த வேலை. கூலி எதுவும் இல்லையென்றாலும் மூன்று வேளைக்கும் சாப்பாடு உண்டு. இந்தச் சந்தர்ப்பத்தில் பஷீர் சில ஆயர்வேத சிகிச்சை களைக் கற்றுக்கொண்டுவிட்டார். (இதற்கு முன்பு டாக்டர் தையலிடமிருந்து ஹோமியோபதியும் கற்றிருந்தார்.) இதனால் பஷீரும் அரை வைத்தியரானார். இந்தக் கடைக்கு வந்து போனவர்களுடன் நெருங்கிப் பழகிக்கொண்டார். அவர்களில் பெரும்பாலும் மலையாளிகளும் தமிழர்களுமாக இருந்தார்கள். அவர்களில் பலருக்கும் கொஞ்சம் ஆங்கிலம் கற்றுக்கொள்ள வேண்டும் என்ற நிலை ஏற்பட்டது. இதற்காக பிண்டி பஜாரில் பஷீர் இரவு நேர வகுப்பைத் தொடங்கினார். ஐம்பது பேர்கள் படிப்பதற்காக வந்தார்கள். இதனால் தினசரி ஐந்து ரூபாய் வருமானம் வந்தது. இதற்கிடையே வைத்தியன் கடையில் தொழிலில் நஷ்டமேற்பட்டது. அதனால், அவன் உணவுக்கான காசைக்கூட அவருக்குக் கொடுக்கவில்லை. இதேவேளையில் அந்த இரவு நேர வகுப்பும் அதிக நாள் நீடிக்கவில்லை. ஆள்களின் எண்ணிக்கை குறைந்ததும் பலருக்கு ஆர்வம் குறைந்தது. வகுப்பும் மூடப்பட்டது.

இந்தக் காலத்தில்தான் இனி கடல் பயணம் மேற்கொள்ள வேண்டும் என்ற எண்ணம் பஷீரின் உள்ளத்தில் உதித்தது. அவருடைய அதிர்ஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். எஸ்.எஸ்.நிஸ்வாணி என்னும் ஹஜ் கப்பலில் பஷீருக்கு ஒரு வேலை கிடைத்தது. பம்பாயிலிருந்து ஏடன் வழியாக செங்கடலில் ஜித் வரைதான் அதன் பயணம்! பஷீருக்கு ஸ்டோர் கீப்பர் பணி. அதிகாலை மூன்று மணி முதல் இரவு பதினோரு மணிவரை பணியாற்ற வேண்டும். சில நாள்கள் வரை பஷீரும் கடினமாகவே வேலை செய்தார். அதன்பின்தான் உறங்கும் இடத்தை மாற்றினார். கேப்டனின் கேபினுக்கு அருகில் தார்பாலின் போட்டு மூடப்பட்டிருக்கும் லைஃப் போட்டில்தான் உறங்கினார். காலை ஏழு மணியானால்தான் எழுந்திருப்பார். கப்பல் கம்பெனி முகல் லைன்ஸினுடைய பொது மேலாளரின் பிரத்யேக சிபாரிசினால் வேலைக்குச் சேர்ந்தமையால் இவருக்கு மேலேயுள்ள கண்காணிப்பாளர்கள் பஷீரைத் திட்டவில்லை.

இந்தக் கடல் பயணம் பஷீரை பயமுறுத்தவும் சில சமயம் அனுபவிக்கவும் செய்தது. பல அனுபவங்களை தன் அடி மட்டத்தில் மறைத்துக்கொண்டு மேலுக்கு அமைதியானதுபோல் இருந்தாலும், ரௌத்திரமான அக்கடலில் பஷீர் இன்னுமொரு உலகத்தைக் கண்டுகொண்டிருந்தார். ஆர்ப்பரித்து எழுந்து மடியும் அலைகளின் வழியாகச் செல்லும் பயணம் அது. மேகங்களில்லாத கவிழ்ந்த ஆகாயத்தின் அடியில் நடுவே கப்பல். இன்னுமொரு கப்பலைப் பார்க்கும் போதுதான் கடலின் விஸ்தீரணமும் விசாலமும் பயங்கரமும் புரிகிறது. முன்பெல்லாம், மட்டாஞ்சேரி கடற்கரையில் அதிகாலை மூன்று மணிக்கு சைக்கிளுடன் சென்று கடலை நோக்கிக்கொண்டு நின்ற நினைவுகள் அவருக்கு மேலெழும்பி வரும். நிர்வாண அழகி கடலில் குளித்து மறைந்த நிகழ்ச்சி... புலப்படாததும் பயமுறுத்தக்கூடியதுமான அந்த அனுபவம்.... கப்பல் ஜித்தாவை நெருங்கியது. ஆனால், கரையில் இறங்க முடியவில்லை. வெகுதூரம் வரையில் பரவியிருக்கும் அரேபியன் பாலைவனத்திலுள்ள தீவைப்போன்று சவுதி அரேபியாவின் ஜித்து. உலகத்திலுள்ள முஸ்லிம்களுக்கு எல்லாம் புண்ணிய ஸ்தலமான மெக்கா... பஷீர் கண்களைச் சிமிட்டாமல் அதையே நோக்கி நின்றார்.

# ஆறு

அந்தக் கப்பல் ஜித்தாவிலிருந்து பம்பாய்க்குத் திரும்பியது. திரும்பிவந்ததும் பஷீர் அந்தக் கப்பல் வேலையை உதறினார். பம்பாயிலிருந்து தன் இருப்பிடத்தை லாகூருக்கு மாற்றினார். இப்போது பாகிஸ்தான் பகுதியாகிவிட்ட லாகூரில் ஸிண்டியிலும் கராச்சியிலுமாக அலைந்து திரிந்தார். சில நாள்கள் கராச்சியில் காலம் தள்ளினார். அங்கே ராம்மோகன் என்னும் ஒரு மோட்டார் மெக்கானிக்கிடம் அறிமுகமானார். சிந்தி பிராமணனான அந்த ராம்மோகனுடனேயே தங்கிக் கொண்டார். கராச்சி ஹோட்டல் ஒன்றில் வேலைகிடைத்தது. அதன்பின், லாகூரிலிருந்து பிரசுரிக்கப்பட்டு வெளிவரும் சிவில் அண்ட் மிலிட்டரி கெஸ்ட் பத்திரிகையில் புரூஃப் ரீடரின் காப்பி ஹோல்டராக வேலை கிடைத்தது. ஆனால், இவை எதிலும் மனம் நிலையாக ஒன்றவில்லை. அதனால் டில்லிக்குப் புறப்பட்டார்.

நன்கு குளிரடிக்கும் இரவு. கையில் சல்லிக் காசு இல்லை. பசியாலும் குளிராலும் ஒரே சோர்வு. ஒரு கப் டீ கிடைக்குமென்றால்... விலைமிக்க ஆடைகள் அணிந்த பெரிய மனிதர்கள் வந்து கூடும் கனாட்பிளேசில் பஷீர் நடுங்கியவாறே ஓர் ஓரமாக நின்றார். தன் முகம் கூட அடையாளம் தெரியாத இந்த

மாநகரத்தில், தன் பட்டினி கிடந்தே இறந்துவிடுமோமோ என்று அப்போது தான் அவருக்குப் புரிந்தது. அதனால், அந்த நிலை வருவதற்கு முன் தான் யாசிக்க வேண்டியதுதான் என்று தீர் மானித்தார். அந்த முடிவின்படி, பிச்சைக்காரர்களிடமிருந்து சற்று ஒதுங்கி, மக்கள் ஏராளமாகப் புழங்கும் ஓர் இடத்தில் கையேந்தி கொண்டு, 'பசிக்கிறது, ஏதாவது தாருங்களேன்' என்று வேண்டியவாறு நின்றார்.

யாசித்தல் கூட இந்தியில்தான்... அப்போது கோட்டும் ஷூட்டும் அணிந்திருந்த ஒரு தயாளக்குணமுள்ளவன் இரண்டு வெள்ளி ரூபாய்களை அளித்தான். பஷீரின் கண்கள் நிறைந்தன. மரியாதைக்குரிய அந்த நபர் ஒரு நீதிபதி. அவர் பஷீரைக் கவனித்தார். பஷீரைப்பற்றின விவரங்களைக் கேட்டுப் புரிந்து கொண்டவர், ஒரு வேலையைத் தேடிக் கொடுத்தார். அதன் மூலம் 'நேஷனல் கோல்' பத்திரிக்கையில் மீண்டும் ஒரு காப்பி ஹோல்டரானார். அந்த வேலை அப்போதைக்கு அவருக்குப் பசியை அடக்கியது. உடல்நிலையும் கொஞ்சம் தேறியது. அதே நேரத்தில் டில்லி வாழ்க்கையும் கசந்தது. அதன்பின்தான் இந்தியா வின் புண்ணிய தீர்த்தத்தலமான காசி விஸ்வநாதர் கோயிலை நோக்கிப் பயணித்தார். அந்தப் பயணம் புண்ணிய ஸ்தலங்களை தரிசிக்க வேண்டுமென்பதற்காக அல்ல; இந்தியாவைக் காண வேண்டுமென்னும் இதயப் பூர்வமான ஒரு பயணம் என்னும் நோக்கமாகத்தான் இது இருந்தது.

அப்புறம் காசியிலிருந்து ஆஜ்மீருக்குச் சென்றார்.

ஆஜ்மீர்! புண்ணிய புராதனமான நகரம். மஸார்களை ஆராதிக்கும் முஸ்லிம்களின் கேந்திரம் அது. அங்கு ஏராளமான முஸ்லிம்கள் புண்ணிய யாத்ரீகர்களாக வந்து சேர்கின்றனர். அந்த ஊரை அடைந்தபோது பஷீரின் கையில் ஒரு ரூபாய் மட்டுமே இருந்தது. அப்போது சில நபர்கள் பஷீரை அழைத்துசூழ்ந்து கொண்டார்கள். சமாதியில் பூக்கள் தூவுவதற்கும் பிரார்த்தனை செய்வதற்குமான பணத்தைக்கேட்டபடி நின்றார்கள். அந்தக் காலத்திலேயே முஸ்லிம் அரசர்களும் சுல்தான்களும் அங்கே பல கட்டடங்களைக் கட்டியிருந்தார்கள். பெரும் பெரும் செல்வந்தர் கள் வந்து செல்லும் கேந்திரமாகும் ஆஜ்மீர். அதேபோல ஏழைகளும் தங்கள் நேர்த்திக் கடனைச்செலுத்துவதற்காக அங்கே வந்து செல்வதுண்டு.

தன்னைச் சுற்றி நின்றவர்களிடம், ''எனக்கு நேர்த்திக் கடன் எதுவுமில்லை. அதனால், பிரார்த்திக்கவும் ஒன்றுமில்லை'' என்று கூறிய பஷீர், தன் கையிலிருந்த ஒற்றை ரூபாயையும் அவர்களிடம் கொடுத்தார். அதன்பின், பஷீர் 'ராமசந்திரன்' என்னும் ஒரு இந்துவின் பெயரில் ஓர் இந்துவாததான் அஜ்மீரில் வசித்தார். இந்துக்களின் தர்ம சத்திரத்தில்தான் படுக்கையும். சப்பாத்தியும் பருப்புக் குழம்பும்தான் அவரின் அப்போதைய உணவு. அங்கே இருந்த ஒரு பெரிய குளத்தில் குளித்துக் கொண்டிருக்கும்போதுதான் ஒரு பிராமணனிடமிருந்து புதிய தொரு விவரம் கிடைத்தது. அதாவது, அருகிலேயே புஷ்கர் ஸாகர் என்றொரு சிறிய நகரம் உண்டென்றும், அது ஒரு புண்ணிய ஸ்தலம் என்றும், அங்குள்ள குளங்களில் பெரிய பெரிய மீன்கள் உண்டென்றும், அவை புண்ணிய மீன்களென்றும் அவற்றுக்கு தெய்வீகச் சக்தி உண்டென்றுமான விவரங்கள்தான் அவை. அதோடு மட்டுமல்ல, அங்குள்ள மீன்களுக்கு நேர்ச்சைக் கடனையும் செலுத்துகிறார்களாம். அவற்றுக்கு உணவிடுதல் என்பதை ஒரு பெரிய புண்ணியமாகவே கருதுகின்ற நம்பிக்கை யுள்ளவர்களும் ஏராளமானோர் உண்டாம். அதனால் அந்த புஷ்கர் ஸாகருக்குச் செல்ல வேண்டும் என்னும் ஆர்வம் பஷீருக்குத் தோன்றியது. ஆனால் அந்த யாத்திரை ஒரு பாலைவனத்தின் வழியாகச் செல்லவேண்டும் என்பதுதானால் மலைப்பாகத் தோன்றியது.

சுட்டுப்பொசுக்கும் அந்த மணல் வனத்தின் வழியே பஷீர் நடந்தார். சூரியன் பற்றி எரிந்து கொண்டிருந்தது. தீக்கங்குகளை வாரி இரைத்துள்ளதுபோல சிவந்து கிடக்கும் மணல்பரப்பு. ஷூவையும் கோட் பேண்டையும் அணிந்துகொண்டு புஷ்கர் ஸாகரை அடைய வழிகாட்டும் பலகைகளை நோக்கியவாறு பஷீர் நடந்து கொண்டிருந்தார். கடல் பயணம் ஒரு காலத்தில்; இப்போது பாலைவனப்பயணம். வாழ்க்கையின் அனுபவங்கள் எத்தனையெத்தனை வேறுபாடுகளாக உள்ளன!

காலை பத்து மணிக்கு பஷீர் புறப்பட்டார். மாலை நேரமாகியும் எந்த இடத்தையும் அவரால் அடைய முடியவில்லை. மிகவும் சூடேறிவிட்டதால் ஷூவையும் கழற்றி கழுத்தில் மாட்டிக் கொண்டார். பேண்டை சுருட்டி மேலே ஏற்றி அரை கால் சட்டையைப் போலாக்கினார். வழிக்கு உணவு எதுவும் கொண்டு வரவில்லை. அதனால், சூடு, தாகம், களைப்பு... எங்கும் ஒரு

குஞ்சு குளுவானைக்கூட காண முடியவில்லை. அவரின் முன்னே காலத்தின் மின்னலடிக்கும் நெடும் பாதைகள்.

எங்கும் மணல் வெளி.

''அல்லாவே, நான் இப்போது இறக்கப்போகிறேன்...'' என்ற பஷீர் அந்தப் பாலைவனத்தில் தலைசுற்றிக் கீழே விழுந்தார். அவர் விழுந்தபோது ஏதோ அக்னிக்குண்டங்களின் மேல் விழுந்ததுபோல் தோன்றியது. ஆம் ஏராளமான திக்கங்குகளுக் கிடையே கரித்து விழும் ஒரு வண்ணத்துப் பூச்சியைப் போல்தான் அப்போதைக்கு அவரால் நினைக்க முடிந்தது. சென்ற காலத்தின் சத்தமும் மண்ணும் எல்லாம் இப்போது இழந்துவிட்டிருக் கின்றன. உணர்வற்ற நிலையில் எங்கிருந்தோ மரணம் தம்மை நெருங்கிவிட்டது என்ற எண்ணம் பஷீருக்கு உறுதியாயிற்று. அனல் காற்றின் முணுமுணுப்பைப் போல் பஷீரின் ஆத்ம வேதனை அழிந்து இல்லாமலாயிற்று அப்போது...

'பீயோ...குடியுங்கள்...'

அந்தப் பாலைவனத்தில் ஒரு கருணைக்குரல், மரணத்தின் அக்னிகுண்டத்திலிருந்து வழிந்து வந்த நேசத்தின் குரல். ஜீவன் ஒரு பறவையாகி பறந்து போகும்போது வந்து விழுந்த பாது காப்பின் அமிர்தபாஷ்பம்... வறண்டு உலர்ந்து போன உதட்டில் குளிர்ந்த நீரின் ஸ்பரிஸம். ஒரு பாத்திரத்தின் விளிம்பு உதட்டில் உராய்ந்தது. பஷீர் மெதுவாகக் கண்களைத் திறந்தார். பற்றி யெரிந்து கொண்டிருக்கும் சூரியனுக்குக் கீழே தாடியும் முடியும் நீண்டு வளர்ந்து, யோக தண்டங்கள் ஏந்திய முழுநிர்வாண சந்நியாசிகள்.. கண் விழித்துச் சுற்றிலும் நோக்கிய போது ஓர் ஆலமரத்தின் அடியில் தான் படுத்திருப்பதை அவரால் அறிய முடிந்தது. அங்கே, தான் எப்படி வந்து சேர்ந்தோம் என்பது கூடத் தெரியவில்லை. அக்னிகுண்டத்தில் பற்றியெரியத் தொடங்கிய ஒரு மனிதனைக் காப்பாற்றித் தூக்கி வந்த சந்நியாசிகளை பஷீர் இதயபூர்வமாக கண்ணீருடன் நோக்கிக் கொண்டு நின்றார். வார்த்தைகள் தொண்டையில் ஒடுங்கின.

அதன்பின், பஷீரும் நிர்வாண சாமியாராகி அவர்களுடனேயே இரண்டு ஆண்டுகாலம் வாழ்ந்தார். அந்த வாழ்க்கை பஷீரிட மிருந்த துறவற நிலை காலகட்டத்தின் தொடக்கத்தைக் குறிப்பதாக இருந்தது. முடியையும் தாடியையும் நீளமாக

வளர்த்துக்கொண்டு வெயிலையும் குளிரையும் சகித்துக்கொண்டு திரிந்தார். அந்தத் துறவற காலகட்டத்தின் பிரதிபலிப்பு பஷீரின் பிற்கால வாழ்க்கையை நிர்ணயிக்கும்படியாக ஈர்க்கப்பட்டிருந் தது. விரக்தியும் பொறுமையும் - இவை எதனிடமும் எல்லை யற்ற ஆசையுமில்லை; ஆவலுமில்லை. கிடைப்பதை வைத்துக் கொண்டு திருப்திபடுவார். எதுவும் கிடைக்கவில்லை என்றாலும் வருத்தமுமில்லை. யாரிடமும் சங்கடமுமில்லை; கலக்கமு மில்லை. மரணத்திலிருந்து மறுபிறவி எடுத்த ஒரு சஞ்சாரிக்கு ஏற்பட்ட, தமக்குதாமே இயல்பாக வளர்ந்த பரிணாமம்.

இந்துமத சாமியார்கள் என்றாலும் அவர்களிடம் க்ஷேத்ர வழிபாடு இல்லை. உருவ வழிபாடு இல்லை. தியானத்தில் மூழ்கியவர் களாகத்தான் வாழ்க்கையை ஓட்டுகிறார்கள். தியானம். பிரும் மாண்டங்களையும் அண்டசராசரமான பிரபஞ்சங்களையும் மனத் துக்குள் ஒரு நிலைப்படுத்துகிறார்கள். பஷீரினுடைய புகழ்பெற்ற 'அனர்க நிமிஷ'த்தில் வரும் இந்தவரிகள் பிறந்தது இந்தக் காலகட்டத்தின் நினைவிலிருந்துதான் என்று சொன்னால் அது மிகையாகாது.

'அஹம் பிரம்மாஸ்மி', 'நானே தெய்வம்'. இது கடவுளின் குணங்களில் ஒன்றாகும். மகாசமுத்திரத்திலுள்ள ஒரேயோரு துளி, மகா மேருவிலள்ள ஒரேயொரு மணல்துகள் மட்டுமாவேன்... இப்போது அவருக்கு உணவு ஒரு பிரச்னையாக இருக்கவில்லை. பயணங்களின்போது கிடைக்கும் உணவை மட்டுமே உண்ணு வார். அந்த யாத்திரையில் காமகுரோத மோகங்கள் ஒன்று மில்லை. அப்படி ஒரு காலம். ஒரு நாள் புஷ்கர் ஸாகர் தடாகக் கரையில் சம்மணமிட்டு அமர்ந்து தியானத்தில் மூழ்கினார்கள். பக்தர்கள் வந்த தொழுது மண்டியிட்டு பாதபூஜை செய்து நாணயத் துட்டுகளைச் சமர்ப்பித்தார்கள். பல்வேறு ஆராதகர்கள் வந்து சென்று கொண்டிருந்தார்கள். ஆராதகர்கள் அனைவரும் போய்விட்டார்கள் என்று புரிந்து கொண்டதும் மெல்ல கண் களைத் திறந்தார். கண்களின் முன்னால் ஏராளமான நாணயங்கள்! 'அஹம் பிரம்மாஸ்மி'க்கு கிடைத்த காணிக்கைகள்.

அதன்பின்தான் புத்தன் பூமிக்குப் பயணித்தார். புத்த கயா! பெரும் குன்றின் அடிவாரத்திலுள்ள ஒரு சிறு குன்றின் உச்சியில் தியானத்தில் மூழ்குவதற்கு உதவும்படியான ஆலமரத்துக்குக் கீழே மஞ்சள் ஆடைகள் அணிந்த, தலையை முண்டனம் செய்த புத்த பிட்சுக்கள் பிரதட்சணம் செய்தார்கள். பஷீர் அந்த

ஆலமரத்தினடியில் அமர்ந்து தியானம் செய்யத் தொடங்கினார். இடையில் எப்போதாவது கண்களைத் திறந்து நோக்கும்போது புத்த பிட்சுக்கள் இன்னும் பிரதட்சணம் செய்வது தெரிந்தது. ஆனால் பின்புதான் பஷீருக்குப் புரிந்தது. தன்னை அவர்கள் சுற்றவில்லை என்றும் தான் அமர்ந்திருந்த ஆலமரத்தைத்தான் அவர்கள் ஆராதிக்கிறார்கள் என்றும். அந்த ஆலமரத்தினோடு பஷீரையும் அவர்கள் ஆராதித்தார்கள் என்பது மட்டும் அந்த விரக்திக்கிடையிலும் பஷீர் கண்டுபிடித்த ஒரு நகைச்சுவை யாகும். சிலகாலம் சென்றதும் இந்து துறவற நிலையிலிருந்து ஆசீர்வாதம் பெற்று விடைபெற்றார்...

பஷீர் அதன்பின் முஸ்லிம் சந்நியாசிகளான சூஃபிகளிடம் சென்று சேர்ந்தார். அவர்களும் நிர்வாண சாமியார்களைப் போல் தியானத்துக்கு முக்கியத்துவம் கொடுப்பவர்களாக இருந்தார்கள். 'யா அஹத்', 'அல்லாஹு அக்பர்', 'ஸுப்ஹானா ரசூல் அலீம்...' என்னும் மந்திரங்களை உச்சரித்துக் கொண்டிருந்தார்கள். அவ்வாறு தான் சூஃபிகளோடு சேர்ந்து இமயமலையின் அடிவாரங்களில் பஷீரும் வாழ்ந்தார். இந்தியாவின் ஆத்மிய அடிவாரம். இயற்கை யின் கருணையை நேரில் காணும் அனுபவம். மேகக்கூட்டங் களுக்கிடையே தியானத்தில் மூழ்குவதான வாழ்க்கை. மனதில் ஒரே ஒரு மந்திரம் மட்டும்தான் அப்போது இருந்தது. 'கருணை மயமான அல்லாஹுவே...' என்பதுதான் அது. அதன்பின், அல்லாஹுவை நோக்கிய பயணம்தான். இந்த உடலை உதறாம லேயே ஆன்மா போகிறது. மறக்க முடியாததும், பல அனுபவங் களைக் கொண்டதுமாக அன்றைய வாழ்க்கை இருந்தது. ஆனால், அலைச்சல் நிறைந்ததாக இருந்த இந்த காலமும் முடிவுக்கு வந்து கொண்டிருந்தது. வரும் காலகட்டத்தின் கதிகளை ஆக்ரமித்த அபூர்வ அநுபவத்துடன், சூஃபிகளிடமிருந்தும், சாமியார்களிட மிருந்தும் எங்கே போகிறோம் என்று அறியாமலேயே பஷீர் விடைபெற்றார்.

'நீயும் நானும் என்பதிலுள்ள யதார்த்த நிலையிலிருந்து இறுதியில் நீ மட்டும் மிஞ்சப் போகிறாய்... ஆமாம், நீ மட்டும்தான். உன்னுடைய பயணத்துக்கான நேரம் மிகவும் நெருங்கிவிட்டது.' 'அனர்க நிமிஷம்' என்ற கதையில் வரும் இந்த வரிகளை இந்த நினைவிலிருந்துதான் பஷீர் படைத்தார்.

துறவற நிலையின் காலத்தை, நினைவில் தங்கிய முற்பிறப்பின் புண்ணியமெனக் கருதி. மனத்துக்குள் பாதுகாக்கப்பட்ட பின்

தொடர்ந்த பயணமானது, அடுத்து காஷ்மீர் பள்ளத்தாக்கின் வசந்தங்களைத்தான் சென்றடைந்தது. கனவுமயமான இன்பங்கள். நானாவித முக்திகளின் பிறப்பான தனிமை. பிறவிகளின் கண்ணிகளில் எங்கேயோ சொர்க்கத்தின் கற்பனைகளோடு பிணைக்கப்படுகின்ற இவ்வுலகத்தின் ஆகாயம். சௌந்தரியத்துக்கு இயற்கையின் தானமாக வியாக்யானம் போன்றுள்ளது காஷ்மீரின் ஸ்ரீநகர்.

ஜம்முவிலிருந்து ஸ்ரீநகருக்கு ஓர் உயர் அரசு அதிகாரியின் சிபாரிசுக் கடிதத்துடன்தான் சென்று சேர்ந்தார். அங்கே ஒரு மிகப்பெரிய ஹோட்டலில் தங்கினார். ஸ்ரீநகரில் சுற்றித் திரிந்தபோது ஒரு பத்திரிகை அலுவலகத்தைக் கண்டார். அந்த பத்திரிகை ஆசிரியருடன் அறிமுகமானார். கேரளாவைப் பற்றி, மலையாளமொழியின் தனித்துவத்தைப் பற்றி, கலாசாரம், மொழி, அரசியல் என பலவற்றையும் பற்றி இருவரும் பேசினார்கள். இறுதியில் விடைபெற்று வெளியேறும் நேரத்தில் ''பஷீர் நீங்கள் ஷேக் அப்துல்லாவைப் பார்க்க வேண்டாமா?'' என்று அந்தப் பத்திரிகையின் ஆசிரியர் கேட்டார். அந்த வகையில்தான் 'காஷ்மீர் சிங்கம்' ஷேக் அப்துல்லாவைச் சந்தித்தார். ஆறடி உயரம். அதற்கேற்ற அழகு. ஷேக் அப்துல்லா புன்னகைத்தவாறே எழுந்து நின்றார். பஷீர் அவரோடு சிறிது நேரம் பேசினார். தன் ஊரைப் பற்றியும் இலக்கியத்தைப் பற்றியும், கலாசாரத்தைப் பற்றியும் பேசினார். அதனால், ஷேக் அப்துல்லாவுக்கு பஷீரை மிகவும் பிடித்துவிட்டது.

'தாங்கள் இனிமேல் ஹோட்டலில் தங்க வேண்டாம். என் வீட்டுக்கு வந்துவிடுங்கள்.''

ஷேக் அப்துல்லாவுக்கு இரண்டு வீடுகள் இருந்தன. ஒரு வீட்டில் அவரின் மனைவி பிள்ளை பெற்று ஓய்வு கொண்டிருந்தார். அதனால் மற்றொரு வீட்டில் பஷீர் தங்கினார். பஷீருக்கான உணவை சமையல்காரனே அந்த வீட்டுக்குக் கொண்டு வந்துவிடுவான். முக்கிய விருந்தினர் என்னும் நிலைக்கு மேலாக ஒரு சொந்த உறவினரைப்போல்தான் பஷீரை ஷேக் ஏற்றுக் கொண்டதும் தங்கவைத்ததுமாகும்.

குளிரின் ஊசிமுனைகள் மயிர்க்கால்களுக்குள் துளைத்துக் கொண்டு நுழைந்தன. கம்பளி போர்வைகளைத் தாண்டி நடுங்க வைக்கும் குளிர். அதுமட்டுமல்ல, குளிர்ந்த நீரைவிட உறைந்

தள்ள பனிக்கட்டிகள்தான் எங்கும் தென்பட்டன. இருந்தாலும், பஷீரோ பச்சைத் தண்ணீரில் குளிக்கத்தான் தீர்மானித்தார். அதன்படி தண்ணீரில் முழ்குவதற்கான தைரியத்தை வரவழைப் பதற்காக தால் ஏரியின் கரையில் ஒரு துண்டை மட்டும் இடுப்பில் சுற்றிக்கொண்டு அமர்ந்திருந்தார். பின் அந்தப் பொய்கையில் மூழ்கி வாழ்வின் குளிர்ச்சியை அனுபவித்தார். பாலைவனத்தின் அனல் காற்றும், தீகங்குகளாக மாறிய மணல் துகள்களும், குளிர்ச்சியின் சமதளத்துக்குச் சென்று சேர்ந்தன. ஸ்ரீநகரில் தங்கியிருந்து காலத்தில்தான் முகமது அஸத்தை பஷீர் கண்டார். ஆஸ்திரேலியாக்காரரான அவர் ஒரு யூதர். லியோ பால்ஸ் வெயிஸ். பிற்காலத்தில்தான் அவர் இஸ்லாம் மதத்தை ஏற்றுக் கொண்டு அரேபியாவுக்குச் சென்று முஸ்லிமானார். ஹதீஸ்களை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தார். அதற்காக தன்னுடன் ஒரு குருட்டு காஷ்மீரி அரபி பண்டிதனையும் வைத்துக்கொண்டார். பிற்காலத்தில் 'ரோட் டு மெக்கா' எழுதியதன் மூலம் உலகப் புகழ் பெற்ற அந்த அஸத்துதான் அன்று அந்த நூலை எழுதிக் கொண்டிருந்தார். பஷீருக்கு அஸத் பல புத்தகங்களை அளித்தார். அதே போல் ஸ்ரீநகரில் வைத்துதான் அல்லாம யூஸஃபலியையும் பஷீர் அறிமுகம் செய்து கொண்டார். அப்போது அவர் பிழை யற்ற குரானை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்துக்கொண்டிருந் தார். அதுவும். தால் ஏறிக்கரையில் ஒரு கூடாரம் அமைத்து அதில் அமர்ந்து கொண்டுதான் எழுதினார். அதன்பின். பஷீர் ஹஸ்ரத் பால் மசூதிக்குச் சென்றார். திவ்ய சக்தி உண்டென்று கருதி மக்கள் ஆராதிக்கும் 'பால் ஷரீஃபை' காண்பதற்கு பஷீரும் ஆவலுடன் சென்றார்.

புனித ரோமம், சாதாரண ரோமம்தான். இரண்டு அங்குல நீளம். நல்ல கருப்பு நிறம். மசூதியிலுள்ள ஸ்படிக பாட்டிலுக்குள்தான் இது பாதுகாக்கப்பட்டிருந்தது. ஆண்டுக்கு ஒரு முறை மட்டுமே இந்த ரோமத்தை காட்சிக்கு வைப்பார்கள். அன்றைய நாள் திருவிழா நாளாகும். 'பால்ஷரீபை' காணவும், ஆராதனை பூர்வ மாக முத்தமிடவும் ஆயிரக்கணக்கான ஆண்களும் பெண்களும் கூட்டமாக நெருக்கியடித்துக்கொண்டு கூடுவார்கள். இந்த களேபரத்துக்கிடையே மோதலும் மரணமும் கூட நிகழ்வ துண்டு. எது எப்படியோ, பஷீர் அந்தப் 'புனித ரோமத்தை' நேரில் கண்டார்; அதுவும் ஒரு ரூபாயை காணிக்கைப் பெட்டியில் போட்டுக்கொண்டே! நம்பிக்கை இல்லை என்றாலும் ஆயிரக் கணக்கான மக்கள் ஒட்டுமொத்தமாக ஆவேசம் கொள்ளும் அந்த

'அபூர்வ வஸ்து'வை நேரில் காண்பதற்கான ஆர்வத்தால் மட்டுமே! இதைப்பற்றி பஷீர் பின்பு 'புனித ரோமம்' என்னுமொரு கதையாக எழுதினார்.

அன்று ஸ்ரீநகரிலேயே ஆங்கிலத்தில் 'புலப்படாத எதிர்காலத் துக்கு' என்னுமொரு வசன கவிதை எழுதினார். பிற்காலத்தில் அதையே மலையாளப்படுத்தி 'அனர்க நிமிஷ'த்தில் சேர்த்தார்.

பயணம், மீண்டும் பயணம். ராவல் பிண்டி, மௌண்ட் அபூ, பெஷாவர்... பெஷாவரில்தான், காலத்தால் அழிவற்ற தன் மையைப் பெற்ற 'எல்லைக் காந்தி' கான் அப்துல் கபார்கானை பார்ப்பதற்கான அதிர்ஷ்டம் கிடைத்தது. இதுவும் ஷேக் அப்துல்லாவை அறிமுகப்படுத்திக்கொண்டதுபோன்று தாற் காலிகமாக சம்பவமாகத்தான் இருந்தது. காஷ்மீரிலிருந்து பத்திரிகை ஆசிரியர் நண்பர் அளித்த கடிதம்தான் எல்லைக் காந்தியைக் காண்பதற்கான சாகச்சரியத்தையும் உண்டாக்கியது. நட்பின் விசாலத்துக்கு எல்லை வகுக்காத, போராட்டத்தின் வீரிய தலைவனான கான் அப்துல் கபார்கான். பஷீர் ஒரு சுதந்தரப் போராட்ட போராளி என்னும் நிலையில் வைத்துதான் வர வேற்றார். சுதந்தரப் போரின் தீட்சண்யமான முகங்களிலிருந்து நீண்டதொரு பயணம் முடித்து வந்த பஷீரின் கதை, எல்லைக் காந்தியை மிகவும் கவர்ந்தது. விடைபெறும் நேரத்தில், நன்மை யின் கலங்கரை விளக்கமாகத் தலை நிமிர்ந்துநின்ற மற்றொரு காந்தியை வணங்கியவாறே பஷீர் கூறினார்:

'தாங்களும் எங்கள் காந்தியைப் போலவே எங்களின் மனங்கவர்ந் தவர்தான்.'

அதற்கு எல்லைக்காந்தி புன்னகைத்தவாறே, ''மகாத்மாவின் காலடிகளைப் பின் தொடர்வதுதான் என் ஆசையும்...'' என்று பதில் அளித்தார்.

வடகிழக்கு மலைச்சரிவுகளையும் பஷீர் விட்டுவைக்கவில்லை. அவர் அங்கு பயணித்தபோது பயணத்துக்கிடையே 'அஃபிரீதி' களோடு தங்கினார். நாகரீகமற்றவர்களும் கொடூரமானவர்களு மான காட்டுவாசி வர்க்கம்தான் அவர்கள். வெள்ளையர்களே கண்டு பயந்து விட்ட வீர தீர சூர பராக்கிரமசாலிகள். இந்த 'அஃபிரீதி'களின் தலைவனுக்கு ஆண்டுதோறும் வெள்ளையர் கள் எழுபத்தையாயிரம் ரூபாய் கப்பம் கொடுத்துக்கொண்டிருந்

தார்களாம். அப்பேர்பட்ட அந்த காட்டு மிராண்டிகளுடனும் பஷீர் சிலகாலம் வாழ்ந்தார். அவர்கள் ஓர் ஆட்டைக்கொன்று சுட்டு தின்பதையெல்லாம் கூட நேரில் பார்த்தார்... இதற்கு பின்புதான் கல்கத்தாவை அடைந்தார்.

கல்கத்தாவிலுள்ள 'டான்' பத்திரிகையில் சேருவதுதான் அவரின் உத்தேசம். அங்கேயுள்ள ஒரு புரூஃப் ரீடரை அறிமுகம் செய்து கொண்டார். ஆனால், வேலைதான் கிடைக்கவில்லை. கல்கத்தாவின் கருமையும் வெண்மையும் நிறைந்த பாதைகளின் வழியாக அனுபவத்தின் கரைதேடி அலைந்தார். சேரிப் பகுதியிலுள்ள ஏழைகளுக்கு மத்தியில் இரவு நேரங்களில் படுத்துத் தூங்கினார். வித்தியாசமான அனுபவங்களைப் பெற வேண்டும் என்பதற்கான ஒரு முயற்சி அது. அவரின் குறுநாவல் 'சப்தங்களி'ல் முழங்கி திடுக்கிட வைக்கும் இரவுகளின் சித்திரிப்புக்கு இந்த அனுபவம் உபயோகமாக இருந்தது. அதன் பின் சென்றடைந்த சியால்கோட்டில் ஒரு ஸ்போர்ட்ஸ் கம்பெனியின் ரெப்ரசண்டேட்டிவ் வேலை கிடைத்தது. ஃபுட்பால், டென்னிஸ், பேட்மிண்டன் தொடங்கி ஸ்போர்ட்ஸ் பொருள்களை விற்கும் ஏஜென்ஸி அது.

இறுதியில் இந்தத் தொழிலோடுதான் பஷீர் ஊருக்குத்திரும்பி வந்தார்.

## ஏழு

நீண்டதொரு பயணத்துக்குப் பின் இறுதியில் எர்ணாகுளத்துக்கு வந்து சேர்ந்தார் பஷீர். இப்போது அவருக்கு ஒரு வேலை உண்டு. அவர் மட்டாஞ்சேரியிலிருந்த பழைய பயங் கரவாதி இல்லை. ஸ்போர்ட்ஸ் கம்பெனி ஏஜெண்ட்! ஃபுட்பால், டென்னிஸ், பேட் மிண்டன் என்னும் விளையாட்டுகளுக்கான பொருள்களைத் தயாரிக்கும் ஒரு கம்பெனி யில் ரெப்சண்டேட்டிவ். மிகவும் எடுப்பான தோற்றத்தில்தான் அவருடைய நடவடிக்கை யும் பார்வையும் இருந்தன. அப்போது அவர் கதர் அணிந்த பழைய சுதந்தரப் போராட்ட வீரர் இல்லை; ஃபுல் ஸூட் ஹேட் அணிந்த ஒரு நவ நாகரீக மனிதர். ஆனால், அவர் பயணம் செய்வதற்கு ஒரேயொரு சைக்கிள் மட்டும்தான் இருந்தது!

இவ்வாறு இருக்கும்போதுதான் ஒரு நாள் ஒரு விபத்து நேர்ந்தது. சண்முகம் சாலை வழியாக பலதைப் பற்றியும் சிந்தித்துக்கொண்டு மிக வேகத்துடன் சைக்கிளில் வந்து கொண்டிருந் தார் பஷீர். இந்த இடம் இறக்கமான வழியாகும். சைக்கிளின் முன் பகுதியில் விளக்கு உள்ள இடத்தில் பேக்கைத் தொங்கவிட்டிருந்தார். அந்த பேக்தான் அவர் விற்கும் பொருள்களின் சாம்பிள் பெட்டி, வேகமாக வந்த சைக்கிள் திடீரென ஒரு

குழியில் விழுந்தது. பஷீர் தூக்கியெறியப்பட்டார். சைக்கிளும் பஷீரும் நடு ரோட்டில் கிடந்தார்கள். அந்த விபத்தில் பஷீரின் ஒரு காலும் ஒடிந்தது. இந்த நிகழ்ச்சியைத்தான் 'இளம்பருவத்துத் தோழி'யில் விவரமாகக் கூறுகிறார்.

'அன்று திங்கள் கிழமை-நல்ல மதிய நேரம். வழக்கம்போல் சைக்கிள் ஓட்டிக்கொண்டு வருகிறான்; அதுவும் நல்ல வேகத்தில். சாம்பிள் பொட்டி குலுங்கிக் குலுங்கி அதனுடைய கைப்பிடி நைந்து அறுந்து விழுந்து சக்கரத்தின் நடுவே மாட்டிக் கொண்டது. மஜீத் சைக்கிளிலிருந்து தூக்கியெறிப்பட்டு கம்பி வேலியில் மோதி கீழேயுள்ள ஆழமான சாக்கடையில்....'

அதன்பின் சில நாள்கள் வரையில் ஸ்போட்ஸ் கம்பெனியில் ஏஜெண்டாக செயல்பட முடியுமோ? அதனால், அங்கே பழக்கப் பட்ட சிலரின் உதவியுடன் முஸ்லிம் ஹாஸ்டலில் தங்கினார். கையிலிருந்த கொஞ்சம் பணமும் தீர்ந்தது. அதன்பின்பு சாப்பிடு வதற்கு பணம் வேண்டுமே - அதனால் தன்னிடமிருந்த சாம்பிள் பொருள்களை விற்றார். கடைகளிலிருந்து வரவேண்டிய பணத்தையும் வாங்கினார். ஆனால், கதை கம்பெனிக்கு அனுப்பத்தான் முடியவில்லை. அதனால் அந்த வேலையையும் இழக்க வேண்டியதாயிற்று. கோட்டையும் சூட்டையும் கழட்டி விற்றார். பைஜாமாவையும் ஜிப்பாவையும் அணிந்தார். அவரின் அந்த வேடத்தை யாராக இருந்தாலும் ஒருமுறை பார்த்து விட்டே செல்வார்கள்!

கால் ஒடிந்து சரியாகிவிட்டாலும், சாப்பாட்டுக்கு வழியில்லாமல் போய்விட்டது. வீட்டில், இரண்டு சகோதரிகள் வீடு நிறைந்து நிற்கிறார்கள். தம்பிகள் படிக்கிறார்கள். வாப்பாவுக்கும் உம்மாவுக்கும் வயதாகிவிட்டது. அதனால் மீண்டும் ஊருக்குச் செல்வதால் மட்டும் என்ன புண்ணியம்? அதன்பின்தான் முகலட்சணத்தை வைத்து ஜோதிடம் கூறத் தொடங்கினார். கை ரேகையும் ஹிப்னாடிஸமும் மேஜிக்கும் எல்லாம் சொல்லிப் பார்த்தார். இவையெல்லாம் அவர் பயணத்தில் கற்றுக் கொண்டவையாகும். ஆனால், அவை எர்ணாகுத்தில் விலை போகவில்லை. ஒருநாள் எர்ணாகுளத்திலுள்ள ஒரு பத்திரிகை அலுவலகத்துக்கு பஷீர் சென்றார்.

அது 'ஜெயகேஸரி' பத்திரிகை. 'பத்மனாப பை' என்பவர்தான் ஆசிரியர். பஷீர் நேரே ஆசிரியரிடம் சென்று தமக்கு ஒரு

வேலைக்கு விண்ணப்பித்தார். பஷீரின் வேண்டுகோளைக் கேட்டுவிட்டு 'பத்மனா பை' குலுங்கிக் குலுங்கி உரக்கச் சிரித்தார்.

'இங்கு யாரும் வேலை தேடி வந்ததில்லை...' என்று பஷீரை நோக்கி பை கூறினார்: 'நான் ஜெயகேஸரியின் ஆசிரியர்தான். இருந்தாலும் இந்தப் பத்திரிகையைத் தயாரிப்பதும், கம்போஸ் செய்வதும் அச்சடிப்பதும் விற்பதும் எல்லாம் கூட நானேதான்...'

இருப்பினும் பத்மனாப பை பஷீரை நிராசைப்படுத்தவில்லை 'உங்களுக்குக் கதை எழுதத் தெரியுமோ? தெரியுமென்றால் காசு கொடுக்கிறேன்...' என்று உறுதியளித்தார்.

பஷீரிடம் ஒருவன் முதன்முதலாக கதை கேட்கிறான்! அதை எப்படி எழுதுவது என்பதுதான் தெரியவில்லை. முஸ்லிம் ஹாஸ்டலுக்குத் திரும்பினார். தன் நண்பரின் அறைக்குச் சென்றார். ஜன்னலைத் திறந்து வெறுமனே வெளியே பார்த்துக் கொண்டு நின்றார். சாலையையும் அதன் அருகிலுள்ள தண்ணீர் பைப்பையும் நோக்கினார். அந்த பைப்பிலிருந்து தண்ணீர் கொண்டு போவதற்காக ஏராளமான பெண் பிள்ளைகள் வருகிறார்கள். அவர்களில் ஒரு கருப்புப் பெண்ணைக் கண்டார். அவளைப் பற்றி ஒரு கதை எழுதினால் என்ன என்று ஆலோசித்தார்.

அக்காலத்தில் பிரபுக்களும் அரசர்களும்தான் கதைகளின் நாயகர்கள். இளவரசிகளும் பணக்காரிகளும்தான் நாயகிகள். ஆனால், தான் ஒரு கருப்பு நிறக் கூனியைப் பற்றி கதை எழுதவேண்டுமென எண்ணினார். அவள் பைப்பில் தண்ணீர் எடுப்பதற்குச் சென்றபோது, தன் நடையுடை பாவனைகளையும் தளுக்கு மினுக்குகளையுமெல்லாம் ஒதுக்கியிருந்தாள். அவளின் குணாதிசயங்களை வைத்துதான் 'என் தங்கம்' என்னும் முதல் கதையை எழுதினார். பஷீர் என்னும் இலக்கியவாதியின் பிறப்பு அப்போதுதான் நடந்தது. 'ஜெயகேஸரி'யில் மேலும் இரண்டு கதைகளும் வந்தன. கதை எழுதியதால் கொஞ்சம் காசும் கிடைத்தன. அதனால் தன் பட்டினியும் மாறும் என்ற நிலை ஏற்பட்டது. ஜெயகேஸரியின் முன்னாலிருந்த ஹோட்டலில் இருந்துதான் உணவையும் டீயையும் சாப்பிடத் தொடங்கினார். ஆனால் சில நாள்கள் கழிந்ததும் பத்மனாப பை பட்டாளத்தக்குப் போய் விட்டார். ஜெயகேஸரியும் அத்துடன் மூடப்பட்டது.

அந்தக் காலத்தில் எர்ணாகுளத்திலிருந்து தாமஸ் பால் என்பவரை ஆசிரியராகக் கொண்டு 'தீபம்' என்னும் இதழ் வந்தது. பஷீர்

அதில், 'அதிர்ஷ்டம் கெட்ட என் தேசம்' என்னுமொரு கட்டுரை எழுதினார். திருவிதாங்கூரைப் பற்றியும், சர்.சி.பி.ராமசாமி ஐயரைப் பற்றியும்தான் அதன் உட்கருத்தாக இருந்தது. உடனே 'தீபம்' திருவிதாங்கூரில் தடை செய்யப்பட்டது. இதே காலத்தில் தான் 'பட்டத்தின் பேய்க்கனவு' (பட்டம்தாணு பிள்ளையின் பேய்க்கனவு) என்னும் நாடகமும் எழுதினார். அப்போது பட்டம் தாணுப்பிள்ளை மாநில காங்கிரஸின் தலைவராக இருந்தார். போராட்டத்தாலும் அடியுதையினாலும் இறந்துவிட்டவர்களை இன்னும் உயிரோடுதான் இருக்கிறார்கள் என்று சி.பி. பொய் சொல்லித் திரிந்த காலம். அதை மனத்தில் வைத்துக் கொண்டு நகைச்சுவையும் கிண்டலுமாக எழுதப்பட்டதுதான் 'பட்டத்தின் பேய்க் கனவு' என்னும் நையண்டி விமரிசனமாகும். இதுவேதான் பஷீரின் லட்சியமும்கூட. 'பட்டத்தின் பேய்கனவு' திருவிதாங் கூரில் தடை செய்யப்பட்டது. பஷீரை கைது செய்வதற்கும் உத்தரவிடப்பட்டது. காயங்குளத்திலுள்ள தேசபக்தி அச்சகத்தில் தான் அந்த நாடகம் அச்சிடப்பட்டது. அதனால் அந்த அச்ச கத்தைப் பூட்டி, அதன் உரிமையாளரையும் கைது செய்தார்கள்.

பஷீரைக் கண்டுபிடிக்கவும் தண்டனை அளிக்கவும் போலீஸார் பறந்துகொண்டிருந்தார்கள். அந்த வகையில் தலையோலைப் பறம்பிலுள்ள பஷீரின் சொந்த வீட்டுக்கும் போலீஸார் சென்றார் கள். அதற்கு முன்பாக வைக்கத்தைச் சேர்ந்த பழக்கப்பட்ட ஒரு போலீஸ்காரன் பஷீரின் வீட்டுக்குச் சென்று, ''பெரியதொரு போலீஸ் கூட்டம் இன்னும் கொஞ்ச நேரத்தில் பஷீரைப் பிடிப் பதற்காகவும் வீட்டை ஜப்தி செய்வதற்காகவும் வர இருக்கிறார் கள்'' என்று பஷீரின் தம்பி அப்துல் காதரிடம் விவரம் கூறினான்.

அதனால் பஷீரின் பெயரில் உள்ளதையும் பஷீரினுடையது என்று தோன்றக் கூடியதுமான பொருள்களையெல்லாம் மறைத்து வைத்ததோடு மட்டுமல்லாமல், கட்டில் முதல் உரல்கள் வரை யுள்ள மறைக்க முடியாத பொருள்களின் மேலெல்லாம் அப்துல் காதர் என்னும் தன் பெயரையும் செதுக்கினார் பஷீரின் தம்பி.

அந்த போலீஸ்காரன் வந்து சொன்னதைப் போலவே போலீஸ் காரர்கள் பஷீரின் வீட்டுக்கு வந்தார்கள். வீட்டையும் ரெய்டு செய்தார்கள்; ஆனால் வீட்டில் அவர்களுக்கு எதுவும் கிடைக்க வில்லை. மூன்று நான்கு தடவை இதே பாணியில் மீண்டும் மீண்டும் வந்தார்கள். பஷீரைப் பற்றிய விஷயங்களை உம்மாவிட மும் வாப்பாவிடமும் விசாரித்தார்கள். அவர்களுக்கு பஷீரைப்

பற்றிய எந்த விஷயங்களும் தெரியாததோடு மட்டுமல்ல, பயந்தும் போனார்கள்.

''அவன் வலதுகையை அடித்து முறிக்காமல் விடமாட்டோம்'' என்று உம்மாவை நோக்கிக் கூறிய ஒரு போலீஸ் அதிகாரி, ''நீ ஏண்டி அவனைப் பெத்தே?'' என்று ஆக்ரோஷமாகவும் கர்ஜித்தான்.

பஷீரோ எதற்கும் கவலைப்படாமல் தன் எண்ணத்தில் உறுதியாக இருந்து எழுதிக் கொண்டுதான் இருந்தார். 'தர்மராஜ்யம்' என்னும் புத்தகத்தை கொண்டுவந்தார். அதன் விலை அன்றைய அரை யணா (மூன்று காசுகள்). திருவிதாங்கூரில் 'தர்மராஜ்ய'த்தையும் தடை செய்தார்கள். இதற்கிடையே 'பௌரநாதம்' என்ற இதழி லும் கட்டுரைகள் எழுதினார். மூன்று இதழ்கள் வந்ததும் அதை யும் தடை செய்தார்கள். அதற்கு அடுத்த இதழ் சிறப்பிதழாக வெளியே வந்தாலும், அதன்பிறகு இதழ் அச்சேறவில்லை.

எர்ணாகுளத்தில் தங்கியிருந்தபோதுதான் 'பால்யகால சகி' (இளம்பருவத்து தோழி)யை பஷீர் எழுதினார். அதை இருபது முறைகளாவது திருத்தித் திருத்தி எழுதியிருப்பார். அதற்கு ஒன்றரை மாதம் கடினமான உழைப்பு தேவைப்பட்டது. ஆனால், இந்த நாவலை அப்போதைக்கு அச்சேற்ற முடியவில்லை. பஷீருக்கு அப்போது பெரிய பொருளாதார நெருக்கடி ஒன்று மில்லை. அதனால் அது மெல்ல வெளி வந்தாலே போதும் என்று தனக்குத்தானே கருதிக் கொண்டார்.

பஷீர் அப்போதெல்லாம் கிழிந்த கதர் ஜிப்பாவுடன்தான் காலம் தள்ளினார். துவைத்துத் துவைத்து முற்றிலும் கிழிந்துபோன ஜிப்பாவை அணிந்துகொண்டு வெளியேற முடியாத நிலை வந்தபோதுதான் பகல் முழுவதையும் அறைக்குள்ளேயே சுருண்டு படுத்து பொழுது போக்கினார். இருள் சூழ்ந்தவுடன் தான் வெளியேறுவார். காரணம், இருளில் அந்த ஜிப்பா கிழிந்திருக்கிறதா அழுக்காக இருக்கிறதா என்று யாரும் கவனிக்க மாட்டார்களே!

அன்றைய காலகட்டத்தில் எர்ணாகுளத்தில் பஷீருக்கு, போஞ்ஞிக் கரை ராபியும், பி.எஸ். தாமோதரனும்தான் முக்கிய சீடர்களாக இருந்தார்கள். கைது செய்வதற்கு முன்புதான் வெள்ளை கதர் ஜிப்பாவை பஷீர் தாமோதரனிடம் கொடுத்தார். அதுமட்டுமல்ல,

'பாரத மாதா' என்னும் சிறுகதையின் அட்டைப் பக்கத்தை அச்சிடுவதற்கான அதிகாரத்தையும் அவருக்கே அளித்தார். பஷீர் சிறைச்சாலையில் அடைபட்டதும் ராபியும் தாமோதரனும் சேர்ந்து எப்படியோ பணம் புரட்டி 'பாரதமாதா'வை அச்சிட்டார்கள். அவர்கள் இருவரும் அதன் வெளியீட்டாளர்களாகவும் இருந்தார்கள். அதிலுள்ள முன்னுரையை தாமோதரன் எழுதினார். அவர்கள் அதை எர்ணாகுளத்துக்கும் கொச்சிக்கும் நடந்து சென்றே விற்றார்கள்.

பஷீர் திருவிதாங்கூருக்குச் செல்லும்போது ராபியிடம் சில கடிதங்களை அளித்தார். அவற்றில் சில அவருடைய நண்பர்கள் அவருக்கு அனுப்பிய கடிதங்கள். எல்லா கடிதங்களையுமே கொளுத்திவிட வேண்டும் என்று ராபியிடம் பஷீர் கேட்டுக் கொண்டார். ஆனால் அவற்றில் சிலவற்றை ராபி பாதுகாப்பாக வைத்துவிட்டார். அவற்றை எரிப்பதற்கு அவருக்குத் தோன்றவில்லை.

எர்ணாகுளத்தின் வாழ்க்கை பஷீரை முழுப் பட்டினியில் கழிக்க வைத்தது. வயிறுமுட்ட சாப்பிடுவது என்பது பஷீரைப் பொருத்த மட்டில் அப்போது தொலைதூர கனவாகவே இருந்தது. தண்ணீரைக் குடித்தும், சிலசமயம் டீயைக் குடித்துமே காலத்தைத் தள்ளினார். யாரிடமும் கடன் சொல்வதுமில்லை. என்றாலும், தனிமையில் விரக்தியுற்றவராகத்தான் பஷீர் நாள்களைத் தள்ளினார்.

பஷீரின் இந்தக் காலகட்ட வாழ்க்கை நிலையை நேரில் கண்ட போஞ்ஞிக்கரை ராபி, பிற்காலத்தில் தான் எழுதிய நினைவுக் குறிப்பில், கீழ்வருமாறு எழுதியுள்ளார்:

ஒருநாள் பஷீரைக் காண்பதற்காக அவர் தங்கியிருந்த இடத்துக்கு ராபி சென்றார். அப்போது உற்சாகமெல்லாம் இழந்து நிராசையடைந்த பஷீரைத்தான் கண்டார். ராபியை நோக்கிக் கொண்டிருந்த அந்தக் கண்கள் பற்றி எரிகிறதா இல்லை கண்ணீரால் நிறைகிறதா என்று தெளிவில்லாமல் இருந்தன.

''முகம் சோர்ந்து ரொம்பவும் களைத்துப் போயிருந்தீர்களே ஏன்?'' என்று ராபி கேட்டார்.

''ஆங்... சும்மா...'' என்று ஆயாசப்பட்ட பஷீர், ''நான் கொஞ்சம் தூங்கிக்கிட்டு இருந்தேன்'' என்று கூறினார்.

சுட்டெரிக்கும் வெயிலில் மூழ்கித் திளைக்கும் அந்தச் சூழ்நிலை ஊமை வேடம் பூண்டிருந்தது. அந்த நிமிடத்தில் தன் தலை முடியைப் பிடுங்கிக் கொண்டிருந்தார் பஷீர்... ஆம், எந்த உணர்வுமற்ற நிலையில் செய்வது போன்றுதான் காட்சியளித்தார் அவர்.

''ராபி, என்ன விசேஷம்?'' என்று கேட்டார் பஷீர்.

''ஒரு கதை எழுதியிருக்கிறேன்.''

பஷீர் சிரித்தார்; ஓசையில்லாத ஒரு சிரிப்பு அது.

''கதையைக் கொண்டா...''

கதையை வாங்கிப் படித்து முடித்தார் பஷீர். ஆனால் கவனம் மட்டும் வேறு எங்கேயோ இருந்தது.

அப்போதுதான் பஷீரின் உதவியாளனான சுவாமி என்னும் பையன் அங்கு வந்து சேர்ந்தான்.

''என்ன கிடைச்சுது சுவாமி?''.

இயல்பாகவே சோம்பித் திரியும் சுவாமி, அந்த நேரத்தில் முற்றிலும் சோர்ந்துபோய் இருந்தான். எண்ணெய் காணாமல் பரந்து கிடந்த தலைமுடியை வலது கையால் பின்பக்கமாகத் தள்ளி ஒதுக்கியவாறே, ''நாலரையணா கெடைச்சுது'' என்று கூறினான்.

திடீரென்று, ஆசுவாசம் அடைந்ததைப் போன்ற ஓர் ஒளி பஷீரின் முகத்தில் பரவியது.

''ரைட், இப்போ நாம பெரும் தனவந்தராக இருக்கிறோம். நீ ஒரு டீ குடித்துக் கொள். அப்புறம் எங்களுக்கு ரெண்டு டீயும் திங்கறதுக்கு ஏதாச்சும் வாங்கிக்கொண்டு, அரையணாவுக்கு பீடியும் வாங்கி வா...''

''நீங்க முந்தாநாள் ராத்திரி சாப்பிட்டதாச்சுங்களே சார்?'' என்று கேட்டு நினைவூட்டிய சுவாமி, ''நேத்து மத்தியானமும் டீ, ராத்திரியும் டீதான். இன்னிக்கும் இதுவரைக்கும் ஒண்ணுமே சாப்பிடல. அப்புறமும் டீயா?'' என்று கேட்டு நிறுத்தினான்.

(சுவாமி என்ற இந்த பையனைப் பற்றி வேறொரு இடத்தில் சொல்லப்பட்டுள்ளது).

''சாப்பாடு சாப்பிடலாம்னு சொல்றியா சுவாமி?'' என்று கேட்ட பஷீர், சுவாமியிடமிருந்து கண்களை விலக்கிக்கொண்டு ராபியை நோக்கித் திரும்பி, ''நீ இன்னும் சாப்பிடலையே?'' என்று கேட்டு முடித்தார்.

''வேணாம். நான் இப்போதுதான் காப்பி குடிச்சிட்டு வறேன்.''

''இருக்கட்டுமே! நாம ஒண்ணா சாப்பிடலாம். அதான் நல்லது...'' என்ற பஷீர் சுவாமியிடம், ''சாப்பாடு ரெண்டணா தானே? இன்னும் ஒண்ணரையணாவுக்கு எக்ஸ்ட்ரா சோறு வாங்கிக்க. நாம மூணு பேருக்கும் அப்படி வாங்கினாதான் சரியா இருக்கும். அப்புறம் அரையணாவுக்கு பீடியை வாங்கிக்க...'' என்று கட்டளையிட்டார்.

வெளியேறிய சுவாமி, உடனே திரும்பி வந்தான். ஹோட்டலில் சோறு தீர்ந்துவிட்டிருந்தது. டீயையும் பீடியையும் மட்டுமே உண்டு உயிர்வாழ்ந்த அந்த நாள்கள் -

வேறு வழி எதுவும் இல்லை என்றானதும்தான் பஷீரின் கதை கட்டுரைகள் வெளிவந்த 'உஜ்ஜீவனம்', 'மாத்ருபூமி', 'நவஜீவன்' போன்ற பத்திரிகைகளைத் தூக்கிச் சென்று விற்று நான் கணாவைக் கொண்டு வந்தான். தன் அறையில் பாதுகாப்பாகச் சேகரித்து வைத்திருந்த அந்தப் பத்திரிகைகள் பஷீரைப் பொருத்த மட்டில் ஒருவேளை உணவுக்கான பொருள்களாக மட்டுமே அப்போதைக்குத் தெரிந்தன...

எர்ணாகுளத்தில் வாழ்ந்த இந்தக் காலகட்டத்தில்தான் பஷீருக்கு கம்யூனிஸ்ட் தலைவர்களும் தொண்டர்களும் நண்பர்களாக இருந்தார்கள். பி.கிருஷ்ணப்பிள்ளை, கே.தாமோதரன். பி.டி.புன்னூஸ், எம்.என்.கோவிந்தன்நாயர், என். ஸ்ரீகண்டன் நாயர், ஆர்.சுதன், சி.உண்ணிராஜா போன்றவர்கள். இவர்களைத் தவிர கே.சி.ஜார்ஜுடன்தான் நெருங்கிய நட்புறவை பஷீர் கொண்டிருந்தார்.

மாநில காங்கிரஸுக்கு எர்ணாகுளத்தில் ஒரு முகாம் உண்டாகி யிருந்தது. தலைவர்களெல்லாம் திருவிதாங்கூரில் நடக்கும் கைதுக்குப் பயந்து எர்ணாகுளத்துக்கு வந்து தங்கியிருந்தார்கள். இக்காலத்தில்தான் தோழர் கே.சி. ஜார்ஜ், பஷீருக்கு அருகி லுள்ள ஒரு கட்டடத்தின் அறையில் தங்குவதற்காக வந்து சேர்ந்தார்.

அப்போது அவர்கள் ஒருவருக்கொருவர் மிகவும் விரும்பினார்கள். அந்த நேரத்தில் சர்.சி.பி. திருவனந்தபுரத்திலிருந்து ஓர் அறிவிப்பை வெளியிட்டார். எர்ணாகுளத்தில் எங்கேயோ ஒரு கம்யூனிஸ்ட் டென் (தங்குமிடம்) உண்டு என்று. அதாவது அவர் பார்வையில் மாநில காங்கிரஸ் அனுதாபிகளெல்லாம் பயங்கரமான கம்யூனிஸ்டுகளாவர். அந்த அறிவிப்பைத் தொடர்ந்து எர்ணாகுளத்திலுள்ள போலீஸ்காரர்கள் கம்யூனிஸ்ட் வேட்டைக்கு இறங்கினார்கள். சி.ஐ.டி.க்களை அனுப்பினார்கள். ஆனால் யாரும் பிடிபடவில்லை.

ஒருநாள், கே.சி. ஜார்ஜை போலீஸ் கைது செய்துவிட்டார்கள் என்னும் செய்தியை 'லெயின் போட்டின் செராங்க்' வந்து பஷீரிடம் கூறினான். இதைக் கேட்டவுடன் ஜார்ஜின் அறையிலிருந்த சிறு குறிப்புகளையும் ரகசிய கடிதங்களையும் பஷீரும் சுவாமியும் சேர்ந்து எடுத்து மறைத்தார்கள். அதன்பின் அவற்றை ஒரு நண்பனின் வீட்டில் கொண்டுபோய் வைத்தார்கள். அவர்கள் யூகித்ததைப் போலவே மறுநாள் போலீஸார் வந்து அறையை ரெய்டு செய்தார்கள். ஆனால், அவர்கள் கைக்கு ஒன்றும் கிடைக்கவில்லை.

ஆனால், வெளியே வந்த செய்தியோ, 'எர்ணாகுளத்தில் இருந்த கம்யூனிஸ்ட் டென்னை போலீஸ் வளைத்ததோடு, ஏராளமான ரகசிய குறிப்புகளையும் பறிமுதல் செய்திருக்கிறார்கள். இந்தக் கூட்டத்தில்தான் திரு.கே.சி. ஜார்ஜூம் தங்கியிருந்தார்...' என்றிருந்தது.

'கம்யூனிஸ்ட் டென்' என்னும் கதையில் பஷீர் இந்தச் சம்பவத்தை நினைவூட்டுகிறார்.

## எட்டு

பஷீரின் வாழ்க்கையை மிகவும் அதிகமாகக் கவர்ந்த ஒரு மனிதர் இலக்கிய விமரிசனத்தின் தந்தை என்று கூறப்படும் எம்.பி. பால்தான். எர்ணாகுளத்தில் வாழ்ந்த காலத்தில் அறிமுக மான பால், பஷீரை ஒரு சொந்த சகோரனைப் போலவே நேசித்தார். எழுத்து விஷயத்தில் மட்டுமல்லாமல், சிறையில் கிடக்கும் போதும்கூட பால் பஷீருக்கு ஊன்றுகோலாக வும் நிழலாகவும் இருந்தார்.

எர்ணாகுளத்திலுள்ள பால்ஸ் டியூட்டோரிய லில்தான் பஷீர் எம்.பி. பாலை நேரில் சந்தித் தார். மகாகவி புத்தன்காவு மாத்தன் தரகன் அந்த டியூட்டோரியல் கல்லூரியில் மலை யாள மொழி வகுப்பில் பேராசிரியராக இருந்தார். அப்போது பஷீர் எர்ணாகுளத்தில் ஸிதிஸ் பில்டிங்கில் கரிபிடித்து மிகவும் இருளான ஓர் அடுக்களையில் தங்கியிருந் தார். பழைய பத்திரிகைகளை விரித்துப் போட்டு, அதில்தான் படுத்துத் தூங்குவார். அந்த அறையின் வாடகை மாதம் ஐம்பது பைசாதான். அதையும்கூட அவரால் தவறா மல் கொடுப்பதற்கு முடியாது. அந்த நேரத் தில்தான் மாத்தன் தரகர் பஷீரை அழைத்துச் சென்று பாலிடம் அறிமுகப்படுத்தினார். தான் கதைகள் எழுதும் விஷயத்தை பஷீர் சொன்னதும், அவற்றையெல்லாம் பார்க்க

வேண்டுமே என்றார் பால். தினசரிகளிலும் வார இதழ்களிலும் வந்த கதைகளைக் கத்திரித்து அழகாக அடுக்கிக் கட்டி வைத்திருந்தார் பஷீர். அவற்றையெல்லாம் பாலிடம் கொண்டுபோய் கொடுத்தார். பாலும் அவற்றையெல்லாம் படித்துவிட்டு,

''கதைகளெல்லாம் பரவாயில்லை. ஆனால், உங்கள் எண்ணங்களுக்குத்தான் தீ பிடித்துள்ளது. சில கதைகள் கலாசாரத்தின் எல்லையையே கடந்துவிட்டது. கொஞ்சம் கட்டுப்பாடு தேவை..'' என்று கூறினார்.

ஒருமுறை 'பெண்' என்றொரு குறுநாவலை எழுதி பாலிடம் காண்பித்தார் பஷீர்.

பால் அதைப் படித்துவிட்டு, ''கலாசாரம், காமவிகாரம் போன்றவற்றின் எல்லைகளெல்லாம் இதில் தகர்ந்துபோய் இருக்கின்றன! எண்ணமும் கொழுந்துவிட்டு பற்றுகிறது. அதனால் இதைப் படிக்கும் பிள்ளைகள்...!'' என்றவர் சிறிதுநேரம் சென்ற பிறகு, ''இந்த 'பெண்' நாவலை வெளியிடலாம் என்றோ, வெளியிட வேண்டாம் என்றோ நான் சொல்லமாட்டேன். உங்க விருப்பம்போல செய்யுங்கள் பஷீர்...'' என்று கூறினார்.

ஆனால், பஷீர் அந்த நாவலை வெளியிடவில்லை. அதற்குப் பதில் அதை சுக்குநூறாகக் கிழித்து காயலில் விசிறினார்... கொஞ்சம் கட்டுப்பாடு வேண்டும் என்ற பாலின் வார்த்தைகளை தன் மனத்தில் செதுக்கி வைத்துக் கொண்டார் பஷீர். அதற்கிடையே 1942-ல் டுட்டோரியல் கல்லூரியை கோட்டயத்துக்கு மாற்றினார் எம்.பி.பால். அதனால் பஷீரும் கோட்டயத்துக்குச் சென்றார். அங்கே 'நாகம்படத்தில்' என்னுமிடத்தில் ஒரு வாடகை வீட்டில் பஷீர் தங்கினார். போஞ்ஞிக்கரை ராபி, கே.எஸ்.நாராயணப்பிள்ளை, டாக்டர் கே.அய்யப்பப் பணிக்கர் போன்றவர்களெல்லாம் நாகம்படத்தில்தான் தங்கியிருந்தார்கள்.

அதைப்பற்றி அய்யப்பப் பணிக்கர், ''இரவில் நடக்கும் காட்சிகள் மிகவும் வித்தியாசமாக இருந்தன. பஷீரின் அறையிலிருந்து பங்கஜ் மல்லிக், கே.சி.டே., சைக்கால் ஆகியோரின் கிராமபோன் இசை மென்மையாக உயரும். நாங்களெல்லாம் தூங்கிய பிறகுதான் பஷீர் தன் சொந்த உள் உலகத்துக்குள் புகுவார். 'தேரே மந்திர் காஹூ தீபக் ஜல் ரஹா...', 'மே ரோஹிம்', 'ஸோஜா ராஜகுமாரி', 'ஜகாதக்திர் முஜே இத் நா பதாதோ...' என்பன

போன்ற கானங்கள் சுற்றுச் சூழலில் சிறிய அலைகளை யுண்டாக்கி உயரும்போது, பிராந்தி, விஸ்கி, பீர் ஆகியவற்றின் பாட்டில்கள் திறக்கப்படும். சில சமயங்களில் ராபியும் சேர்ந்து அவர்களுடன் அமர்ந்திருப்பார். உறுதியாகச் சொல்ல முடியாது. இருந்தாலும், காலையில் நாங்கள் விழித்து எழுந்து பார்க்கும் போது விஸ்கியில் பாதி மூழ்கிய கிராமபோன் ரிக்கார்டுகளும், முழுவதும் மூழ்கிய பாயும் அருகில் சுகநித்திரையில் பஷீரும் தெரிந்தார்கள். இந்தக் காட்சி தொடர்ந்தது. சில இரவுகளில் பிரத்யேகமான சில சத்தங்களையும் வேறு சிலவற்றையும் அந்த அறையிலிருந்து கேட்டுவிட்டு நாராயணப்பிள்ளையும் நானும் எழுந்துவிடுவதும் உண்டு...'' என்று தன் நினைவை வெளி யிட்டார்.

தொடக்கக் காலத்தில் பஷீரின் வாழ்க்கை, 'எதிலும் எந்தவொரு பிடிப்பும் இல்லை' என்பதுபோல்தான் இருந்தது. எழுதுவது, படிப்பது என்பதோடு பட்டினி கிடப்பதும் அவரின் பணியாக இருந்தது. இதே நேரத்தில் பஷீரின் சொந்த வீடான தலை யோலைப் பறம்பிலோ போலீஸ்காரர்கள் நுழைந்து வீட்டி லுள்ளவர்களைத் துன்புறுத்திக் கொண்டிருந்தார்கள். அவர்கள் வீட்டை வளைத்துக் கொண்டு பஷீரின் வாப்பாவையும் உம்மாவையும் சகோதர சகோதரிகளையும் வீட்டிலிருந்து வெளியேற்றி, மழையில் நிற்கவைத்து, ''வைக்கம் முகம்மது பஷீர் என்ற அந்த விபசாரியின் மகனை, ராஜத்துரோகத்தை எழுதிய அவனுடைய வலது கையை அங்குல அங்குலமாக நசுக்கி ஒடித்து, அந்தப் பொட்டைநாயின் மவனின் முது கெலும்பை பூட்ஸ் காலால் மிதித்தே ஒடிப்போம்'' என்று பயமுறுத்தினார்கள். இவற்றையெல்லாம் அறிந்த நண்பர்கள் பஷீரிடம், போலீஸில் ஆஜராகும்படி கூறினார்கள். அதன் பிரகாரம் கோட்டயம் போலீஸ் கமிஷ்னரின் முன்பு பஷீர் நேராகச் சென்றார். அடுத்த விநாடியில் திருவிதாங்கூர் போலீஸ் பஷீரைக் கைது செய்தது.

இது, சிறைவாசத்தின் இரண்டாம் கட்டம்.

இந்தியாவின் சுதந்தரத்துக்காக லாக்கப் அடியும் தண்டனையும் அனுபவித்துவிட்டு, நீண்ட ஒன்பதாண்டு காலம் அகண்ட யாகம்போல் பயணம் செய்து திரும்பிவந்தபோது பஷீர் ஓர் எழுத்தாளரானார். அதுவும் தன் வாழ்க்கையை ஓட்டுவதற்காக... ஹோட்டல் தொழிலாளியாகவும் மேஜிக்காரராகவும் கைரேகை

பார்ப்பவராகவும் பயணம் செய்து தேடிய அனுபவங்களுடன் திரும்பி வந்த பஷீருக்கு சொல்லவொண்ணாத வேதனைகள்தான் மீண்டும் கிடைத்தன. நாட்டின் சுதந்தரத்துக்காக போராடிய வேளையில் அடியுதை பெற்றும் மனம் தளராத அந்த இளைஞர், ஓர் எழுத்தாளன் என்னும் வகையில் சுதந்தரத்துக்காக மீண்டும் சிறையில் அடைக்கப்பட்டார்.

திருவிதாங்கூரை அரசாண்ட சர். சி.பி.க்கு எதிரான கட்டுரை களையும் நாடகங்களையும் எழுதியதால் கிடைத்த தண்டனை! இப்படி நாட்டுக்காகவும் இலக்கியத்துக்காகவும் சிறைவாசம் அனுபவித்து, அடியுதை பெற்று தண்டனையடைந்த ஓர் எழுத்தாளன் பஷீரைத் தவிர (மலையாள மொழியில்) வேறு யாருமில்லை.

கோட்டயம் போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்பில் சில நாள்கள் கழிந்தன. கோழிக்கோடு லாக்கப்பில் நடந்த அந்தக் கொடூரமான அடியுதை இன்னும் பஷீரின் நினைவில் இருந்தது. பி.சி. 207-ம் நம்பர் நம்பியாரின் உதைகளின் வேதனை இந்த நேரத்திலும் பஷீரின் மனத்தில் மறக்க முடியாத அனுபவமாக நிற்கிறது.

பஷீர் லாக்கப்பில் படுக்கச் சென்ற நேரத்தில் படுக்கையையும் மற்றவற்றையும் எம்.பி. பால் அவருக்குக் கொடுத்தனுப்பினார். அந்தக் காலத்தில் பால் கோட்டயத்தில் ஒரு முக்கிய புள்ளியாக இருந்தார். அவர் எல்லோரும் அறிந்த ஒரு குடும்பத்தின் மரியாதை மிக்க மனிதர். எல்லோரும் அவரை மதித்து நடந்தார்கள். விமரிசகர் என்ற நிலையில் இலக்கிய உலகிலும் முக்கியமானவராக இருந்தார். அதனால், கோட்டயம் லாக்கப் பில் பஷீருக்கு அடியுதை இல்லை. அங்கிருந்து கொல்லம் கஸ்பா போலீஸ் ஸ்டேஷனுக்கு மாற்றினார்கள். அங்கேயும் படுக்கை யையும் போர்வையையும் பால் அனுப்பி வைத்தார். எழுது வதற்கான தாள்களையும், கடிதம் போடுவதற்கான கார்டு, கவர்களையும் அனுப்பியதோடு, பணம் தேவைப்பட்டால் சொல்லியனுப்ப வேண்டும் என்னும் செய்தியையும் அனுப்பி னார். ஆனால் பஷீர் பணத்துக்கு மட்டிலும் பாலிடம் வேண்டு கோள் விடவில்லை.

எர்ணாகுளத்தில் இருந்து எழுதிய இளம் பருவத்துத் தோழி(பால்யகால சகி)யை கோட்டயத்தில் அச்சிடலாமென்று ஒரு தூதன் மூலம் பால் பஷீருக்குத் தெரிவித்தார். இப்போதைக்கு

அது வேண்டாம் என்று பஷீர் கூறினார். தண்டனை முடிந்து வந்தபிறகு இளம் பருவத்துத் தோழியை இன்னும் கொஞ்சம் திருத்தி எழுத வேண்டும் என்றும், சில மாற்றங்களைச் செய்ய வேண்டும் என்றும் பஷீர் பாலுக்கு செய்தி அனுப்பினார்.

1942-ல் தான் கொல்லம் கஸ்பா போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்பில் பஷீர் அடைக்கப்பட்டிருந்தார். அக்காலத்தில் கொல்லம் கடப் பாக்கடை ஸ்போர்ட்ஸ் அண்ட் ரீடிங்க் கிளப்பின் உறுப்பினர் களான கே.சந்திரசேகரன், பார்கவன், வித்யாதரன் என்பவர்கள் சேர்ந்து 'சகாவ்' என்னும் பெயரில் ஒரு கையெழுத்து மாத இதழை நடத்தினார்கள். இதனுடைய ஆண்டு மலருக்காக ஒரு கதைகேட்டு லாக்கப்பிலிருந்த பஷீரை வித்யாதரனும் நண்பர்களும் போய்ப் பார்த்தார்கள். அதற்குள் பஷீர் ஓர் இலக்கியப் படைப்பாளி என்ற வகையில் அங்கு புகழ் பெற்று விட்டிருந்தார். திருவனந்தபுரத்தி லிருந்து சி.வி. குஞ்ஞிராமனின் ஆசிரியர் பொறுப்பில் வெளிவந்த 'நவஜீவனி'ல் பஷீர் எழுதிய கதைகளும், சென்னையிலிருந்து டாக்டர் சி.ஆர். கிருஷ்ணப்பிள்ளையின் 'கேரளோபகாரத்'தில் எழுதிய 'பாரதமாதா'வும் கொல்லத்திலுள்ள முற்போக்கு சிந்தனை கொண்ட இளைஞர்களை ஈர்த்திருந்தது.

வித்யாதரன் சிறையிலிருந்த பஷீரைச் சென்று பார்த்து தாங்கள் வெளியிட இருக்கும் சிறப்பிதழுக்கான கதையைப் பற்றிக் கூறினார். அந்த நேரத்தில் பஷீர் வேறு சில விஷயங்களைச் சொல்லி தனக்கு உதவும்படி கூறினார். எர்ணாகுளத்திலிருக்கும் போஞ்ஞிக்கரை ராபி, பி.எஸ். தாமோதரன் என்பவர்களின் பெயருக்கு கடிதங்கள் அனுப்ப வேண்டும் என்றும், அவர்களின் பதிலைப் பெறுவதற்காக வித்யாதரன், தன் முகவரியில் இவற்றைச் செய்து தரவேண்டும் என்றும் கூறினார். அப்புறம் பீடி, தீப்பெட்டிகளைத் தனக்காக வாங்கி வந்து தரவேண்டும் என்றும், அதற்கான பணத்தைத் தானே கொடுத்து விடுவதாகவும் கூறினார்.

இப்படி சில நாள்கள் கழிந்தபோது கும்பளத்து சங்குப்பிள்ளை, டி.எஸ்.வர்கீஸ் என்பவர்கள் கைது செய்யப்பட்டு அங்கு அழைத்து வரப்பட்டார்கள். அதன்மூலம் பஷீருக்கு மேலும் இரண்டு நண்பர்கள் கிடைத்தார்கள்.

இதற்குள், கொல்லம் போலீஸ் லாக்கப்பும் பஷீருக்கு ஒரு திறந்தவெளி சிறையாகிவிட்டிருந்தது. தேவையான சுதந்தரமும்

அளித்திருந்தார்கள். இந்தக் கைதிகளைக் காண்பதற்காக சி.கேசவன் என்பவர் அடிக்கடி வந்து சென்றார். சொந்த நாட்டின் சுதந்தரத்துக்காக எழுதியதால் கைதான பஷீர், பட்டத்துவிளை கருணாகரனை இந்தச் சந்தர்ப்பத்தில்தான் அறிமுகம் செய்துகொண்டார். போலீஸ்காரர்களான சாக்கோ, இப்ராஹிம், ஜோசப், ராமன் நாயர், சேகரன் போன்றவர்கள் பஷீரின் நண்பர்களாக மாறியிருந்தார்கள். சில நாள்களில் அரை ராத்தல் முந்திரிப்பருப்பை வாங்கிவந்து பஷீரிடம் கொடுப்பார்கள். பாலின் கடிதங்களும் அடிக்கடி கிடைத்துக் கொண்டிருந்தன. அப்போதைய போலீஸ் இன்ஸ்பெக்டர் நாரா பிள்ளை. அவருக்கு பெயரே அடியுதை நாராபிள்ளை என்பது தான். கொல்லம் கஸ்பா ஸ்டேஷனிலிருந்து பஷீர் போஞ்ஞிக்கரை ராபிக்கு அனுப்பிய கடிதங்களின் மூலம் அக்காலத்தில் சிறை வாழ்க்கை எப்படிப்பட்டது என்பதை நமக்கு தெளிவாகத் தெரிய வைக்கிறது.

•

*வைக்கம் முகம்மது பஷீர் போஞ்ஞிக்கரை ராபிக்கு அனுப்பிய கடிதங்கள்.*

**வைக்கம் முகம்மது பஷீர்**

**கொல்லம் கஸ்பா போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்**

***28.3.118*(கொல்லமாண்டு)**

Dear Raphi,

துலாம் (ஐப்பசி) மாதம் பன்னிரண்டாம் தேதி என்னைக் கைது செய்த போலீஸார், பதிமூன்றாம் தேதி கோட்டயத்திலிருந்து இங்கே கொண்டு வந்தார்கள். வழக்கின் தீர்ப்பைச் சொல்வதற்கு இன்னும் ஒன்றிரண்டு மாதங்கள் ஆகலாம். குறைந்தது இரண்டு ஆண்டுகளாவது தண்டனை கிடைக்கும். இப்போது இந்த லாக்கப்பில் என்னோடு ஒரு மாணவன் பஷீரும் உண்டு.ஆகக்கூடி சுகம்தான். முழு விவரங்களையும் அடுத்த கடிதத்தில் எழுது வேன். தாமோதரனைப் பார்த்து விவரத்தைச் சொல்லுங்கள். நீங்களும் மற்றவர்களும் சுகம்தானே ராபி. இக்கடிதத்தோடு இரண்டு விதைகள் அனுப்பியுள்ளேன். அவை சிதையாமல் வந்து சேர்ந்தால் முளைக்க வையுங்கள். அது மிக உயரமாக வளரக்கூடியது. ஆண்டு முழுவதும் பழம் கிடைக்கக்கூடியது.

இன்னொரு விஷயமும் உண்டு. ஸ்ரீமாடமாக்கலிடம் சொல்லி, அவரிடம் ரூபாய் இருக்குமானால் வாங்கி எனக்கு மணியார்டர் செய்யுங்கள் என்பதுதான் அது. இங்கே எனக்கு பணம் மிகவும் தேவையாக இருக்கிறது. இரண்டு வேளை சோறும் ஒரு வேளை டீயும் மட்டும்தான் இங்கே அனுமதிக்கிறார்கள். பீடி, தீப்பெட்டி, சோப்பு, டீக்கெல்லாம் மிகவும் சிரமமாக இருக்கிறது. ஆப்ரஹாம் மாடமாக்கல் பணம் தந்தால் மட்டும் வாங்கி எனக்கு அனுப்பினால் போதும். வேறு வழியில் நீங்கள் கஷ்டப்பட வேண்டாம். பாரத மாதாவை புத்தகமாக்கினீர்களா? தாமோதரன் அதைப்பற்றிக் கூறுவார். அதன் விவரத்தைத் தெரிவிக்கவும். நீங்கள் என்ன செய்கிறீர்கள்? ஏதாவது எழுதுகிறீர்களா? விவரங்களைத் தெரிவியுங்கள். நலம்பெற வாழ்த்துகளுடன்,

வைக்கம் முகம்மது பஷீர்

•

**கொல்லம்**

***1.1.1940***

Dear Raphi,

கடைசியில், புத்தாண்டும் பிறந்துவிட்டது. நான் மிகவும் மனம் கலங்கி லாக்கப்பில் காலம் கழிக்கிறேன். இன்று காலையில் சுமார் ஒன்பது மணிக்கு நான் ஆடைகளைத் துவைத்துக் கொண்டிருந்தேன். அப்போது இன்ஸ்பெக்டர் இரு போலீஸ் காரனை இடித்துரைப்பதுபோல் சிலவற்றை என்னிடம் கூறினார். நான் அதைக்கேட்டு சிரிக்கவும் செய்தேன். அதன்பிறகு வேட்டியை வெயிலில் காயப்போடுவதற்காகப் போனேன். அதை கம்பி வேலியில் விரித்துப் போட்டுவிட்டு நிற்கும்போது, ஒரு போலீஸ்காரன், இன்ஸ்பெக்டர் என்னை அழைப்பதாக உரக்கக் கூறினான். நான் சென்றதும் இன்ஸ்பெக்டர் என்னிடம்,

''நீங்கள் மத்த ஆளுங்களுக்கு பீடியும் தீப்பெட்டியும் கொடுத்தீங்களா?'' என்று கேட்டார்.

''ஆமாம். ஆனால் அது கொஞ்ச நாளுக்கு முன்னாலதான். அதுக்குப் பிறகு நான் எதுவும் கொடுக்கவில்லை.''

எதனால் என்றால், ஆறேழு நாள்களுக்கு முன்னால் ஒரு லாக்கப் அறையிலிருந்து என்னவோ கரிந்து கருகல் துர்நாற்றம் வீசியது. விசாரித்தபோது, பழந்துணியைக் கிழித்து தீப்பற்ற வைக்கப் பார்த்திருக்கிறார்கள். லாக்கப்பைத் திறந்து ஆள் களையெல்லாம் வெளியேற்றி - கேள்வி மேல் கேள்வி கேட்கப்பட்டன. தீப்பெட்டியை யார் கொடுத்தது, என்று. ஆனால் யாரும் வாய் திறக்கவில்லை. ஒருவேளை குனிய வைத்து இடி இடிப்பதுபோல் அடித்ததும்தான், உடனே நானே உரத்த குரலில், ''அடிக்காதீங்க. தீப்பெட்டியை நான்தான் கொடுத்தேன்'' என்று அலறினேன்.

அதன்பிறகு அவனுக்கு அடி விழவில்லை. போலீஸ் என்னிடம், ''இனிமேல் கொடுக்காதீங்க'' என்று கூறினார்.

''இல்லை'' என்று நானும் ஒத்துக்கொண்டேன். ஆனால் அந்த விஷயத்தை இன்று இன்ஸ்பெக்டரிடம் சொல்வதற்கான அவசியம் இல்லை. இருந்தாலும், சொன்னேன். அதனால் இன்ஸ்பெக்டர் மற்ற போலீஸ்காரர்களிடம் ''மத்த குற்றவாளி களைப் போலவே பஷீரையும் ஜாக்கிரதையாக கவனியுங்க'' என்று கூறினார்.

அதனால், நான் இப்போது லாக்கப்பில்தான் இருக்கிறேன். முன்னைப்போல சுதந்தரம் எதுவும் இப்போது எனக்கு இல்லை. எல்லா குற்றவாளிகளும் இந்த விவரத்தை அறிந்து கொண்டார்கள். இருந்தாலும், ''சார், ஒரு துண்டு பீடி'' என்று கேட்கிறார்கள்.

இங்கேயுள்ளவர்கள் போலீஸ்காரர்களைவிட மோசமானவர்கள். இவர்களுக்கு தயவு தாட்சண்யத்தைக் காட்ட முடியாது. மிருகங் களைவிட மோசமானவர்கள்.

அது போகட்டும் போஞ்ஞிக்கரை. நீங்கள் இப்போது இவற்றையெல்லாம் கேட்டுவிட்டு மூச்சுத் திணறுகிறீர்கள் தானே? பரவாயில்லை. அங்கேயே இருங்கள். வேலைக்குப் போகவில்லையா? முழுநேர வொர்க்கராகச் சேருவது பற்றி மிகவும் யோசித்துச் செய்ய வேண்டும். நீங்கள் சேருவதால், உங்களுக்கும் உங்கள் செயல்பாட்டுக்கும் நன்மை கிடைக்கு மானால் சேருங்கள். ஆனால் நீங்கள் ஒரு கலைஞனாக்கும்.. அதனால், அது நன்றாக இருக்குமா? நானாக இருந்தால்

அப்படிச் சேர மாட்டேன்.. சரி இதை இத்தோடு முடித்துக் கொள்கிறேன். நலம் உண்டாக வாழ்த்துகளோடு,

உங்கள் வைக்கம் முகம்மது பஷீர்.

•

**வைக்கம் முகம்மது பஷீர்**
**கஸ்பா போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்**
**கொல்லம் - 3.4.118**

பிரியப்பட்ட ராபி,

இன்றைய பகல்பொழுதும் முடிந்துவிட்டது. நான் இந்தக் குளிர்ந்த லாக்கப் அறையில் என் படுக்கை பாயின்மேல் சுவரில் சாய்ந்து அமர்ந்தபடி எழுதுகிறேன். அரண்ட வெளிச்சம்தான் இருக்கிறது. கம்பி வலைகளின் வழியாக தயங்கித் தயங்கி பீதியோடு வருகின்ற வெளிச்சம்தான். சுதந்தரமான சூரிய ஒளியை இனி எப்போது காண்பேன் என்பது எனக்கு உறுதி யில்லை. இதை நான் வருத்தத்தோடு சொல்வதாக நினைக்கா தீர்கள். என் மனத்தில் இப்போது வருத்தமும் இல்லை. மகிழ்ச்சியும் இல்லை. இன்னும் ஒரு விஷயமும் சொல்ல வேண்டும். இப்போது எனக்கு கடுமையான காய்ச்சல் இருக் கிறது என்பதுதான். வாய் மிகவும் கசப்பாக உள்ளது. கொஞ்ச நாள்களாகவே இந்த நிலைமைதான். நான் இங்கே வந்ததைவிட இப்போது ரொம்பவும் இளைத்துப் போயிருக்கிறேன். நேற்றிலிருந்து வலதுகால் மூட்டில் ஒரு வீக்கம் வந்துள்ளது. அதில் கொஞ்சம் வலியுமுண்டு. இது இப்படியிருக்க, இனி என்னுடைய வழக்கைப் பற்றிச் சொல்கிறேன். என் வழக்கு எண் பி.இ.1-117 என்பது. மாவட்ட நீதிபதிதான் என் வழக்கை நடத்த வேண்டியவர். என்மேல் சுமத்தப்பட்டுள்ள குற்றம் ராஜத் துரோகம். அடுத்த வழக்கு நாள் தனுர் (மார்கழி) மாதம் 18-க்குத்தான். இதற்குள்ளேயே நான்கைந்து வாய்தா முடிந்து விட்டது. ஒவ்வொரு வாய்தா நாளன்றும் நீதிமன்றத்துக்குக் கொண்டு செல்வார்கள். அங்கேயுள்ள போலீஸ் அவுட் போஸ்டில் உட்கார வைப்பார்கள். மாலைநேரம் நெருங்கியதும் வழக்கு தள்ளி வைக்கப்பட்டுள்ளது என்று வாரண்ட்டில் எழுதிக்கொடுத்து அனுப்புவார்கள். நாங்களும் போய்விடு வோம். இப்படி ஏராளமான வாய்தாக்களை தள்ளித் தள்ளியே

லாக்கப்பில் வைத்து எங்களை வருத்த வேண்டுமென அரசாங்கம் நினைக்கிறதென்று தோன்றுகிறது. இதுவரையில், நீதிமன்றத் தில் நீதிபதியின் முன்னால் என்னை ஆஜராக்கியதே இல்லை. சில நாள்களுக்கு முன்னால் இங்குள்ள இன்ஸ்பெக்டர் மூலம் நீதிபதிக்கு ஒரு கடிதம் அனுப்பியிருந்தேன். அக்கடிதத்தில், 'என் வழக்கை நடத்தி விசாரிப்பதற்கு ஆர்வமில்லாத நிலையில் என்னை இப்படி லாக்கப்பில் வைத்து வருத்த வேண்டிய அவசியமில்லை என்றும் அதனால் வழக்கை விசாரித்து என்னை தண்டிக்க வேண்டும்' என்றும் எழுதியிருந்தேன்.

எப்படியோ, அடுத்த வாய்தா வரையில் பார்க்க வேண்டியது தான். அன்றும் இதேபோல்தான் என்றால் உண்ணாவிரதம்தான்.

ஒன்று வெளியே விட்டுவிட வேண்டும்; இல்லையென்றால் வழக்கை விசாரித்து தண்டிக்க வேண்டும் என்னும் குறிக் கோளுடன்தான் உண்ணாவிரதம். அவ்வாறு உண்ணாவிரதம் இருக்க வேண்டிய நிலை வந்தால் எவ்வளவு காலத்துக்கு என்பது எனக்கு உறுதியேற்படவில்லை. ஒருவேளை சாகும்வரையில் இருந்தாலும் இருக்கலாம்.

இன்னும் ஒன்றைப் பற்றியும் சொல்லவேண்டியிருக்கிறது. நான் உங்கள் எல்லோரையும் நேசத்துடன் நினைத்துக் கொண்டிருக் கிறேன் என்று சொல்ல வேண்டும். 'பாரத மாதா' வெளிவந்து விட்டால் உடனே எனக்கு ஒரு பிரதி அனுப்பிவையுங்கள். சில வழிகளின் மூலம் பணம் கிடைக்கும் என்றுதான் நான் உத்தேசித் திருந்தேன். ஆனால் கிடைக்கவில்லை. சரி, போகட்டும். நீங்கள் கடிதம் அனுப்பும்போது கொஞ்சம் ஸ்டாம்புகளையும் அனுப்புங் கள். எனக்கு இங்கே அவசியம் பணம் தேவையாக இருக்கிறது. இருந்தாலும், அங்கே பணம் வந்தால் என் கடைக்காரருக்கு கொடுத்தது போக, உங்களுக்கும் தாமோதரனுக்கும் தேவை யானதை எடுத்துக்கொண்டு மீதி இருந்தால் அனுப்பி வையுங்கள்... நீங்கள் இந்தச் சந்தர்ப்பத்தில் இப்போதைய இதயத்தின் மகிழ்ச்சி கரமான குதூகலிப்பின் மூலம் கதைகளை எழுதுங்கள். கவிதை களும் படையுங்கள். கிடைக்கும் சந்தர்ப்பங்கள் மறக்கடிக்கப்படக் கூடாது. அதற்கு முன் காகிதத்தில் பதிவு செய்யுங்கள். இதை நீங்கள் எப்போதும் கவனத்தில் கொள்ள வேண்டும்.

நான் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். இந்த அறையின் குளிர் தாங்க முடியாததாக இருக்கிறது. இதயத்தை நடுங்கச் செய்யும்

விதத்தில்தான் போலீஸாரின் நடவடிக்கைகளும் இருக்கின்றன. ஆனால், இந்தச் செய்கைகளெல்லாம் என்னிடம் இல்லை. என் எதிரேயுள்ள மற்ற லாக்கப் கைதிகளின் மேல்தான் நடக்கிறது. சில சமயம் என்மேல் அவர்களின் இரத்தம் தெறிக்கும். ''வேண்டாம்! போதும் நிறுத்துங்கள்!'' என்று என்னையறியாமலேயே உரத்த குரலில் நான் சொன்னதும் உண்டு. அந்த அளவுக்கு மிருகத்தனமாகவும் இதயமில்லாதவர்களாகவும் அவர்களின் செயல்பாடு உள்ளது. இவற்றின் நடுவில்தான் நான்...

இந்த இரும்புக் கம்பிகளின் இடைவெளி வழியாக உங்கள் எல்லோருக்கும் இந்த உலகத்துக்கும் மங்களங்கள் நேரட்டும்.

அன்புடன்

வைக்கம் முகம்மது பஷீர்.

•

**வைக்கம் முகமது பஷீர்,**

**கஸ்பா போலீஸ் ஸ்டேஷன் லாக்கப்**

**கொல்லம் - *24.6.118***

*பிரிய ராபி,*

என்னுடைய இந்த முகவரி என்றுதான் மாறுமோ! அதைப்பற்றி நான் இப்போது ஆலோசிக்கிறேன். என் எதிரிலுள்ள லாக்கப்பிலிருந்து முணுமுணுப்பதைப் போன்றுள்ள உரையாடல்கள் கேட்கின்றன. அதாவது குளவிக்கூட்டிலுள்ள சத்தம் கணக்காக. அடுத்த லாக்கப்பில் கல்யாணி செல்லம்மா தனியாக இருக்கிறாள். பாராக்காரர்கள் கொஞ்சம் தூரத்திலுள்ள கஜானாவில் அமர்ந்து சீட்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். சதுரவடிவமான கிணற்றைப் போல் அந்தச் சதுரத்தில் இருண்ட ஆகாயமும் சில நட்சத்திரங்களும் தெரிவதைப் பார்த்து லாக்கப்பில் வந்து அமர்ந்துகொண்டு நான் எழுதுகிறேன். இதை இன்னும் பூட்டவில்லை. இரவு பத்து மணியும் ஆகிவிட்டது. ஒருவேளை பூட்டாமலும் இருப்பார்கள். பல சமயங்களில் இப்படி நேர்ந்ததும் உண்டு. இருந்தாலும் என்ன செய்வது? நான் ஒரு சுதந்தரமில்லாதவன். வேண்டுமானால் நான் தப்பித்துக் கொள்ளலாம். ஆனால் இரண்டு நல்லவர்களின் பதவி பறிபோகும். அப்படி அவர்களை வீணாக்கிவிட்டு நான் வெளியே வரவேண்டிய

தேவை? ஒன்றுமில்லை. நான் இங்கே ஒரு மாதிரியான சுகத்தில்தான் காலம் தள்ளுகிறேன். ஆனால் என் முகத்தில் புன்னகையில்லை... இந்த ஆனந்தம் - மகிழ்ச்சி - இவற்றின் அர்த்தத்தையே நான் மறந்துவிட்டிருக்கிறேன். என் இதயத்தில் ஆனந்தம் உதிப்பதுண்டு. ஆனால், எப்போதும் அதை ஒரு மழைமேகம் மறைத்துவிடுகிறது. இது விசனமில்லை, பய மில்லை, வெறுப்பில்லை - எல்லாம் சேர்ந்த ஒன்று. அவ்வாறு இருக்கும்போது நான் ஒருமுறை கர்ஜிக்க வேண்டுமென்று தோன்றும். இந்த புவனத்தையே நடுங்க வைக்கும்படியான ஒரு கர்ஜனை! அப்படிச்செய்தால்தான் என் இதயத்துக்கு அமைதி கிடைக்கும்போல் இருந்தது. இல்லை, எனக்கு மன அமைதி துர்லபம்தான். துர்லபமான ஒன்றின் பின்னேயுள்ள ஒரு மனிதனின் முட்டாள்தனமான ஓட்டம் அது! நான் என்னென்னவெல்லாமோ எழுதிக்கொண்டு போகிறேன்... நான் தகழியைப் பார்த்தேன். சிறிய முகமும், முன்பக்க உடல் முழுவதும் வளைவாகவுமுள்ள மெலிந்த உயரமான மனிதர் அவர். பார்த்தவுடனேயே நாங்கள் இருவரும் ஒருவரோடு ஒருவர் கட்டித் தழுவிக்கொண்டோம். தகழி, என்னை முத்தமிட்டு ஏற்பார் என்று நான் நினைத்தேன். ஆனால் அவர் 'நான் மதராஸ் கேரள சமாஜத்தில் சொற் பொழிவாற்றுவதற்கு போய்விட்டு வருகிறேன். கேரளோபகாரம் பார்த்தேன். மிஸ்டர் பஷீர், உங்களுடைய வேசியை நான் அதில் பார்த்தேன். என் இதயமே ஸ்தம்பித்துவிட்டது. நான் இப்படி உண்மையைச் சொல்வதை முகஸ்துதி என்று நினைக்காதிர்கள். இதைப் போன்ற விஷயம் தோன்றும் வயதைக் கடந்த ஆளாச்சே நீங்கள்' என்று கூறினார்.

நான் எதுவும் கூறவில்லை.

தகழியே மீண்டும், ''சுகம்தானே?''

''ஆமாம்''

''இந்தத் தாடி?''

''சும்மா ஒரு தமாஷுக்காகத்தான்.''

''காக்காவாகப் போறீங்களா?''

நான் சிரித்தேன்.

''டீ வரவழைக்கட்டுமா?''

''வேண்டாம். உங்களுக்கல்லவோ நான் வாங்கித் தர வேண்டும்?''

''ஆமாம். இது என் வீடாச்சே!''

அடுத்தாற்போல் ராபியைப் பற்றித்தான்.

''ராபி யாரு?''

''என் நண்பன்'' என்று கூறிவிட்டு, உங்களைப் பற்றி சில வற்றையெல்லாம் நான் மேலும் கூறினேன்.

தகழியும், ''உண்மைதான். உங்களின் ஆத்மார்த்தத்தை அந்தக் கடிதத்தில் நான் காண்கிறேன். பதில் அனுப்புகிறேன்'' என்று கூறினார்.

தாமோதரன் ஏன் குழப்பத்திலிருக்கிறான்? அந்தப் பையனிடம் கொஞ்சம் அமைதியைக் கையாளுமாறு சொல்லுங்கள். அமைதி - ஆம், அனைத்திலும் சமாதானமடைந்தவனாகப் பொறுத்துக் கொண்டு இருக்குமாறு கூறுங்கள். ஆசான் ரோட்டுக்குப் போகாமல் வேறு ஏதாவது தொழிலைப் பார்க்கும்படி அவனிடம் சொல்ல வேண்டும். அதற்காக, நீங்களும் கொஞ்சம் முயற்சி செய்யுங்கள். நீங்கள் எழுதுகின்ற கதைகளைப் பத்திரிகைகளுக்கு அனுப்புவதற்கு அவசரப்பட வேண்டாம். எழுதி வையுங்கள். அதுவும் ஏராளமாக... இன்னும் காலமிருக்கிறது. எழுதக்கூடிய சந்தர்ப்பங்களை மட்டும் வீணாக்கிவிடாதீர்கள்.

மிஸ்டர் ஆப்ரஹாமை கைது செய்துவிட்டார்கள் என்று அறிந் தேன். மகிழ்ச்சி, நீங்கள் இரண்டு பேரும் விபசாரப் பெண்களின் துன்பத்தைத் தீர்ப்பதற்கு இப்போது முயற்சி செய்ய வேண்டாம். உங்களுக்கு இன்னும் வயதாகவில்லை. ரொம்பவும் இளம் வயதுதான். உங்களுக்கான வாழ்க்கை உங்கள் முன்னால் இன்னும் முடிவில்லாமல் கிடக்கிறது. இப்போதைக்கு உங்க ளுடைய ஆரோக்கியம்தான் முக்கியம். முதலில் அதைத்தான் நீங்கள் தேடிக்கொள்ள வேண்டும். உங்களுடைய வயதில் நான் இதையெல்லாம் இழந்துவிட்டேன். அதனால்தான் என்னுடைய கோலம் இப்படியாகிவிட்டது. அதனால், குழந்தைகளே ஜாக்கிரதையாக இருங்கள்!

திரு.கேசவதேவுடன் ரொம்ப நேரம் என்னென்னவெல்லாம் பேசினீர்கள்?

என் வழக்கின் அடுத்த வாய்தா 28-ந் தேதி. இன்னும் ஒண்ணும் நடைபெறவில்லை. மீண்டும் வாய்தா வைப்பார்கள். அவ்வளவு தான், ஜனசக்தி வாசவனிடமிருந்து - சத்யான்வேஷணம் - என்னும் என் கதையை வாங்கி வையுங்கள். இதன் விவரத்தை தாமோதரனிடமும் நினைவுபடுத்துங்கள். எல்லா விவரங் களுக்கும் விவரமானப் பதிலை எதிர்நோக்கி,

அன்பு

வைக்கம் முகம்மது பஷீர்.

# ஒன்பது

கொல்லம் லாக்கப்பில் இருந்தபோது பஷீர் எழுதிய கதைகள்தான் - டைகர், கைவிலங்கு, இடியன் பணிக்கர் ஆகியவை.

பஷீர் தன்னுடைய அனுபவத்தை கைவிலங்கில் கீழ்வருமாறு சுட்டுகிறார்:

...நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட ஆண்கள் நான்கு லாக்கப் அறைகளில் இரவும் பகலுமாக மௌனம் பூண்டிருந்தார்கள். பேச்சில்லை. சிரிப்பில்லை. புன்னகையில்லை. எதுவுமில்லை. ஒரே மவுனம்தான். இந்த நிலைமையில் இருந்ததால்தான் என் வலது கையோடு பூட்டப்பட்டிருந்த கூட்டாளியைப் பற்றிகூட நான் அறிந்திருக்கவில்லை! ஆனால் அவர் என்னை அறிந்திருந்தார்... அன்றைய தினத்தைப் போலவே, கைவிலங்கு பூட்டி கோர்ட்டுக்குப் போகும்போது பப்ளிக்ரோட்டில் நடத்தி அழைத்துச் சென்ற நாள்களிலெல்லாம் இன்னுமொரு கூட்டாளிதான் என் கையோடு பிணைக்கப்பட்டிருந்தான். கொலைகாரன், திருடன், தீவட்டிக் கொள்ளைக்காரன், பிக்பாக்கெட்காரன், கள்ளக் கடத்தல்காரன், நோட்டு ரெட்டிப்பவன், கள்ளநோட்டுக்காரன், அரசியல் குற்றவாளி என இப்படிப்பட்ட வகையினராக இருப்பார்கள்.

இவர்களில் யாராக இருந்தால்தான் எனக்கு என்ன? நான் யாரிடமும் பேசுவதில்லை. தீர்ப்பைப் பற்றி மட்டும்தான் நினைப்பேன்.. இப்படிப்பட்ட முப்பத்தியாறு குற்றவாளிகள்.. விலங்குதாரிகள்.. வரிசையாக நிற்போம். எங்களோடு துப்பாக்கியும் வாளுமேந்திய ஆறு போலீஸ்காரர்களும் நிற்பார்கள்.

''வழியில பேசற தேவடியா மவன் யாரா இருந்தாலும் சரி. சங்கை நெரித்து தண்ணியாக்கிவிடுவேன் ஜாக்கிரதை... உம், நடங்கடா..''

இப்படிச் சில மாதங்கள் லாக்கப்பில் அடைபட்டிருந்தும் பஷீரின் மேலுள்ள வழக்குக் கட்டை எடுக்கவில்லை. இன்ஸ்பெக்டர் இடியன் நாராபிள்ளையின் உபதேசத்தின்படி முழுவதும் பட்டினி கிடந்தார். இதன்பிறகுதான் நீதிபதி பஷீரின் மேலுள்ள வழக்கை எடுத்தார். ராஜத்துரோகக் குற்றம். இரண்டரை ஆண்டு கடுந்தண்டனை. ஆயிரம் ரூபாய் அபராதம். அபராதம் கட்டத் தவறினால் மேலும் ஆறுமாதம் சிறைவாசம். அதன்படி, கொல்லம் லாக்கப்பிலிருந்து திருவனந்தபுரம் மத்திய சிறைக்கு பஷீரைக் கொண்டு சென்றார்கள். இதற்கிடையே, எழுத்தாளர் லலிதாம்பிகா அந்தர்ஜனம் பஷீரைப் பற்றி ஒரு கவிதை எழுதினார். அதை லாக்கப்புக்கும் அனுப்பினார். கடப்பாக் கடையிலுள்ள வித்யாதரன் அந்தக் கவிதையை இப்படி நினைவுகூர்கிறார்:

'தடவுக்காரன்' (கைதி) என்பதுதான் அக்கவிதையின் தலைப்பு. நான்கே வரிகள்தான்:

> ''இருள் சூழ்ந்த அந்த சிறையறையில்
> இரவி தேவனாக இருக்க வேண்டும் நீ
> தேவ கானம் உதிர்த்த உன் தூலிகை
> சோம்பி மௌனமாக உறங்குதே இன்று...''

இரண்டு போலீஸ்காரர்களின் காவலுடன் பஷீரை திருவனந்தபுரம் மத்திய சிறைச்சாலைக்குக் கொண்டுபோய் சேர்த்தார்கள். போகும்போது கைவிலங்கை பாக்கெட்டில் வைத்துவிட்டனர். அந்த இரண்டு போலீஸ்காரர்களும் பஷீரின் நண்பர்களாக மாறியிருந்ததுதான் அதற்குக் காரணமாகும். சிறைக்குள் நுழைவதற்கு முன் ஒரு கட்டு பீடியும், ஒரு தீப்பெட்டியும் ஒரு

புது பிளேடும் வாங்கி பஷீரிடம் கொடுத்தார்கள். ஆனால் மத்திய சிறைச்சாலையை அடைந்தவுடன், ''இதையெல்லாம் ஜெயிலில் அனுமதிக்க முடியாது'' என்று கூறி, பஷீரின் பாக்கெட்டிலிருநத அவற்றையெல்லாம் ஒரு வார்டன் எடுத்துக் கொண்டான். பின்பு, அவற்றைத் தன் தொப்பிக்குள் வைத்துக் கொண்டான்.

சில நாள்களில் பஷீருக்கும் அந்த வார்டனுக்கும் நெருக்கம் ஏற்பட்டது. பீடியையும், தீப்பெட்டியையும் பிளேடையும் வார்டன் திருப்பிக் கொடுத்தான். சிறையில் பஷீரோடு சேர்ந்து பதினெட்டு அரசியல் கைதிகள் இருந்தார்கள். டி.எம். வர்கீஸ், எம்.என்.கோவிந்தன் நாயர், பட்டம்தாணு பிள்ளை, பொன்னறை ஸ்ரீதர் போன்ற பெருந்தலைவர்கள்தான்... இங்கே இருந்தபோதுதான் 'பிரேமலேகனம்' நாவலை பஷீர் எழுதினார். சிறையிலுள்ள ஆயுள் கைதிகளுக்கு இது தேவையாகவும் இருந்தது.

பஷீர் ஓர் எழுத்தாளர் என்பது சிறையிலிருந்த அனைவருக்கும் தெரிந்துவிட்டது. ஒருநாள், ஆயுள் தண்டனை அடைந்த கைதிகளில் சிலர் பஷீரிடம், ''சார், எங்களுக்கு இந்த இராமாயணத்தையும் பைபிளையும் வாசித்து வாசித்து வெறுத்து விட்டது. அதனால் நீங்கள் சில கதைகள் எழுதி எங்களுக்குத் தரணும்'' என்று கூறிவிட்டு அவர்களே பேப்பர்களையும் பேனாக்களையும் வாங்கி வந்து கொடுத்தார்கள். அதனால் சிறையிலுள்ளவர்களுக்காகவே பஷீர் சில கதைகளை எழுதினார். அவற்றில் ஒன்றுதான் 'பிரேமலேகனம்.'

''வாழ்க்கை இளமை ததும்புவதாகவும், இதயம் காதல் ஊற்றாகவும் இருக்கின்ற இந்த இறுக்கமான காலகட்டத்தை என் அன்பு நண்பன் எப்படிக் கழிக்கிறான்?

''நானோ, என் வாழ்க்கை நிமிடங்கள் ஒவ்வொன்றையும் சாராம்மையோடான காதலில் கழிக்கிறேன். சாராம்மையோ?...'' பிரேமலேகனத்தின் இந்தத் தொடக்கத்தை அன்று கைதிகள் அனைவரும் தங்கள் இதயத்தில் பதித்திருந்தார்கள். சாராம்மைக்கும் கேசவன் நாயருக்குமுள்ள உறவை, அந்தக் காதல் கதையிலுள்ள சுவையானதும் வேதனைப்படுத்துவதுமான காட்சிகளை அவர்கள் திரும்பத் திரும்ப படித்தார்கள். இந்தக் கதையின் மூலப்பிரதியை பஷீர் அந்தக் கைதிகளிடமிருந்து வாங்கிதான் படுக்கைக்குக் கீழே வைத்தார். சிறையை விட்டு

வெளியேறும்போதுதான் தன் படுக்கைக்கு அடியிலிருந்த இக்கதையை பஷீர் வெளியே கொண்டுவந்தார். தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட கைதிகளும் அன்று சிறையில் இருந்தார்கள். ஒரு வார்டனைப் போல் எல்லா இடத்துக்கும் சென்று அந்தக் கைதிகளை பார்ப்பார். விடியற்காலையில் தூக்குத் தண்டனையை நிறைவேற்றும் வார்டர்கள் பஷீரைப் போய் பார்த்து வரட்டு டீ குடிப்பதை வழக்கமாக்கி இருந்தார்கள்.

பஷீருக்கு பூந்தோட்டம் என்பது மிகவும் பிடித்தமான ஒன்றாகும். எங்கே சென்றாலும் பூந்தோட்டம் வளர்ப்பது அவருக்கு ஒரு பொழுதுபோக்காகவே இருந்தது. கொல்லம் கஸ்பா போலீஸ் ஸ்டேஷனுக்கு முன்னால் மனோகரமான பூந்தோட்டம் ஒன்றை உருவாக்கினார். ஒரேயொரு செடியை மட்டும்தான் அப்போது அவர் நட்டார். அது இப்போது படர்ந்து பந்தலாக நிற்கிறது. திருவனந்தபுரம் மத்திய சிறைச்சாலையிலும் இதேபோல் பூஞ்செடிகளை வளர்த்தார். இப்படி மிகவும் மகிழ்ச்சியோடு சிறை வாழ்க்கையைக் கழிக்கும்போது, ஒருநாள் திருவிதாங்கூர் சிறை உயர்அதிகாரியான அப்துல்கரீம் சாஹேப் மத்தியச் சிறைக்கு வந்தார். அவர் ஒரு பஞ்சாபி அதிகாரி. பஷீரைக் கூப்பிட்டு வரச் செய்தார். பின், ஆங்கிலத்திலேயே கேள்விகள் பிறந்தன:

''உங்கள் பெயர்?''

''வைக்கம் முகம்மது பஷீர்.''

''ஜாதி?''

''முஸ்லிம்''

''என்ன முஸ்லிம்''

பஷீருக்கு குஷி பிறந்தது. அதன்பின் நீண்ட வாசகம்தான்:

''தங்களையும் என்னையும் எல்லா ஜீவராசிகளையும் அனந்த கோடி நட்சத்திரங்களையும் ஏராளமான சூரிய சந்திரர்களையும் அண்ட சராசரமான எல்லா பிரபஞ்சங்களையும் படைத்த கடவுளை நான் நம்புகிறேன்...''

''பின்னே, நீங்கள் எப்படி கம்யூனிஸ்டானீர்கள்?''

''நான் ஒருபோதும் கம்யூனிஸ்டானதில்லை.''

''எம்.பி. பால் கம்யூனிஸ்டோ?''

பஷீர் உடனே, ''எம்.பி. பால் ஒரு எம்.ஏ. பட்டதாரியாவார். தாராளமாகச் சிந்தித்துள்ளார். ஏராளமாகப் படித்துள்ளார். அவர், இந்த பாரதத்துக்குச் சுதந்தரம் கிடைக்க வேண்டுமென்று நம்புகிறார். கதர் துணியைத்தான் அணிவார். அவர் ஒரு கத்தோலிக்க கிறிஸ்துவர்'' என்று கூறினார்.

''நீங்கள் என்ன படித்திருக்கிறீர்கள்?''

''சொல்லும்படியாக நான் ஒன்றும் படித்திருக்கவில்லை.''

''ஆங்கிலம் பரவாயில்லையே. உங்களுக்கு ஏதாவது வேலை கிடைத்தால் போதுமா? கஷ்டப்படாமல் வாழலாமே! இந்த இலக்கியத்தின் மூலம் மட்டுமே தாங்கள் வாழ்வதற்கு கஷ்ட மாச்சே?''

''கிடைப்பதை வைத்தே வாழ்வேன் சார். எனக்குப் பெரியதொரு ஆசை எதுவுமில்லை. இலக்கியப் படைப்பு சுதந்தரமான ஒரு தொழிலாச்சுங்களே!''

''நீங்க என்ன எழுதறீங்க?''

''சிறுகதைகளையும் மற்றவற்றையும்தான் எழுதுகிறேன்.''

''ராஜ துரோகத்துக்குள் எப்படி புகுந்தீர்கள்?''

''நான் எழுதறது ராஜதுரோகம் ஒண்ணும் இல்லீங்களே சார்!''

''அது சரி'' என்றவர், கண்காணிப்பாளரிடம், ''ஒரு ஷீட் பேப்பரையும், ஒரு பேனாவையும் கொண்டு வாங்க'' என்று கூறினார்.

கரீம் சாஹேபுக்கு முன் பேனாவும் தாளும் வந்து சேர்ந்தன: ''மிஸ்டர் பஷீர், தாங்கள் எழுதிய கதைகள் எதிலும் ராஜதுரோகம் இல்லையென்று எழுதி கையெழுத்திட்டு கொடுங்கள். நீங்கள் சிறையிலிருந்து வெளியே போகலாம்..''

''என் மதிப்புக்குரிய ஐயா, நான் அப்படிச் செய்யமாட்டேன். எல்லா கதைகளின் முடிவிலும், இதில் ராஜதுரோகம் இல்லை

யென்று என்னால் எழுத முடியுங்களா? நான் வெளியே போக வேண்டாம். இப்போ வெளியே ஒரே பஞ்சமாகத்தான் இருக்கிறது. ஆனா எனக்கு இங்கே இரண்டு வேளை சாப்பாடு கிடைக்கிறது.''

''நல்லா யோசித்தீர்களா?''

''யோசித்து விட்டேன் சார்.''

அவர் சிறிது கோபமாகப் பார்த்தார்.

''நீங்க ஒரு பெரிய புள்ளிதானே?''

''அப்படி இல்லீங்க சார். நான் ஒரு ஏழை'' என்றார் பஷீர்.

அதன்பிறகு, கரீம் சாஹேப் பஷீரிடம் அதிகமொன்றும் பேசவில்லை. எங்கும் எந்த நேரத்திலும் ஒரு தீரத்தன்மையைக் காண்பித்துக் கொண்டிருந்த ஒரு பெரும் எழுத்தாளர்தான் பஷீர் என்று இந்தச் சம்பவமே தெளிவாக்குகிறது.

எம்.பி.பாலின் கடிதங்களிலிருந்து, வெளியில் எங்கும் பயங்கரப் பஞ்சம் என்பதை பஷீர் புரிந்து கொண்டிருந்தார். சிறையிலாவது ஒன்றிரண்டு வேளை சாப்பாடு கிடைக்கிறது. பால், தேயிலை, சர்க்கரை, ரொட்டி, முட்டை ஆகியவற்றோடு பீடி, தீப்பெட்டி, எழுதுவதற்கான பேப்பர், பென்சிலும் கூட கிடைக்கின்றன. இவையெல்லாமும், ஆயுள் தண்டனை கைதிகள் வேலை செய்து கொண்டிருக்கும் சிறைச்சாலை மருத்துவமனையிலிருந்து பஷீருக்கு பிரத்யேகமாக வந்து கொண்டிருந்தன.

திருவனந்தபுரம் மத்திய சிறைச்சாலையில் வாழ்ந்த காலத்தில் தான் இந்திய இலக்கியத்துக்கு, அந்த அருமையான 'மதிலுகள்' என்ற கதை கிடைத்தது.

கே.பாலகிருஷ்ணனின் 'கௌமுதி'க்காக எழுதிய அந்தக் கதை ஒரு யதார்த்த சம்பவம்தான். பஷீரினுடைய அனுபவங்களின் ஒரு சிறிய வரலாறு.

அந்த 'மதிலுகள்' எழுதப்பட்டது இப்படித்தான்:

சிறையில் பூந்தோட்டம் ஒன்றை உருவாக்கி பஷீர் மகிழ்ந்து கொண்டிருந்த நேரம். பல நிறங்களிலும் மலரும் பூஞ்செடிகளை

ஒவ்வொரு செல்லின் முன்னாலும் நட்டு வளர்த்தார். அதிகமாக ரோஜாக்கள்தான். சில சமயம் கதைகள் எழுதுவார். அது இல்லாதபோது பூந்தோட்டம்தான். அப்படி இருக்கும்போது தான், ஆண்கள் சிறைச்சாலையின் ஒரு மதிலுக்கு மறு பக்கத்தில் பெண்கள் சிறைச்சாலை உள்ளது என்பதை பஷீர் புரிந்து கொண்டார். பெண்களின் மணமும் சத்தமுமே அவருக்கு அதைப் புரிய வைத்தது. பெண்களின் மணம் பஷீருக்கு பட்டென்று விளங்கியது.

ஒருநாள், சிறையிலிருந்து சில அரசியல் கைதிகளை விடுதலை செய்தார்கள். ஆனால் பஷீரை மட்டும் அங்கேயே வைத்து விட்டார்கள். பஷீருக்கு இது ஒரு பெரும் ஏமாற்றத்தை உருவாக்கியது. தன் வார்டுக்கு முன்னால் வருத்தத்தோடு அமர்ந்திருக்கும்போது, ஓர் அணில் பஷீரின் கவனத்தை ஈர்த்தது. அதைப் பிடிப்பதற்காக சிறை காம்பவுண்டுக்குள்ளேயே சிறிது தூரம் ஓடினார்... அதுவும் கூச்சலிட்டுக் கொண்டு ஓடியது. பெண்களின் சிறைச்சாலையோரம் உள்ள மதிலின் அருகில் சென்றதும் ஒரு பெண்ணின் குரல்:

''யாரது?'' என்று கேட்டது.

பஷீர் சட்டென்று நின்றார். பின்பு யாரும் பார்க்காத வகையில் ஒரு கள்ளிக் கம்பையெடுத்து மதிலின் மேலாக அடுத்த பக்கத்துக்கு வீசினார்.

மீண்டும் அதே கேள்வி:

''யாரது?''

''நான் ஒரு கைதி'' என்றார் பஷீர்.

அப்படித்தான் அவர்கள் ஒருவரோடு ஒருவர் அறிமுகமானார்கள். அந்தப் பெண் கைதியின் பெயர் நாராயணி. அவள் ஓர் ஆயுள் கைதி. நேரில் பார்த்துக் கொள்ளவில்லை என்றாலும், மதிலுக்கு இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாக அவர்கள் காதலிக்கத் தொடங்கினார்கள். தினந்தோறும் ஒரு ரோஜா மலரை கொண்டுபோய் நாராயணிக்குக் கொடுப்பார் பஷீர்... மதிலுக்கு மேலாக எறிந்துதான். அவர்கள் ஒருத்தருக்கொருத்தர் பார்த்துக் கொள்ள வேண்டுமென்னும் ஆசையுண்டாயிற்று. குறுக்கே மதில்கள்! என்ன செய்வது? நீண்ட யோசனைக்குப் பின் ஒரு வழி

கண்டுபிடித்தார்கள். சிறைச்சாலை மருத்துவமனையில் சந்திப்பது என்று. நாராயணியால் பஷீரை எப்படி அடையாளம் அறிந்து கொள்வது? அதற்கு அவர் சொன்ன பதில், தான் ஒரு ரோஜா மலரை கையில் பிடித்திருப்பேன் என்பதுதான். ஆனால் சட்டம் அதற்கு அனுமதியளிக்கவில்லை.

நாராயணியைப் பார்க்கத் தீர்மானித்ததற்கு முதல்நாள் உதவி சிறை கண்காணிப்பாளர் பஷீரைத் தேடி வந்தார். பஷீர் சிறையிலிருந்து விடுதலையாகப் போகிறார். ஆனால், இந்த விவரத்தை அவர் வெளிப்படுத்தவில்லை.

பஷீரிடம் ஜிப்பாவையும் வேட்டியையும் அளித்தார். அதை அணிந்து வருமாறு உதவி கண்காணிப்பாளர் புன்னகையுடன், ''யூ ஆர் ஃப்ரி. யூ கேன் கோ...'' என்று அறிவித்தார்.

அப்போது பஷீரின் மனத்தில், ''ஹூ வாண்ட்ஸ் ஃப்ரீடம்? வொய் ஷுட் ஐ பி ஃப்ரி?'' என்னும் கேள்விதான் உயர்ந்தது.

# பத்து

பஷீர் சிறையிலிருந்து விடுதலையானார். விடுதலையானதும் தலையோலைப் பறம்பில் உள்ள தன் வாப்பாவையும், உம்மாவையும் சென்று காண்பதற்குப் பதில், நேரே கோட்டயத்தை நோக்கி எம்.பி.பாலிடம்தான் சென்றார். அங்கே பாலின் வீட்டிலேயே ஓர் இரவு தங்கினார். மறுநாள் காலையில்தான் தன் சொந்த வீட்டுக்குப் போனார். போகும்போது 'பால்யகால சகி' (இளம் பருவத்து தோழி)யின் கையெழுத்துப் பிரதியை பாலிடமிருந்து வாங்கிக் கொண்டார்.

வீட்டுக்கு வந்து உம்மாவையும் வாப்பாவையும் சகோதர சகோதரிகளையும் பார்த்தார். ஆனால், வீட்டில் அதிகநாள் தங்குவதற்கு அவரால் முடியவில்லை. காரணம், ஏதாவது ஒரு தொழில் செய்யவேண்டும். அதற்கு அங்கு வசதியில்லை. குடும்பத்துக்கும் தான் ஒரு சுமையாக இருக்கக் கூடாது. அதனால், பஷீர் மீண்டும் பழைய கட்டுத்தரைக்கே - எர்ணாகுளத்துக்கே - வந்து சேர்ந்தார்.

பாலின் வலியுறுத்தலின் பேரில் அங்கேயுள்ள ஓர் அச்சகத்தில் 'பால்யகால சகி'யை அச்சிடக் கொடுத்தார். ஆனாலும், எப்படி வாழ்வது? அதற்கு என்ன வழி? வேறு சில கைத் தொழில்களும் தெரியும்தான். ஆனாலும்...

கடைசியில் பஷீர் ஒரு தீர்மானத்துக்கு வந்தார். ஒரு தீவிர எழுத்தாளனாவது; எழுதியே வாழ்வது. அதற்கான முதலீடாக ஒரு பேனாவும் கொஞ்சம் பேப்பருமே போதும். அத்துடன் எவ்வளவு சொன்னாலும் சொல்லி மாளாத ஏராளமான அனுபவங்களும் தன்னிடம் உள்ளனவே! தன் முன்னே அனு பவங்களின் பெரும் கடலல்லவோ இருக்கிறது! கடந்துபோன ஆண்டுகளின் அலைகள் நினைவுகளாக அல்லவா வந்து நிற்கின்றன!

எர்ணாகுளம் வாழ்க்கைக் காலம் பஷீரின் வாழ்க்கை வரலாற்றில் ஒரு நிலையான காலமாக மாறியது. அனுபவமிக்கதாகவும் பல்வேறு பழக்கங்கள் நிறைந்ததுமான அந்த ஜீவித காலத்தில்தான் மதுபான பழக்கமும் தொடங்கியது. அந்தக் காலகட்டத்தில் தொடர்ந்து எழுதினார். புத்தகக் கடைகள் நடத்தினார். கிருஷ்ணன் நாயர், ஸ்டுடியோ அதிபர் எம்.பி. கிருஷ்ணப் பிள்ளை, நர்மதா பத்திரிகை ஆசிரியர் ஓவியர் ராகவன் நாயர், வாட்சு கம்பெனி அதிபர் குட்டப்பன் என ஒரு பெரிய கூட்டமே பஷீரைச் சுற்றி இருந்தது. இவர்களைத் தவிர, பிற்காலத்தில் பி.கே.பாலகிருஷ்ணன், போஞ்ஞிக்கரை ராபி, பி.எஸ்.தாமோதரன் தொடங்கிய சீடர்களும் வந்துசேர்ந்தார்கள்.

முக்கியத் தொழிலே எழுதுவது என்பதால் இவர்களோடு சேர்ந்து பொழுதுபோக்குகள் என பலவற்றையும் செய்யும்போது (முக்கியமாக மதுபானம்தான்) எழுத்தில் மிகவும் கவனம் செலுத்திக்கொண்டிருந்தார். ஆனால் அந்த நாள்களில் பல நேரங்களில் ஆகாரம் எதுவும் உண்ண முடியாமல்தான் இருந்தார். தொடர்ந்து பட்டினி கிடந்ததுமுண்டு. தங்குவதோ, கிருஷ்ணன் நாயர் ஸ்டுடியோவிலும், சீ வ்யூ ஹோட்டலிலும், அதன்பிறகு, ஸிதீஸ் கட்டடத்திலுள்ள அடுக்களை அறையிலுமாக இருந்தது.

கிருஷ்ணன் நாயரின் ஸ்டுடியோவிலுள்ள பத்மநாபன் நாயருக்கு பஷீரை மிகவும் பிடித்திருந்தது. அவர் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று சாப்பாடு கொடுப்பார். அந்த வீட்டிலுள்ள தாய் ஒரு கொடை வள்ளலாகவே இருந்தார். அவர் பஷீரின் நிலையைப் புரிந்துகொண்டு அடிக்கடி வரவழைத்து மதிய நேர உணவை வழங்கினார். பல சமயங்களிலும், இப்படி உண்ணும் இந்த ஒருவேளை உணவு மட்டுமே அன்றைய ஒட்டுமொத்த ஆகாரமாகவும் அவருக்கு இருந்தது.

1981-ல் பஷீர் கிருஷ்ணப்பிள்ளைக்கு அனுப்பிய ஒரு கடிதத்தில் அன்றைய காலகட்டத்தை நினைவு கூர்கிறார்:

பிரியப்பட்ட எம்.பி.,

தாங்கள் அனுப்பும் சுவாரசியமான கடிதங்கள் கிடைத்து சில நாள்களாகிவிட்டன. அநேக உடல்நலக் குறைவுகளோடு சேர்ந்த இப்போது கண்களுக்கும் சுகக்குறைவு வந்துவிட்டது. எழுது வதற்கும் படிப்பதற்கும்கூட சிரமம்தான். நீங்கள் கடிதம் அனுப்பி யதே நல்லதாயிற்று. சரஸ்வதியைக் கேட்டதாகச் சொல்லவும். குழந்தைகளெல்லாம் சுகமாக இருப்பார்கள் என்று நம்புகிறேன்.

''அண்ணனிடம் (பத்மநாபன் நாயர்) ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும். ஒரு முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னே எர்ணாகுளத்திலுள்ள ஸிதிஸ் பில்டிங்கில் அரை ரூபாய் வாடகை யுள்ள அந்த அழுக்கடைந்த அறையில் நான் தங்கியிருந்தபோது, ஒருநாள் அண்ணன் அந்த அறைக்கு வந்திருந்தார். அமர்வதற்கு எதுவும் இல்லாமையால், அவர் போட்டோ ஸ்டுடியோவி லிருந்து எனக்காக ஒரு ஸ்டூலை கொண்டுவந்து கொடுத்தார். அந்த ஸ்டூல் இப்போதும் என் அருகில்தான் உள்ளது. இந்த விவரத்தை எப்படியும் அண்ணனிடம் கூறவும். அவர் தீர்க்காயுசுடனும் உடல் நலத்துடனும் இருக்க வேண்டும் என்று நான் வாழ்த்துவதாகக் கூறவும்.

எம்.பி.ஸ்டுடியோவில் பல இரவுகள் படுத்து உறங்கியது இன்றும் நினைவில் பசுமையாக உள்ளது. அது எப்படிப் பட்டதொரு காலம்!''

பிராக்குளம் பாஸி நடத்திக் கொண்டிருந்த ஸீ வ்யூ ஹோட்டலில் பஷீரும் கூட்டாளிகளும் மது அருந்துவதற்குச் செல்வதுண்டு. ஏதாவது ஓர் அறையை அந்த நேரத்துக்கு அவர் ஒதுக்கித் தருவார். ஒருநாள் சுவையான சம்பவம் ஒன்றும் உண்டாயிற்று. ஹோட்டல் பையன் வழக்கம்போல் பஷீருக்கும் கூட்டாளி களுக்கும் அறையை ஒதுக்கிக் கொடுத்தான். மதியம் முதல் மாலை வரை அவர்கள் நன்றாக மது அருந்தினார்கள். அந்தி நெருங்கியபோது எல்லோரும் ஒரு நிலைக்கு வந்துவிட்டிருந் தனர். ஆனால் பஷீர் மட்டும் நிலை தவறி கட்டிலுக்கு அடியில் படுத்து உறங்கிவிட்டார். மற்றவர்களெல்லாரும் இதையறி யாமல் வெளியேறி விட்டார்கள். ஹோட்டல் பையனும் அறையைச் சுத்தப்படுத்தி வெளிக் கதவைப் பூட்டிக்கொண்டான்.

சிறிது நேரம் சென்றதும் ஒரு தமிழர் தம்பதிகளுக்கு அந்த அறையை கொடுத்தார்கள். கணவர் வெளியே சென்றதும் அந்தப் பெண் சேலையை அவிழ்த்து மாற்றத் தொடங்கினாள். அப் பொழுதுதான் கட்டிலுக்குக் கீழ் ஏதோவொன்று அசைவது போல் அவளுக்குத் தெரிந்திருக்கிறது.

உற்றுப் பார்த்தாள். ஒரு மனிதன்! அந்தப் பெண் ஓவென ஒரேயடியாகக் கூச்சலிட்டாள். அதற்குள், உறக்கத்திலிருந்து எழுந்து கொண்ட பஷீர் ஒரே பாய்ச்சலாக வெளியே பாய்ந்து விட்டிருந்தார்.

கௌமுதி பாலகிருஷ்ணனைப் பற்றி ஆய்வு செய்த கே.ஏ.பீனா வுடன் இந்தக் காலகட்டத்தைப் பற்றி பின்வருமாறு பஷீர் அசைபோட்டார்:

''நான் மதுவில் மூழ்கிக் குளித்ததுண்டு. ஏறக்குறைய எல்லா போதை மருந்துகளையும் உபயோகித்து பார்த்ததுண்டு. என் வாழ்க்கையையும் நான் ஏராளமாகப் பாழடித்ததுண்டு. அப் போது எனக்கான ஒரு பொறுப்பாளி என்று சொல்வதற்கு நான் மட்டும்தான் இருந்தேன். நான் மதுவருந்திவிட்டோ போதை மருந்து சாப்பிட்டு விட்டோ எதையும் அப்போது எழுதிய தில்லை. சுயபுத்தியுடனும், சுத்தமான மனத்துடனும்தான் எல்லா வற்றையும் எழுதியுள்ளேன்.

''மதுவருந்தும்போது - இரவும் பகலுமாக - மது நல்லதென்று எனக்குத் தோன்றியதில்லை. அந்த மதுவின் சுவையும்கூட எனக்குப் பிடிப்பதில்லை. இருந்தாலும் மதுவருந்தினேன். மற்றவர்களோடு சேர்ந்தும் தனியாகவும் குடித்துள்ளேன். அந்தக் காலத்திலேயே என்னிடம் இசை நாட்டமுமிருந்தது. கிராம ஃபோன், ரேடியோகிராம் எல்லாம் வைத்திருந்தேன்.

''மது நல்லதில்லைதான். மேலும், நான் ஒரு முஸ்லிம். முஸ்லிம் களுக்கு மதுவும் போதை மருந்துகளும் தடை செய்யப்பட்ட ஒன்று. மத சம்பந்தமாகவும் அவை நல்லதில்லை. மது அருந்தி னால், மனத்தின் அந்தக் கருத்து நுட்பம் இருக்கிறதல்லவா? அதாவது ரிபைன்மென்ட், அது அழிந்துவிடும். மேலும் உள்மனத் தில் உறைந்திருப்பதும் மிருகத்தனமான குணங்களாகத்தான் இருக் கும். அதனால் அதன்பின் இந்த மது வகைகளை நிறுத்துவதற்கான முயற்சியில் ஆழ்ந்தேன். அதிலும் ஏராளமான தோல்விகள். இறுதி

யில் எப்படியோ நிறுத்திவிட்டேன். கம்ப்ளீட் ஸ்டாப். அதனால் உறக்கம்தான் இல்லாமலாயிற்று. ஹாலூசினேஷன்ஸ்... பைத்தியம்...''

பஷீர் எர்ணாகுளத்தில், சர்க்கிள் புக் ஹவுஸ், பஷீர்ஸ் புக் ஸ்டால் என இரண்டு புத்தகக் கடைகளை நடத்தியவர். நண்பர்களிட மிருந்தும் பணம் பெற்றும் கடன் வாங்கியும்தான் இந்தப் புத்தகக் கடைகளை நடத்தினார். இரண்டும் நஷ்ட வியாபாரமாகத்தான் இருந்தன.

சர்க்கிள் புக் என்ற புத்தகக் கடையை எர்ணாகுளம் போட் ஜெட்டியில்தான் முதலில் தொடங்கினார். இதற்கு பிரத்யேகமாக அறை எதுவும் கிடையாது. கள்ளிப் பலகைகளைக் கொண்டு கிரேடு செய்து அதில் புத்தகங்களை அடுக்கிவிட்டு பஷீர் தரையில் அமர்ந்துகொள்வார். யாராவது புத்தகம் வாங்கினதால்தான் உண்டு. இல்லையென்றால் படித்துக்கொண்டே இருப்பார். இந்தக் காலகட்டத்தில்தான் பாலகிருஷ்ணனை கடையில் அமர்த்திவிட்டு பஷீர் வெளியே சென்றுவிடுவார். பஷீரின் புக் ஸ்டாலில் பெரும்பாலும் ஆங்கில புத்தகங்கள்தான் இருந்தன. அதனாலேயே விற்பனையும் மிகவும் குறைவாக இருந்தது. இந்தப் புத்தகக் கடையைத் தொடர்ந்து நடத்துவதற்கு பஷீரால் முடியவில்லை. பணத்தட்டுப்பாடுதான் அதற்கான காரணமாகும். கடைசியில், இந்த சர்க்கிள் புக் ஹவுஸை பாலகிருஷ்ணனிடமே விற்றுவிட்டார். இதற்குப்பின் சில நாள்கள் கழித்துத்தான் டி.பி. ரோடில் பஷீர்ஸ் புக் ஸ்டாலைத் தொடங்கினார். அந்த நேரத்தில் பஷீர் ஓர் இலக்கியவாதி என்ற வகையில் பிரபலமாகி விட்டிருந்தார். அதனாலேயே ஏறக்குறைய எல்லா இலக்கிய வாதிகளும் பஷீரைப் பார்ப்பதற்காக அங்கே வந்து சென்றார்கள். இருந்தாலும், அந்தக் காலகட்டத்தில் இலக்கியக் கூட்டங் களிலோ, பொது மேடைகளிலோ பஷீர் ஏறியதில்லை. தன் னுடைய புத்தகக் கடையில் தன்னைக் காண்பதற்கு வருகின்ற வர்களோடு அதிகம் இலக்கிய விஷயங்களைத்தான் பஷீர் பேசிக்கொண்டிருப்பார். அதே நேரத்தில் பஷீர்ஸ் புக் ஸ்டாலும் நஷ்டத்தில்தான் தடுமாறியது. நண்பர்கள் பல புத்தகங்களையும் எடுத்துச் செல்வார்கள். ஆனால் பணம்தான் கொடுப்பதில்லை. பஷீரும் பலருக்கு புத்தகங்களைக் கடனாகவே கொடுப்பார். அதற்கான பணமும் கிடைப்பதில்லை. கடைசியில் புத்தகக் கடையை முன்னேற்றத்துக்குக் கொண்டுசெல்ல முடியாத நிலை

வந்தவுடன் 'பஷீர்ஸ் புக் ஸ்டால்', 'சாகித்ய ப்ரவர்த்தக ஸஹகரண சங்க'த்தின் கைக்கு மாறியது. இந்தக் காலகட்டத்தில்தான் ஆர்ட்டிஸ்ட் ராகவன் நாயரின் நர்மதாவில் பஷீர் கேள்வி-பதில் பகுதியைத் தொடங்கினார்.

'காதலியுங்கள்', 'கம்யூனிஸமும் கண்ணன் பழமும்', 'பஷீர் த புலயன்', 'பெண்ணும் மந்திரிமார்களும்' போன்ற தலைப்புகளில் எழுதிய சுவையான பகுதியாக அது இருந்தது.

எல்லா முஸ்லிம்களையும் பாகிஸ்தானுக்கு அடித்து விரட்டி னாலும் தான் ஒருவன் மட்டும் இந்தியாவிலேயே உறுதியாக நிற்க முடியும் என்றும், அதற்காக மூன்று பெயர்களை தான் கண்டுபிடித்திருப்பதாகவும் ஒரு கேள்விக்கு பதிலாக பஷீர் எழுதினார்:

1. வைக்கம் மம்பட பட்டாச்சாரியார்
2. வை.எம்.பி. நம்பூதிரிபாடு
3. வை.மு.ப. பணிக்கர்

- என இந்த மூன்று பெயர்களில் ஒன்றைத்தான் அப்போது ஏற்றுக் கொள்ளப் போவதாகக் கூறினார்.

இன்னுமொரு கேள்வி:

'உடல்நலமின்மையில் மிகவும் நல்லது எது?'

அதற்கு பஷீரின் பதில்:

'அப்படியென்று ஒன்று இல்லையென தோன்றுகிறது. ரசிக்கும் படியானது எது என்று கேட்டால், பயங்கர சொறிநோயில் வறட்டுச் சொறியைப் பரீட்சித்துப் பாருங்கள்.'

அடுத்த கேள்வி:

பி.கே. பாலகிருஷ்ணன் தாடி வளர்ப்பதன் ரகசியம் என்ன?

பதில் : பணப்பசையுள்ள யாரோ ஒரு பெண்ணின் வயதான தந்தையைக் கவர்வதற்காகத்தான் என்று விசாரணையிலிருந்து தெரிய வருகிறது.

கேள்வி : தங்களைச் சென்னையில் ஒருவர் கண்டதாக சொல் கிறார். ஒரு சிறப்பு கோமணம் உடுத்திக்கொண்டு தலையில் ஒரு

சிறிய தலைப்பாகையுடனும் கையில் ஏராளமான சாவிகள் அடங்கிய கொத்துடனும் ஓர் அசல் தமிழனாக நடந்தீர்களாம். உண்மைதானா?

பதில் : நண்பர்களே, அது சுத்தப் பொய். அந்த மாதிரி இந்த பையன் நடக்கவில்லை. சந்தேகமாக இருந்தால் அந்த ராஜகோபாலச்சாரியாரிடமே கேட்டுப் பாருங்கள்.

இவ்வாறு 'உண்மையும் பொய்யும்' என்னும் பகுதி 'நர்மதா'வில் ஓராண்டு காலம் தொடர்ந்தது. கோதுருத்தி கள்ளுக்கடை உரிமையாளர் முதல் அமெரிக்க ஜனாதிபதி ஐசனோவர் வரை எல்லோரும் அந்த 'உண்மையும் பொய்யும்' பகுதியில் வெளிப்படுத்தப்பட்டார்கள். சூரியனுக்குக் கீழேயுள்ள எல்லா விஷயங்களுக்கும் பஷீர் பதிலளித்தார். கேள்வி பதில்கள் மூலம் கேரளாவிலும் இந்தியாவிலுமுள்ள முக்கிய நபர்களை பஷீர் 'தனிமைப்'படுத்தினார். இந்தப் பகுதியை பஷீர் நிறுத்தும்போது இரண்டாயிரத்துக்கும் அதிகமான கேள்விகள் இங்கே படுக்கையில் உள்ளன. இரண்டணா செலவழித்து இந்த முட்டாள்தனமான கேள்விகளை ஏன் அனுப்புகிறீர்கள்? இன்னும் கொஞ்சம் காலத்துக்கு யாரும் கேள்விகளை அனுப்ப வேண்டாம். இங்கே படுத்துக் கிடப்பதற்கெல்லாம் முதலில் சமாதானம் சொல்லி முடியட்டும்..' என்று கூறித்தான் நிறுத்தினார்.

அதன்பிறகு 1947-48-ல் 'ஜெயகேரள'த்தில் 'உண்மையும் பொய்யும்' எழுதுவதற்காக பஷீர் சென்னைக்குச் சென்றார். எர்ணாகுளத்திலிருக்கும்போது கவிஞர் பி.பாஸ்கரன் பஷீருடன் தொடர்பு வைத்திருந்தார். பஷீரை பாஸ்கரனுக்கு மிகவும் பிடித்திருந்தது. இந்தத் தொடர்பினால்தான் பஷீர் சென்னைக்கு அழைக்கப்பட்டார்.

அதற்கு பஷீர், ''வருவேன், ஆனால் ஒரு நிபந்தனை. எனக்குத் தனியாக ஓர் அறை வேண்டும். யாரும் என் அறைக்கு வந்து என்னைத் தொந்தரவு செய்யக்கூடாது. வாரத்தில் ஏதாவது ஒன்றைப் பற்றித்தான் எழுதுவேன்'' என்று கூறினார். பாஸ்கரனும் அதற்குச் சம்மதித்தார்.

நுங்கம்பாக்கத்தில், 12, நூர் வீராசாமி தெருவிலிருந்த ஒரு லாட்ஜில்தான் பஷீர் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அங்கே அரசு அதிகாரிகள் உள்பட பன்னிரண்டு பேர்கள்

தங்கியிருந்தார்கள். பஷீரும் பாஸ்கரனும் அவர்களோடு சேர்ந்தார்கள். ஆனால் பஷீருக்கு மட்டும் சொந்தமாக ஓர் அறை அளிக்கப்பட்டிருந்தது. ஜனதா ரோட்டிலுள்ள ஜனதா அச்சகத்திலிருந்துதான் 'ஜெயகேரளம்' அச்சிட்டு வெளிவந்தது. பி. ராமன்மேனன் (ராம்ஸ்கி) என்பவர்தான் பத்திரிகை ஆசிரியர். கே. பத்மநாபன் நாயர் அச்சிட்டு வெளியிட்டார். பி. பாஸ்கரன் துணையாசிரியர். டாக்டர் சி.ஆர். கிருஷ்ணப்பிள்ளைதான் இதழின் உரிமையாளர்.

பஷீர் சென்னையிலும் ஒருநாள் சிறையில் கிடந்துள்ளார். அப்போது மலபார் சென்னை அரசாங்கத்தின் கீழே இருந்தது. அந்த நேரத்தில் மலபாரில் கம்யூனிஸ்ட் கட்சிக்கு எதிரான தடை மிகவும் கடுமையாக இருந்தது. பி.டி. ரணதிவேயின் கல்கத்தா தீஸிஸின்படி கம்யூனிஸ்டுகள் விவசாயத் தொழிலாளர் போராட்டங்களையும், தொழிலாளி வர்க்க இயக்கங்களையும் நடத்தினார்கள். இதுதான் மலபாரில் கம்யூனிஸ்டுகளை வேட்டையாட வைத்தது. கோழிப்புரத்து மாதவன் மேனன்தான் அன்றைய சென்னை அரசாங்கத்தின் உள்துறை அமைச்சராக இருந்தார்.

பி. பாஸ்கரனுக்கு கம்யூனிஸ்ட் கட்சியுடன் முன்பே தொடர்பு ஏற்பட்டிருந்தது. இந்த நெருக்கத்தின் காரணத்தால் கண்ணூரிலிருந்து பி.வி. சாத்து நாயர் போன்ற கம்யூனிஸ்ட் தலைவர்கள் தலைமறைவு வாழ்க்கைக்காக பஷீரும் பாஸ்கரனும் தங்கியிருந்த லாட்ஜுக்கு வந்து சேர்ந்தார்கள். அதோடு மட்டுமல்ல, ஜெயகேரளத்தின் சில இதழ்களில் மலபாரில் நடக்கும் கம்யூனிஸ்ட் வேட்டையைக் கண்டிக்கும் விதத்தில் சில கட்டுரைகளும் வந்தன. ஜனதா அச்சகத்திலுள்ள தொழிலாளிகளும் கம்யூனிஸ்டுகளாக இருந்தார்கள். (இந்தக் காலத்தில் அரசாங்கத்தின் தடை மூலம் 'தேசாபிமானி'யும் நின்றுவிட்டது.)

''ஜெயகேரளம்'' ஓர் அரசியல் பத்திரிகையாக இல்லையென்றாலும் மலபார் கொடுமைக்கு எதிராக 'கண்ணில் இரத்தமில்லாத கொடூரம்' என்னும் தீப்பொறி பறக்கும் கட்டுரை வந்தபோது சென்னை போலீஸுக்கு புகார் வந்தது. பொதுவாக கம்யூனிஸ்டுகள் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்காக செயல்பட்ட இந்தியாவின் ஒற்றர்கள் என கருதியிருந்தார்கள். உண்மையில், பஷீரோ கம்யூனிஸ்டு கட்சிக்கு எதிராகத்தான் இருந்தார். கம்யூனிஸத்திலுள்ள தனிநபர் சுதந்தரமில்லாமையை கடுமையாக எதிர்க்கவும் செய்துகொண்டிருந்தார்.

இந்த நேரத்தில் ரகசிய போலீஸார் ஜெயகேரளத்திலுள்ள ஆள்களை கவனமாக நோட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள். மலபாரிலிருந்த தலைமறைவான நபர்கள் சென்னைக்கு வந்துள்ளார்கள் என்னும் தகவலை அடிப்படையாகக் கொண்டுதான் இந்த ரகசிய நோட்டமிருந்தது. ஒருநாள் இரண்டு லாரிகளில் வந்து இறங்கிய குழுவிலிருந்தவர்களையும் அச்சகத்தில் இருந்தவர்களையும் கைது செய்து மவுண்ட் ரோடு (அண்ணாசாலை) போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு சென்றார்கள். அந்தக் கூட்டத்தில் பஷீரும் பாஸ்கரனும் பத்மநாபன் நாயரும் ராம்ஸ்கியும்கூட இருந்தார்கள். அங்குள்ள கிளைச் சிறையில் மூன்று அறைகளிலுமாக ஏறக்குறைய ஐம்பது நபர்களை அடைத்தார்கள்.

அன்றைய டெபுடி கமிஷனர் ஆர்.கே. சுகுமாரன்கூட மலையாளிதான். அவர் ஜெயகேரளத்திலுள்ள ஒவ்வொருவரையும் அழைத்து கேள்வி கேட்கத் தொடங்கினார். போலீஸ் இவற்றையெல்லாம் குறிப்பெடுத்துக் கொண்டிருந்தார்கள்.

பஷீரிடம் கமிஷனர் கேள்வி கேட்கத் தொடங்கினார்:

''நீங்கள் கம்யூனிஸ்டா?''

அதற்கு பஷீரின் பதில்: ''இல்லை, நான் ஒரு எழுத்தாளர்'' என்றவர் தொடர்ந்து ஆங்கிலத்தில், ''நான் சுதந்தரப் போராட்டத்தில் பங்கு பெற்றதுண்டு; சட்டம் எரிப்புப் போராட்டம் செய்ததுண்டு. இப்போது நான் அரசியலில் இல்லை. எந்தவொரு கட்சியிலும் உறுப்பினன் இல்லை. ஆனால் போலீஸ்காரர்களான நீங்கள் கம்யூனிஸ்டுகளை இப்படி அடித்து உதைத்துக் கொல்வதிலும் எனக்கு சம்மதமில்லை..'' என்று பொரிந்தார்.

''கம்யூனிஸ்டுகள் கொள்ளையும் கொலையும் செய்கிறார்களே? அதனை நீங்கள் அனுமதிக்கிறீர்களா?''

''கம்யூனிஸ்டுகள் அராஜகம் செய்கிறார்கள் என்று நீங்கள்தான் முடிவு செய்கிறீர்கள். இலக்கியவாதி என்னும் நிலையில் நான் உண்மையின் பக்கம்தான் நிற்பேன். உண்மை எதுவென்று எனக்குத் தெரியாது. ஆனால் நீங்கள் அவற்றையெல்லாம் மூடி வைக்கிறீர்கள் என்பது மட்டும் உண்மை. ஓர் எழுத்தாளனுக்கு ஒரு சார்பாக இருக்கப் பிடிக்காது. ஆனால், ஒரு பகுதியினரை கண்களை மூடிக்கொண்டு அடித்து உதைத்து அடக்குமுறை செய்வதிலும் என்னால் ஒத்துப்போக முடியவில்லை..''

மேலும் கோபாவேசமாகவே பஷீர் கூறினார்.

''இங்கே நம்முடைய சுதந்தரத்துக்காகத்தான் நாங்கள் போராடினோம். சுதந்தரம் கிடைத்தது. அந்த வகையில் கம்யூனிஸ்டுகளுக்கும் கொள்கை சுதந்தரம் வழங்க வேண்டும். அநியாயக்காரர்களாகவும் நீதிபதிகளாகவும் நீங்களே மேடைக்கு வரும்போது எங்கே சுதந்தரம் இருக்கப்போகிறது?'' ஜெய கேரளத்திலுள்ள கம்யூனிஸ்ட் உறுப்பினர்களும் அனுதாபிகளு மான பலரும் இந்தக் கேள்விகளுக்கு அரசாங்கத்துக்கு அனுகூலமாகப் பதில் சொன்னபோது, பஷீர் மட்டும் தீரமான தன் எண்ணத்தைக் கூறினார். இதன் பலனாக கமிஷனர் தீர்ப்பளித்தார்:

"All can Go, Except Basheer and Bhaskaran"

அன்றிரவு எல்லோரையும் அனுப்பிவிட்டார்கள். பஷீரும் பாஸ் கரனும் மட்டும் சிறையிலிருந்தார்கள். அக்காலத்திய தேசிய பத்திரிகைகள் கம்யூனிஸ்டுகளைக் கொலைகாரர்களாகவும் கொள்ளைக்காரர்களாகவும் வருணித்திருந்தன. அதற்குக் கிண்டல் செய்வதுபோல் பஷீர், ''பாஸ்கரா, கொள்ளையர்கள் எல்லோரும் போய்விட்டார்கள். இன்னும் ரெண்டு கொலை யாளிகள் மட்டும்தான் மிஞ்சியுள்ளார்கள்'' என்று கூறினார்.

இதோடு மட்டுமல்லாமல் இந்த இருவருக்கும் சிறைத்தண்டனை கிடைக்கும் என்பதும் உறுதியாயிற்று. ஆனால் அன்றைய சென்னை அரசாங்கத்தில் செல்வாக்குள்ள டாக்டர் சி.ஆர்.கிருஷ்ணப்பிள்ளை என்பவர் தம்முடைய செல்வாக்கைப் பயன்படுத்தி அவர்களை விடுவித்தார். அதன்பிறகும் பஷீர் மனம் தளரவில்லை. கிளை சிறைச்சாலையிலிருந்து 'ஜெயகேரளம்' அலுவலகம் வரையில் போலீஸ் வண்டியிலேயே திரும்பக் கொண்டுபோய்விட வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். காரணம், தம்மை கொண்டுவரும்போது போலீஸ் ஜீப்பில்தான் அழைத்து வந்தார்கள். அதன்படி திரும்பவும் அதேபோல்தான் போக வேண்டும் என்பது அவரின் எண்ணம். கடைசியில் போலீஸாரும் அதேபோல்தான் செய்தார்கள்.

சென்னையில் வாழ்ந்தபோதுதான் 'பூவன்பழம்' என்னும் அற்புத மான கதையை எழுதினார் பஷீர். அக்கதையை அவர் ஆறுமுறை மாற்றி மாற்றித் திருத்தி எழுதினாராம். ஜெயகேரளத்தின் முதல் சிறப்பிதழில் இந்தக் கதை பிரசுரமாயிற்று. அப்போது சென்னை

யில் ராய் சௌதுரியின் கீழே ஓவியக் கலை பயின்ற எம்.வி. தேவன்தான் அக்கதைக்கு ஓவியம் வரைந்தார். (பிற்காலத்தில் தன் மகளுக்கு பூவம்பழம் நாயகியான ஜமீலா என்னும் பெயரைச் சூட்டினார் பஷீர்.) அதே காலகட்டத்தில்தான் 'ஆனைவாரியும் பொன்குரிசும்' என்னும் கதையையும் எழுதினார். பஷீருக்கு தான் எழுதிய கதையை பிறரிடம்கொடுத்து படிக்கச் சொல்லிக் கேட்கும் பழக்கம் உண்டு. அந்த வாசிப்பைக் கேட்கும்போது கதையிலுள்ள கதாபாத்திரங்களே நேரில் வந்து பேசுவதாக அவர் உணர்வார்...

ஏறக்குறைய ஒன்றரை ஆண்டுகள் வரை பஷீர் சென்னையில் தங்கியிருந்தார். அன்று சென்னை கேரள சமாஜம், ஒருசிலரின் கட்டுப்பாட்டில் இருந்தமையால், அதை மீட்பதற்காக, எம்.என். நம்பியார், எம். கோவிந்தன், எம்.வி. தேவன், கே.ஏ. கொடுங்கலூர் என்பவர்கள் சேர்ந்து ஒரு குழுவை ஏற்படுத்தினார்கள். டாக்டர் மாதவன்குட்டியை தலைவராகவும், எம்.என். நம்பியாரை செயலாளராகவும் கொண்டு வந்தார்கள். இந்த மீட்புப்போரின் சூத்ரதாரியாக பஷீர்தான் பின்னணியில் இருந்தார்.

1951-ல் என்.வி. கிருஷ்ணவாரியார் 'மாத்ருபூமி' வார இதழின் ஆசிரியராக இருந்த காலத்தில்தான் 'ஆனைவாரியும் பொன் குரிசும்' நாவல் தொடராக வெளிவந்தது. தமிழ் இதழ்களான குமுதம், கல்கி போன்றவற்றில் ஒரு நீண்ட கதை தொடராக வெளியிடப்பட்டு வந்ததுபோல், 'மாத்ருபூமி'யில் இந்தக் கதை தொடராகப் பிரசுரமாயிற்று. 'ஆனைவாரியும் பொன்குரிசும்' கதையை ஒரே கதையாகத்தான் பஷீர் எழுதினார். என்.வி.தான் அதைத் தொடராக்கினார். அதற்கும் எம்.வி. தேவன்தான் ஓவியம் வரைந்தார்.

இப்படித்தான் மலையாள மொழியில் முதன்முதலாக ஒரு தொடர்கதையையும் அதில் வரும் கதாபாத்திரங்களின் ஓவியங் களையும் பத்திரிகையில் வெளியிடத் தொடங்கினார்கள்.

## பதினொன்று

எர்ணாகுளத்து வாழ்க்கையானது பஷீரின் இலக்கிய ஈடுபாட்டையும் அதனோடு மது அருந்துதலையும் வேகப்படுத்தியது. ஆமாம், எழுத்தாளர்களுடனான உறவையும், நல்ல நண்பர்களுடனான பிணைப்பையும் இந்த எர்ணாகுளத்து வாழ்க்கை பஷீருக்கு ஒரு வகையில் நல்ல குணத்தையும் சில பாதிப்புகளையும் உண்டாக்கியது என்றால், திருச்சூர் வாழ்க்கையோ பஷீருக்கு அநுராகத்தின் தினங்களாகவே இருந்தது. தேவியைச் சந்தித்ததும் அவரைக் காதலித்ததும் எல்லாம் திருச்சூரில்தான்...

பஷீர் திருச்சூருக்குச் செல்வதற்குக் காரணம், ஒரு புத்தகத்தை இன்னுமொரு கம்பெனிக்காக மங்களோதயம் அச்சகத்தில் அச்சடிக்க வேண்டி இருந்ததால்தான். அந்தப் புத்தகத்தின் புரூஃபை பார்ப்பதற்காகத்தான் எர்ணாகுளத்திலிருந்து பஷீர் திருச்சூருக்குச் சென்றார். அப்போது ஒருநாள் மங்களோதயத்தின் நிர்வாக இயக்குநர் ஏ.கே.டி.கே.எம். வாசுதேவன் நம்பூதிரிபாடு பஷீரை அழைத்தார்.

சாதாரணமாக, எழுத்தாளர்கள் நம்பூதிரிபாடுக்கு முன்னால் அமரமாட்டார்கள். பஷீர் இந்த விவரத்தை அறியாமல், சென்றவுடன் நம்பூதிரிபாடை வணங்கிவிட்டு, அவருக்கு

முன்னால் கிடந்த நாற்காலியில் அமர்ந்தார். தன் கையில் எடுத்து வந்த குடையை மேஜை மேல் வைத்தார். அதோடு மட்டுமல்ல, ஜிப்பா பையிலிருந்து தீப்பெட்டியையும் பீடியையும் எடுத்து, பீடியைப் பற்றவைத்து ஓர் இழுப்பு இழுத்தார். இதற்கிடையே பற்றவைத்த தீக்குச்சியை போடுவதற்கு இடம் தேடினார். உடனே நம்பூதிரிபாடு எங்கிருந்தோ ஓர் ஆஷ்ட்ரேயை எடுத்து வந்து பஷீருக்கு முன்னால் வைத்தார். இவையெல்லாம் நம்பூதிரிபாடுக்கு புதிய அனுபவமாக இருந்தது.

பஷீருடன் ஒரு வியாபார விஷயத்தைப் பற்றி பேசுவதற்குத்தான் நம்பூதிரிபாடு அழைத்தார். அதாவது, பஷீரின் புத்தகங்களெல்லா வற்றையும் மங்களோதயம் கம்பெனி வெளியிடுவதற்கு விருப்பப்படுகிறதென்று நம்பூதிரிபாடு கூறினார்.

அதற்கு பஷீர், ''நாம் கூட்டு சேர முடியாது. அதற்குக் காரணம், ஓர் எழுத்தாளனுக்கு பதிப்பாளர் மரியாதையான பணம் கொடுப்பதில்லை. அதனால் என் புத்தகங்களை சொந்தமாக அச்சிட்டு விற்பதற்குத்தான் எனக்கு விருப்பம்'' என்று பதிலளித்தார்.

மேலும், தன் புத்தகம் விற்பதற்கான வழியையும் பஷீர் சொன்னார். ஒரு புத்தகம் விற்றால் ஒன்றேகால் அணா கிடைக்கும். அதை வைத்து ஒரு சாப்பாடு வாங்கலாம். அப்படி, தன் புத்தங்களை வீடுகள்தோறும், கடைகள் தோறும் நடந்தே தன்னால் விற்க முடியும். அந்தப் புத்தகங்களையும் ஐந்தாறு நிமிடங்களில் படித்துவிட முடியும். அப்படி படித்து முடித்த புத்தகங்களையும் திருப்பிக் கேட்டு வாங்கிக் கொள்வதால், ஒரே புத்தகத்தையே எட்டு பத்து முறை விற்க முடியும்!

இதைக் கேட்டதும் நம்பூதிரிபாடுக்கு சுவாரஸ்யம் தோன்றியது.

''இப்படி ஒரு இலக்கியவாதியை இப்போதுதான் முதன்முதலாக பார்க்கிறேன்'' என்ற நம்பூதிரிபாடு, பஷீருடன் ஓர் ஒப்பந்தத்தை ஏற்படுத்திக் கொண்டார். பஷீர் தன் இருப்பிடத்தை திருச்சூருக்கு மாற்றிக் கொள்ள வேண்டும். வீடெல்லாம் கூட நம்பூதிரிபாடே ஏற்பாடு செய்வார். புத்தக விலையில் முப்பத்து மூன்று சதவிகிதம் பஷீருக்கு சன்மானமாக அளிக்கப்படும். முன்பணமும் கொடுக்கப் படும். இந்த விவரங்கள் மற்ற இலக்கியவாதிகள் யாருக்கும் தெரியக்கூடாது. இதுதான் அந்த ஒப்பந்தத்தின் விவரம்.

பஷீரும் சம்மதித்தார். ராயல்டியை மட்டும் நாற்பது சதவிகிதம் சொல்லி பின்பு மாற்றினார். பஷீரும் திருச்சூரில் தங்குவதற்குத் தொடங்கினார்.

திருச்சூரில்தான் பேராசிரியர் முண்டச்சேரியை பஷீர் அறிமுகப் படுத்திக் கொண்டார். அவர்கள் அதன்பின் உற்ற நண்பர்களாக மாறினார்கள். பகல் நான்கு மணி முதல் இரவு இரண்டரை மணி வரை சுற்றித் திரிவதுதான் இவர்களின் முக்கிய வேலை. ஏறக்குறைய நேரங்கெட்ட நேரத்திய உணவு. முண்டச்சேரியின் வீட்டில் பஷீருக்கும் உணவு கிடைக்கும். இதுவொரு நிரந்தர செயலாகவே மாறியது. இதே காலத்தில்தான் சங்ஙம்புழை கிருஷ்ணப்பிள்ளையும் அறிமுகமானார். ஏ.கே.டி.கே.எம். நம்பூதிரிபாடு இடப் பள்ளியிலிருந்து சங்ஙம்புழையையும் திருச் சூருக்கு அழைத்து வந்தார். ஒருநாள் திருச்சூரிலிருந்து முண்டச் சேரியும் பஷீரும் பறவூரிலுள்ள வீட்டுக்குச் சென்று கேஸரி பாலகிருஷ்ணப் பிள்ளையை பார்த்தார்கள். அவர் பஷீரிடம் நிறைய எழுதும்படி கூறினார்.

முண்டச்சேரி, பஷீர், சங்ஙம்புழை ஆகியோரின் கூட்டு இன்பம் நிரம்பியதாக இருந்தது. இரவு இரண்டு மணி வரையில் பஷீரின் அறையில்தான் நிரந்தர முகாம். இந்த மூவர் கூட்டுக்குப் பின்னே தகழி, பொன்குன்னம் வர்க்கி என்பவர்களும் சேர்ந்துகொண்டு மதுவருந்துவது, கண்டதையெல்லாம் தின்பது, வெற்றிலை துப்புவது, பலவற்றைப் பற்றியும் விவாதிப்பது, இசை கேட்பது போன்றவைதான் இவர்களின் செயல்பாடுகளாக இருந்தன. ஒரு கிராமஃபோனையும் கொஞ்சம் அதிகமாகவே ரிக்கார்டுகளையும் நம்பூதிரிபாடு இலவசமாகக் கொடுத்திருந்தார். இதற்குமேல் திருச்சூரில் ஒரு வீட்டையும் தோட்டத்தையும் கூட வாங்கிக் கொடுப்பதற்கு நம்பூதிரிபாடு தீர்மானித்திருந்தார். இடத்தையும் வீட்டையும்கூட பஷீரை அழைத்துப் போய் காட்டினார். அந்த இடத்தை பஷீரின் பெயருக்கு எழுதுவதாகவும் கூறினார். ராயல்டியிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாகக் கடனில் பிடித்துக் கொண்டால் போதும் என்று கூறினார். நம்பூதிரிபாடின் இந்த தாராள மனத்தை பஷீரால் ஏனோ ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அந்த இடத்தையும் வீட்டையும் வேண்டாம் என்று கூறி விட்டார். (இப்படி அப்போது கூறியதுகூட சனி நாவில் புகுந்துவிட்டதால்தான் என்று பஷீருக்கு பிற்காலத்தில் தோன்றியது.)

நம்பூதிரிபாடுக்கும் இந்த மூவர் கூட்டணியை-பஷீர், முண்டச்சேரி, சங்கம்புழை - மிகவும் பிடித்துவிட்டது. இதன்மூலம் பஷீருக்கும் திருச்சூர் வாழ்க்கை ஒருவித சுகமாகவே அமைந்திருந்தது. 'கதாபீஜம்' என்னும் ஒரு நாடகத்தைத்தான் பஷீர் முதன்முதலாக மங்களோதயத்துக்குக் கொடுத்தார். இதற்கு ஐநூறு ரூபாய் முன்பணமும் கிடைத்தது. பின்பு 'சப்தங்கள்' வெளியிட்டபோது நாற்பது சதவிகிதம் ராயல்டியும் கிடைத்தது. 'கதாபீஜம்' என்ற நாடகம் 'அனைத்துக் கேரள இலக்கிய சபை'யின் பதினொன்றாம் மாநாட்டில் மேடையேற்றுவதற்காக எழுதியதாகும். பஷீரின் மற்ற படைப்புகளைப் போலவே இந்த நாடகத்திலும் ஆத்மாம்சம் ஆவேசப் பிடிப்பாக இருந்தது. ஓர் எழுத்தாளனின் வாழ்க்கையில் நேரும் துன்பங்களும் சமூகத்தின் நிலைப்பாடும்தான் கதாபீஜத்தின் உள்ளடக்கமாக இருந்தது. அக்காலத்தில் பஷீர் அனுபவித்த கடுமையான துன்பங்களும் வேதனைகளும்தான் 'இலக்கியவாதி' என்னும் கதாபாத்திரத்தின் மூலம் இதில் வெளிப்பட்டது.

இலக்கியத்தில் மிகவும் அதிக விமரிசனத்துக்குட்பட்ட பஷீரின் படைப்பு 'சப்தங்கள்'தான். போரில் பங்கு கொள்ளாமலேயே போரின் பயங்கரத்தன்மையைப் பற்றி பஷீர் எழுதினார். போர் முடிந்து வந்த நண்பன் சொன்ன சம்பவங்கள்தான் 'சப்தங்கள்'. ஆண் விபசாரம், ஸிபிலிஸ், தெருமுனை விபசாரம் போன்ற இருளின் மறைவிலுள்ள யதார்த்தங்களை மலையாள மொழியில் முதன்முதலாக வெளிச்சம் போட்டுக் காட்டியவர் பஷீர்தான். வாழ்க்கையின் ஒதுக்கப்படாத நிர்வாண உண்மைகள் 'சப்தங்களா'க வெளிவந்தபோது பரவலாக விமரிசனங்களும், ஆட்சேபணைகளம் எழுந்தன. ஆனால், 'சப்தங்கள்' மிக உன்னதமான படைப்பு என்று கூறி கேஸரி பாலகிருஷ்ணப் பிள்ளை எதிர்தரப்பு வாதங்களை முனை மழுங்கச் செய்தார்.

'சப்தங்களி'ல் வரும் சில வரிகள்:

''மொதல்ல காசு வரட்டும். காசை மொதல்ல கொடுத்துட்டு அப்புறமா முலைகளைப் பிடிக்கலாம்!''

''உனக்கு எப்பவும் காசோட நெனைப்பாவேத்தான் இருக்கு. உன்மேலுள்ள காதலால்தானே நான் இவ்வளவு தூரம் நடந்து வந்திருக்கேன்!''

வேதனை நிறைந்த தழுதழுப்போடு கூடிய சிரிப்பைச் சிரித்து விட்டு, ''காதலாலும் நேசத்தாலும் என் மகனோட பசியும், என்னோட பசியும் போய்விடுமா?'' என்று கேட்டாள்.

''சரி, உனக்கு எவ்வளவு வேணும்? அதைச் சொல்லு.''

''ஒரு ரூவாய்தான்! அதை முன்னாடியே என் கையில இந்தக் கையில கொடுத்துடணும்!''

''இந்தா, ஒரு ரூவா!... அடியேய், உனக்கு ஏதாச்சும் நோய், கீய் உண்டா?''

''ஆமாம் பின்னே..! நோய்தான்!''

''நீ இன்னும் ஒண்ணும் சாப்பிடலியா?''

''வீண் பேச்சு எதையும்பேசிக் கொண்டிராம உனக்கு என்ன வேணுமோ, அதை செஞ்சிட்டு போ! முண்டை அவிழ்த்துட்டு நான் இப்படி சாஞ்சு நின்னா போதுமா?''

- இப்படிப்பட்ட, அடிநாதமான சத்தங்கள் பஷீரின் படைப்புகளில் வேரோடி நிற்கும் அனுபவங்களாகும். அசாதாரணம்தான் என்றாலும், சாதாரணமான இந்தச் சம்பவங்கள் இரத்தம் புரண்ட சித்திரிப்பு. இருளின் திரை மறைவு மட்டும் இல்லாமல் இருந் திருந்தால் பட்டினி மரணம் நிகழும் நிலையிலுள்ள மனிதர்கள் ஏராளமாகவே இருப்பார்கள். ஆனால், அவர்களை இந்தச் சமூகம் காண்பதோ மிகவும் வெறுப்போடுதான். பகலில் நடமாடும் பெரிய மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் இப்படிப்பட்ட ஏழைகளுக்கும் வாழ்க்கையுண்டு என்பதை பஷீர் வெளியுலகுக்குக் காண்பித்துக் கொண்டிருந்தார். இந்தக் காட்சியைக் கண்டு திடுக்கிட்டுப் போனவர்களைப் பார்த்து பஷீர் சிரிக்க மட்டுமே செய்தார்.

இவ்வாறு இலக்கியமேகலையில் பல சிதறல்களையும் படைத்த பஷீர், திருச்சூர் வாழ்க்கையில் ஒரு காதல் வலையில் அகப்பட்டார். அவர் பெயர் சாஸ்வதிதேவி. ஒரு நாயர் குடும் பத்தைச் சேர்ந்தவர் அவர். பஷீரின் ஓர் ஆராதனைக்காரியாக இருந்தவர். பி.எஸ்ஸி., மாணவி. சிவப்பாகவும் மெலிந்து மிருந்த தேவிக்கு அப்போது இருபத்திரண்டு வயதுதான். அவர் முகத்தில் எப்போதும் ஒரு வருத்தமான தோற்றம். தன் படிப்பு சம்பந்தமான ஒரு சொற்பொழிவைத் தயாரிப்பதற்காகத்தான் முதன்முதலாக பஷீரைத் தேடி வந்திருந்தார் சரஸ்வதிதேவி.

பஷீர் எழுதிக்கொடுத்த சொற்பொழிவைப் படித்துவிட்டு அவர் முதல் பரிசும் பெற்றார். இதன்பிறகு அவர்கள் தினசரி சந்தித்துக் கொண்டார்கள். அதன் மூலம் காதல் பிணைப்பிலும் அகப்பட்டுக் கொண்டார்கள்.

தேவியுடனான காதல், பைத்தியமாக முற்றிய நேரத்தில், பஷீர் தேவியைப் பற்றி ஏராளமான கதைகள் எழுதினார். ஆனால் தேவியின் வேண்டுகோளுக்கு இணங்க அந்தக் கதைகளை யெல்லாம் கிழித்தெறிந்தார். இருந்தாலும், பின்னாளில் 'ஹூந்தாப்பி புஸ்ஸாட்டோ' என்னும் திரைக்கதையில், சொற்பொழிவு உரையை எழுதி வாங்க வரும் பெண்ணைப் பற்றியும் சொல்கிறார். அது தேவியைப் பற்றிய நினைவு களிலிருந்து எழுதியதாக இருக்கலாம். தேவி-பஷீரின் காதல் தினங்களை பற்றிய விவரங்களை, அன்றன்று நடந்த நிகழ்ச்சிகளை சூடாறுவதற்குள் தன் நாள்குறிப்பிலும் எழுதி வைத்திருந்தார் பஷீர். அதுதான், 'காதலனின் டைரி'. இதை ஒருபோதும் வெளியிடுவதற்கு அவர் தீர்மானித்திருக்கவில்லை. ஆனால் எம்.டி.வாசுதேவன் நாயர், சுகுமார் அழிக்கோடு, என்.பி. முகமது, டாக்டர் எம்.எம். பஷீர் ஆகியோர் சேர்ந்து உருவாக்கிய கிளாசிக் புக் டிரஸ்ட் 'காதலனின் டைரி'யை 'அனுராகத்தின் தினங்கள்' (காதல் தினங்கள்) என்னும் பெயரில் வெளியிட்டது. 'காதலனின் டைரி'யை உண்மையில் எரித்துவிட வேண்டுமென்றுதான் மனைவியிடம் பஷீர் ஒப்படைத்தார். அந்த அளவுக்கு அந்த டைரி குறிப்பில் சில சம்பவங்கள் எழுதப்பட்டிருந்தன.

ஆனால், நண்பர்கள் அதை அழிப்பதற்கு அனுமதிக்கவில்லை. புத்தகத்தை அச்சிட கொடுத்தபோது இறுதி அத்தியாயத்தை சேர்க்க வேண்டியது இருந்தது. அதற்காக டாக்டர் எம்.எம்.பஷீர், வைக்கம் முகம்மது பஷீரிடம் அதைக் கேட்டெழுதி முழுமையாக்கினார்.

'பால்யகால சகி'யைப் போலவே ஒரு துன்பியல் காதல் கதைதான் 'அனுராகத்தின் தினங்களா'கும். தேவி, பஷீருடன் வருவதற்கு தயாராகவே இருந்திருக்கிறார். ஆனால், பஷீர் தன்னுடைய சொந்த வாழ்க்கையின் பாதுகாப்பின்மையையும், இந்தத் திருமணத்தில் ஏற்படும் தேவியின் தாய் தந்தையர் மற்றும் அவரின் குடும்பத்தின் தகர்வையும் பற்றி யோசித்தார். அதனால், இந்தத் திருமணமே வேண்டாம் என்று கூறிவிட்டார். பரஸ்பரம் மறந்துவிடலாம் என்றும் கூறிவிட்டார். காரணம், பஷீருக்கும் தேவிக்குமிடையே

யுள்ள உறவை அறிந்த தேவியின் தாயார் ரயில் தண்டவாளத்தில் தலை வைத்து இறப்பதற்கு முயன்றபோது ஊரார் ஓடிச்சென்று காப்பாற்றி இருக்கிறார்கள். தந்தையும் மனம் தளர்ந்துவிட்டார். கடைசியில் தேவியின் குடும்பத்திலுள்ள மற்றவர்களெல்லாம் சேர்ந்துதான் தேவியின் திருமணத்தை நிச்சயத்திருக்கிறார்கள். பஷீரும் அந்தத் திருமணத்துக்கு ஒப்புக்கொள்ளுமாறு தேவியை நிர்ப்பந்தப்படுத்தியிருக்கிறார்.

''... திருமணம் முடிந்த மறுநாள் காலையில் வெள்ளாடை அணிந்து கோயிலுக்குச் செல்வதுபோல் தேவி என் அறைக்கு வந்தாள். ஒரு கையில் ஒரு காகிதப் பொட்டலத்தில் பத்து பன்னிரண்டு பவுன் மோதிரங்கள் இருந்தன. வந்தவுடன் வழக்கம் போலவே தன் கண்ணாடியைக் கழற்றி ஜன்னல் விளிம்பில் வைத்தாள் தேவி.

''தேவி, எனக்கு மோதிரங்கள் வேண்டாம்'' என்று நான் கூறினேன்.

அதற்கு தேவி, ''என் திருப்திக்காகவாவது ரெண்டை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்றாள்.

நான் இரண்டு மோதிரங்களை எடுத்துக்கொண்டேன்.

''உன் கணவரிடம் நம் நட்பைப் பற்றிக் கூறவேண்டும். அப்படி நீ சொல்லவில்லை என்றால் வேறு யாராவது சொல்லி விடுவார்கள் தேவி. நான் உன்னை வாழ்த்துகிறேன். அதேபோல் எல்லா ஐஸ்வரியங்களையும் அளிக்கும் அந்த கருணையே உருவான கடவுளும் உன்னை அனுக்கிரகிக்கட்டும் தேவி'' என்று நான் கூறினேன்.

நான் தேவியின் மூக்குக் கண்ணாடியை எடுத்து அதன் இரண்டு பக்கக் கண்ணாடிகளிலும் முத்தமிட்டேன். அதன்பிறகு அதை தேவியின் முகத்தில் பொருத்தினேன்.

''தேவி, நிம்மதியாகப் போ...''

தேவி குனிந்து என் இரண்டு பாதங்களிலும் முத்தமிட்டாள். நான் தேவியின் தலையில் கையை வைத்து அனுக்கிரகித்தேன்: ''மங்களம் உண்டாகட்டும்! தெய்வ அனுக்கிரகத்தோடு நீ தீர்க்கசுமங்கலிபவவாக இருக்க வேண்டும் சரஸ்வதி தேவி!''

'அனுராகத்தின் தினங்கள்' இப்படித்தான் முடிந்தது.

## பன்னிரண்டு

பஷீர் மீண்டும் திருச்சூரிலிருந்து எர்ணா குளத்துக்குத் திரும்பினார்.

பஷீருக்கு எப்போதுமே ஆத்மார்த்த நேச முள்ள சீடர்கள் இருந்தார்கள். சிறையிலும் வெளியிலும் கூட அப்படித்தான். போஞ்ஞிக் கரை ராபி, பி.எஸ். தாமோதரன், பி.கே. பாலகிருஷ்ணன், பெருன்ன தாமஸ், எம்.பி. கிருஷ்ணப்பிள்ளை, குட்டப்பன் என எர்ணா குளம் சீடர்களின் ஒரு பெரிய நீண்ட வரிசையே அவருக்கு உண்டு. இவர்களைத் தவிர திருச்சூரிலிருந்தும் இரண்டு சீடர்கள் பஷீருக்குக் கிடைத்தார்கள். சோபனா ஸ்டுடியோ உரிமையாளர் கே. பரமேஸ்வரன் நாயரும், ராமு காரியட்டும்தான் அந்த சீடர்கள்.

பரமேஸ்வரன் நாயர் திருவனந்தபுரம் 'சிரயின்கீழ்' என்னும் இடத்தைச் சேர்ந்தவர். இவர் பள்ளியில் படிக்கும் காலத்தில் 'பால்யகால சகி'யைப் படித்துவிட்டுத்தான் பஷீரின் ஆராதகராக மாறினார். திருச்சூரில் 'சோபனா' என்னும் பெயரில் ஒரு ஸ்டுடி யோவைத் தொடங்கியிருந்தார். அங்குதான் ஏ.சி. ஜார்ஜ், ராமுகாரியட் என்பவர்களின் மூலம் பஷீரை நேரில் அறிமுகப்படுத்திக் கொண்டார். பிற்காலத்தில் 'செம்மீன்' திரைப்

படத்தின்மூலம் அகில உலகப் புகழைப் பெற்ற ராமுகாரியட் அன்று பஷீரின் சீடராக மட்டுமே இருந்தார். குரு சொல்லும் எந்தக் காரியத்தையும் செய்வதற்குத் தயார் நிலையில் நிற்கும் அருமை சீடர் அவர்.

பரமேஸ்வரன் நாயரின் ஸ்டுடியோவுக்கு சனிக்கிழமைதோறும் பஷீர் செல்வார். ஞாயிற்றுக்கிழமையும் திருச்சூரில் கூடி கும்மாளமிட்டுவிட்டு திங்கள்கிழமைதான் எர்ணாகுளத்துக்குத் திரும்புவார். பரமேஸ்வரன் நாயரை 'பரமு' என்றும் ராமுகாரியட்டை 'ராமு' என்றும்தான் பஷீர் அழைப்பார். ஆனால், அவர்களோ பஷீரை 'குரு' என்று மட்டுமே அழைத்து உரையாடுவார்கள்.

பஷீரின் அந்தக் காலகட்டத்தைப் பற்றி பரமேஸ்வரன் நாயர், 'மிகவும் சாதாரண மனிதர்; வாழ்க்கையின் எல்லா விஷயத் திலுமே ஒரு வேறுபாட்டு தன்மை; அளவற்ற அன்பை வெளிப் படையாக காட்டாத நிலை; தன் செயல்பாட்டிலும் ஏடாகூடத் தன்மையில்லை. வாழ்வை மிகவும் லாகவத் தன்மையோடுதான் அவர் நெருங்கியிருந்தார். அவர் துக்கத்துடன் இருந்ததாக நான் கண்டதேயில்லை' என்று நினைவு கூர்கிறார்.

பஷீர், பரமு, ராமு ஆகியோர் சேர்ந்த வாழ்க்கை மிகவும் ஆரோக்கியமானதாக இருந்தது. ராமுவும் நண்பர்களும் எடுத்த 'நீலக்குயில்' திரைப்படம் பெரும் பெற்றி பெற்றது. அதன் மூலம் ராமு புகழ் பெற்றார். கொஞ்சம் பணமும் கிடைத்தது. பரமு அந்தப் படத்துக்கு ஸ்டில் ஃபோட்டோகிராஃபராக இருந்தார். இந்த வெற்றிப் போதையிலேயே ஒருநாள் ராமுவும் பரமுவும் சேர்ந்து எர்ணாகுளத்துக்கு பஷீரைக் காண்பதற்காகச் சென்றார்கள். அன்று அவர்கள் கையில் கொஞ்சம் பணமும் இருந்தது. அதனால் ஒரு பெரிய ஹோட்டலுக்குச் சென்று முதல்தரமான உணவு உண்டார்கள்.

அதன்பின் பஷீரிடம் சென்றவர்கள். ''குருவே! நாங்கள் இப்போது திருப்தியாகச் சாப்பிட்டு விட்டுதான் வருகிறோம். இனிமேல் எந்தவொரு சின்ன ஹோட்டலுக்கும் சென்று நாங்கள் சாப்பாடு சாப்பிடமாட்டோம். நல்ல உயர்தரமான ஹோட்ட லுக்குச் சென்று விலை மிகுந்த உணவுகளைத்தான் நாங்கள் சாப்பிடுவோம். இனிமே எங்களின் வாழ்க்கையே லாவிஷ் தான்!''

இதைக்கேட்ட பஷீர் மிகவும் பவ்வியமாக ''ஓ''... என்று கூறி வணங்கினார்.

ராமுவின் அடுத்த திரைப்படம் 'மின்னா மினுக்கு' (மின்மினி பூச்சி) தோல்வியடைந்தது. பொருளாதார வகையிலும் அவருக்கு மிகவும் இழப்பேற்பட்டுவிட்டது. இதன்பின்பும் ஒருநாள் ராமுவும் பரமுவும் சேர்ந்து பஷீரைக் காண்பதற்காக மீண்டும் எர்ணாகுளத்துக்கு வந்தார்கள். பஷீர் அப்போது போட்ஜெட்டியிலுள்ள சர்க்கிள் புக் ஸ்டாலில் அமர்ந்து கொண்டிருந்தார். இருவரும் பஷீரின் முன்பு மிகவும் பவ்வியமாக வந்து நின்றார்கள். அவர்களின் கையில் அப்போது சல்லிக்காசு இல்லை. பஷீரும் அவர்களை தலை நிமிர்ந்து பார்க்கவில்லை. கொஞ்சம் நேரம் சென்றதும் எவ்வித அறிமுகமும் இல்லாத மாதிரியான தோரணையில் பஷீர் அவர்களை நோக்கி, ''உம்... என்ன வேணும்?'' என்று கேட்டார்.

பரமுவின் வாயிலிருந்து சத்தம் எழவில்லை. இருந்தும் வார்த்தையை மென்று விழுங்கியவாறு திக்கித் திக்கி, ''ஆ... ஒன்றுமில்லை, சும்மாதான் வந்தோம்'' என்று கூறி முடித்தார்.

அப்போது ராமு, புக் ஸ்டாலிலுள்ள புத்தகங்களை வெறுமனே புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தார்.

ஒரு மாம்பழத்தை எடுத்துத் தோல் சீவிக்கொண்டேட அலட்சியமாக ''என்ன, இப்போ ரொப்பிக்கறதுக்கு பணமொன்னும் இல்லையோ?'' என்று கேட்டார்.

பஷீரின் கேள்வியைக் கேட்டதும் அழுவதைப்போல், ''குருவே படம் ஊத்திக்கிட்டுது. நாங்கள் இப்போது மிகவும் தரித்திரத்தில் இருக்கிறோம். இன்னிக்கு இதுவரைக்கும் நாங்கள் எதுவுமே சாப்பிடவில்லை என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன். எங்களை நீங்கதான் காப்பாத்தணும்'' என்று கூறினார் ராமு.

ராமுவையும் பரமுவையும் ஹோட்டல் ஸீ வ்யூவுக்கு அழைத்துச் சென்று டிபன் வாங்கிக் கொடுத்தார் பஷீர். பின்பு, புக் ஸ்டாலுக்குச் சென்று மேஜையின் இழுப்பிலிருந்து ஒரு கணக்குப் புத்தகத்தை எடுத்தார். அதில், ராமு, பரமு டிபன் செலவு ரூ '...' என்று எழுதினார். பஷீர் இப்படியொரு கணக்குப் புத்தகத்தை வெகுகாலமாக பராமரித்து வந்தார். அதிலுள்ள குறிப்புகளும் சுவையானதாக இருக்கும்.

ஓர் உதாரணம்:

'ராமு வகை - பாட்டன் செத்த செய்தியை அறிவிப்பதற்காக வாங்கிய பற்று...'

''இப்படித்தான் கணக்குகள் எழுதுவாரே தவிர யாரிடமிருந்தும் திருப்பி பணம் கேட்டதே இல்லை. கையில் பணம் இருந்து விட்டால் இதுபோல் செலவு செய்வதும் பஷீரின் குணமாகும்.

1954-ல் தான் பஷீருக்கு முதன்முதலாக மனவியாதி வந்தது. இதற்கு முக்கிய காரணமே அளவுக்கு மீறி அவர் மது அருந்தியதுதான். ஏறக்குறைய எல்லா இலக்கியவாதிகளும் பஷீரைக் காண்பதற் காகவே அப்போது எர்ணாகுளத்துக்கு வந்துபோய்க் கொண்டிருந் தார்கள். அவர்கள் வரும்போது அவர்களின் கையில் கட்டாயம் மது இருக்கும். அதன்பின் ஹோட்டல் லீ வ்யூவிலுள்ள அறையில் குடியும் கூத்தும்தான். பஷீருக்கு இந்த குடியின்மேல் ஆர்வம் அதிகம் இல்லையென்றாலும் நண்பர்கள் வற்புறுத்தும்போது மறுத்து எதுவும் சொல்வதில்லை. ஆனால், இலக்கியவாதிகளை விட பஷீருக்கு பிடித்தமான கம்பெனி, நர்மதா ராகவன் நாயர், எம்.பி. கிருஷ்ணப்பிள்ளை, பெருன்ன தாமஸ், குட்டப்பன் ஆகியோர்தான்.

ஒருநாள் குட்டப்பன் தன்னுடைய 'மோரிஸ் மைனர்' காரில் திருச்சூரிலுள்ள பரமேஸ்வரன் நாயரைக் காண்பதற்குச் சென் றார். எர்ணாகுளத்தைச் சேர்ந்த வழக்கமான கும்பலும் காரில் இருக்கிறது என்றவர், மேலும் கூறினார், 'ஒரு சின்ன வேலை. வல்லப்புழை வைத்தியனைப் பார்க்கணும்... பஷீருக்குக் கொஞ்சம் சுகமில்லை'

அப்படித்தான், மனநலம் குன்றிய பஷீரை வல்லப்புழை வைத் தியரத்தினம் பி.சி. கோவிந்தன் நாயரின் மனநல மருத்துவ மனையில் சேர்த்தார்கள். பெருன்ன தாமஸூம் பரமுவும்தான் மருத்துவமனையில் பஷீருக்குத் துணையாக இருந்தார்கள். இவர்களோடு எம். அப்துல்காதர் என்ற பஷீரின் ஆராதகரும் வந்து இணைந்து கொண்டார். பஷீரை கவனித்துக் கொள்வதற்காக இவர்கள் இரவும் பகலுமாக மருத்துவமனையிலேயே இருந்தார் கள். அந்த நேரத்தில் தனிமையில் படுத்திருப்பதற்குக் கூட பஷீ ருக்குப் பயமாக இருந்தது. அதனால், பரமுவும் காதரும் பஷீரின் இருபக்கங்களிலுமாக சேர்ந்து படுத்துக் கொண்டார்கள்.

சிகிச்சை முறை அப்போது இப்படித்தான் இருந்தது-

காலையிலேயே நோயாளியின் தலையில் எண்ணெய் வைத்து விடுவார்கள். அதுவும் மிகவும் குளிர்ச்சிமிக்க எண்ணெய். அப்புறம் கஷாயத்தை வாயில் ஊற்றுவார்கள். பஷீரை ஒரு பெஞ்சில் மல்லாக்கப் படுக்க வைத்துதான் கஷாய அபிஷேகம் நடத்துவார்கள். பின்பு வலதுபக்க மூக்குத் துவாரத்தில் பலா இலை புனலைச் சொருகி மிளகு, இஞ்சி, துளசிச்சாறு, வெங்காயம் அப்புறம் சில மூலிகைகளையும் சேர்த்து அரைத்து குழம்பாக்கி ஒரு கரண்டியை ஊற்றுவார்கள். பின்பு பலமாக ஊதுவார்கள். இதனால் வலது மூக்கிலுள்ள திரவம் முழுவதும் இடது மூக்கின் வழியாக வெளியேறும். இதைப்போல் திரும்பவும் செய்வார்கள். இதற்கு பின்புதான் இதைவிட காரமான எரிச்சல் தரக்கூடிய குழம்பை கண்ணில் விடுவார்கள். அதன்பிறகுதான் தண்ணீர் ஊற்றுவது. பனிக்கட்டியை விட குளிர்ந்த நீரை ஒரு மணிக்கு ஒரு முறை வீதம் தலையில் ஊற்றுவார்கள். இவையெல்லாம் முடிந்த பின்தான் கஷாயம், மாத்திரை, நெய் கொடுப்பதெல்லாம் நடக்கிறது. ஆனால் சிகிச்சையில் பஷீரை மிகவும் அதிகமாகக் கஷ்டப்படுத்துவது மூக்குத் துவார சிகிச்சையும் கண்களில் செய்யும் சிகிச்சையும்தான். இவை எல்லாவற்றையும் விட இந்த மன நோயிலிருந்து பஷீரை குணப்படுத்தியது, அவருடைய மனத் துணிச்சலும், தான் நோய்க்கு அடிமையாகவில்லை என்னும் பிடிவாதமும்தான் எனலாம். அவர்கள் கொடுக்கும் மருந்தை சரியான நேரத்தில் உண்ண வேண்டும் என்பதில் பஷீருக்கு மிகவும் ஆர்வமாக இருந்தது. நோய் வந்தால் மனம் தளரக்கூடாது என்னும் நிர்ப்பந்தம் பஷீரை அந்த மனநோயிலிருந்து விரைவில் குணமடைவதற்கு உதவியது.

தான் இவ்வாறு மனநல மருத்துவமனையில் இருந்த சமயத்தில் தான் கொல்லத்திலிருந்து அறிமுகமில்லாத ஒரு வாசகர் பஷீரைக் காண்பதற்காக வந்தார். அவர் கையில் ஓர் அச்சிட்ட காகிதம் இருந்தது. அதைப் பார்க்கும்போது, அதிகம் பிரபலமாகாத மாதச் சிற்றிதழ் ஒன்றில் வெளிவந்த கதையாக இருந்தது. தன்னிடமிருந்து தவறிவிட்டதே என்று கருதிய ஒரு கதை திரும்பக் கிடைத்ததும் பஷீருக்கு மிகவும் மகிழ்ச்சியாகிவிட்டது. அந்தக் கதையின் பெயர் 'ஜீவித நிழல்பாடுகள்'. இந்தக் கதையை ஒப்படைப்பதற்காகவே திருச்சூரியிலிருந்து அந்த அறிமுகமில்லாத வாசகர் வந்திருந்தார். பஷீரிடம் அக்கதையை ஒப்படைத்தபின் உடனே திரும்பியும் விட்டார்.

உலகப் புகழ் பெற்ற 'பாத்தும்மாவின் ஆடு' நாவலை பஷீர் மனநல மருத்துவமனையில் இருக்கும்போதுதான் எழுதினார். அதோடு இரண்டு முன்னுரைகளையும் எழுதினார். அதாவது பரமேஸ்வரன் நாயரிடம் சொல்லி எழுத வைத்தார். 'சிரோ வஸ்தி' என்னும் சிகிச்சைக்கிடையேதான் இந்த முன்னுரை களையும் தயாரித்தார். அந்த சிகிச்சை முறை இப்படித்தான்:- இறகுகளாலான துருக்கித் தொப்பிமாதிரி ஒரு தொப்பியை தலையில் வைப்பார்கள். அதில் விசேஷமான பச்சிலை மூலிகை களால் தயாரிக்கப்பட்ட எண்ணெயை ஊற்றி தேய்க்க வைப்பார் கள். அந்த நேரத்தில் தலையை அசைக்கக்கூட முடியாது. அப்போதுதான், பஷீர் ஒரு சிலையைப்போல் அமர்ந்து கொண்டு சொல்வார்:

'பரமு, நீ எழுது...'

அவ்வாறுதான் 'விசப்பு', 'ஜீவித நிழல்பாடுகள்' என்னும் புத்தகங்களுக்கு முன்னுரை எழுதினார். பஷீர் அதுவரையில் எழுதி வெளியிட்ட எந்தப் புத்தகங்களுக்கும் முன்னுரை எழுதிய தில்லை. 'பாத்தும்மாவின் ஆடும்', இந்த இரண்டு முன்னுரை களும் எழுதுவதற்கு, அதுவும் மனநல மருத்துவமனையிலிருந்து எழுதுவதற்குக் காரணம் உண்டு.

''பஷீர், நீங்கள் ஒரு எழுத்தாளர்தானே! அதனால், இந்த சிகிச்சைக்கிடையே நீங்கள் ஏதாவது எழுதுவது நல்லது. வெறுமனே இருந்தால் மனம் புகையும். அதைப்போக்கு வதற்காகவாவது உங்களுக்குத் தெரிந்த வேலை எதையாவது செய்து கொண்டிருக்க வேண்டும்'' என்று வல்லப்புழை வைத்தியர் சொல்லியிருந்தார்.

இதற்கிடையே பெருன்ன தாமஸிடம் வேறொரு காரியத்தை செய்யச் சொல்லி பஷீர் ஒப்படைத்திருந்தார். தான் விழித் தெழுவது முதல் மீண்டும் உறங்கும் வரையில் தான் சொல் வதையும், செய்வதையும் எல்லாம் குறித்தல் வேண்டும் என்றார் பஷீர். இதற்காக ஒரு பெரிய நோட்புக்கையும் வாங்கிக் கொடுத்திருந்தார். இப்படி, பன்னிரண்டு நாள்களில் எழுதிய நோட்டுகளையும் பஷீர் படித்துப் பார்த்தார். அதன்பின் அவற்றை சிறு சிறு துண்டுகளாக்கி தீயிட்டு கொளுத்தினார். பஷீர் தன் சிகிச்சைக்கிடையே 'பாத்தும்மாவின் ஆடு' எழுதிக் கொண் டிருக்கும்போது, பக்கத்து அறையிலுள்ள மன நோயாளியிடம்

சென்று பேட்டி காண்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார். ஒருமணி நேரமாவது எழுதிக் களைத்த பின்தான் இந்தச் செயல். பத்மநாபன் நாயர் என்னும் ஒரு மனநோயாளி அக்காலத்தில் பஷீரிடம் சீடராக இருந்தார். அவர் ஒரு சமஸ்கிருத புலவர். பஷீர் ஒரு பிராமணன் என்பது பெரியவரின் நம்பிக்கை. அதனால் பஷீரை 'சுவாமிஜி' என்றுதான் பெரியவர் அழைத்துக் கொண்டிருந்தார். பஷீர் நடக்கும் பாதையையும் பஷீரின் அறையையும் அவர் சுத்தமான நீரைக்கொண்டு தெளித்து அடிக்கடி சுத்தமாக்கிக் கொண்டிருந்தார். அவர் பஷீரிடம், ''தாங்கள் எந்த மடத்து சங்கராச்சாரியார்?'' என்று கேட்பார்.

''என் பெயர் வைக்கம் முகமது பஷீர். நானொரு கடவுள் நம்பிக்கை இல்லாதவன்.''

''சுவாமிஜி, தாங்கள் ஏன் தங்களையே மறைத்துக் கொண்டிருக் கிறீர்கள்?'' என்று பத்மநாபன் நாயர் ஆச்சரியத்துடன் கேட்பார்.

இன்னொரு பைத்தியம் ஒரு கிறிஸ்துவன்; சுத்த மௌனி. சிலநாள்களுக்குப் பின்தான் பஷீரிடமே பேசத் தொடங்கினான்.

அந்தப் பைத்தியத்திடம் பஷீர், ''உங்கள் வேலை என்ன?'' என்று கேட்டார்.

''பட்டாளக்காரன்! ஐந்து வருஷத்துக்கு முன்னாலேயே வெகு தூரத்திலுள்ள சிரியாவில் மரணித்து மண்மூடி போய் விட்டேன்..''

''அப்புறம்?''

'இப்போது தெய்வம் என்னை பூமிக்கு அனுப்பியிருக்கிறது.''

இன்னுமொரு தடிமனான பைத்தியம் பஷீரிடம், ''நான் ஒரு யானையை முழுமையா தின்ன வேண்டும்'' என்று தன் ஆசையைத் தெரிவித்தான்.

அதற்கு பஷீர், ''என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது!'' என்று கூறினார்.

அப்படின்னா, அதை நீ தின்றுவிட்டாயா?

உடனே பஷீர், தின்னவில்லை. அது வெளியில எங்கெல்லாமோ சுற்றித்திரியறது என்று கூறினார்.

'கிடைத்துவிடுமா?'

தெரியாதே என்று பதிலளித்தார் பஷீர்.

வல்லப்புழை மருத்துவமனையில் சிகிச்சை பெற்றபின் பஷீர் தலையோலைப் பறம்பிலுள்ள தன் சொந்த வீட்டுக்குத்தான் திரும்பினார்.

## பதிமூன்று

இந்த உலகத்திலிருந்து கொண்டேதான் வித்தியாசமான இன்னுமொரு உலகத்தை கலைஞன் படைக்கின்றான். இந்த வித்தியாச மான உலகத்தின் ஒரே சக்கரவர்த்தி அவன் மட்டுமே. ஒரு தரித்திர நாராயணனாக நமக்குத் தோன்றக்கூடிய கலைஞன், தான் உருவாக்கிய மறுஉலகத்தில் ஓர் இளவர சனாக இருக்கிறான்.

இவ்வாறு வேறு ஓர் உலகத்தைப் படைத்த கலைஞன்தான் பஷீர். அந்த அழிவற்ற பூமி யில் பஷீருக்கு மட்டுமே இடம் உள்ளது. இவ்வுலகத்துக்கான இன்னுமொன்றும், அதாவது வீடு, குடும்பம், சொத்து, ஆதரவு என கர்ம பந்தங்களிலுள்ள கட்டுப்பாடுகள் எதுவும் அங்கே இல்லை. இப்படி தனக்கே யுரிய சாம்ராஜ்ஜியத்தை உருவாக்கும் போது, தன்னையறியாமலேயே மனோ நிலை தவறுகிறது. தனக்கு முன்னால் உலகப் பந்தமில்லாத காட்சிகளையும், கதா பாத்திரங்களையும் அக்கலைஞன் தரிக் கிறான்.

இதை ஹாலூசினேஷன் (புத்தி பேதலிப்பு) என்று தனிமைப்படுத்த முடியாது. கலை ஞனின் காட்சிதான் அது. 'நிலவைப் பார்க் கும்போது', 'நீலவெளிச்சம்', 'நிலவொளி

நிறைந்த பெரும்பாதையில்', 'பிசாசு' போன்றவை இப்படி எழுதப்பட்ட கதைகள்தான்.

'நீலவெளிச்சம்' (பார்கவி நிலையம்) என்ற கதை எர்ணாகுளத்தில் யாரும் வசிக்காமல் தனியாகக் கிடந்த ஒரு வீட்டின் சூழ்நிலை யில்தான் எழுதப்பட்டது. வஞ்சிக்கப்பட்ட ஒரு பெண் (பார்கவி) தற்கொலை செய்து கொண்ட அந்தக் கட்டடத்தில் வசிக்கும் போது ஏற்பட்ட அனுபவம்தான் கதை. இது மலையாள இலக்கியத்தில் புதியதொரு வெளிச்சத்தை அளித்தது. நிலவொளியில் தான் காணும் உருவமுள்ள அரூபிகளை பயமுறுத்துவதற்குப் பதில் ஒருவகை விரக்தியோடுதான் பஷீர் சித்திரிக்கிறார்.

மட்டாஞ்சேரி கடற்கரையில் தனிமையில் அமர்ந்திருக்கும் போது, கடலில் குளிக்கும் நிர்வாண அழகியைக் கண்டதும் பஷீர் அவளிடம் பேச்சும் கொடுக்கிறார். உண்மையில் தனக்கு முன்னால் ஏதோவொரு உலகத்திலிருந்து இறங்கி வந்த 'ஜீவிகள்' தொந்தரவு செய்பவை அல்ல என்றும், ஆனால் அவை நாம் அடையாளம் அறிய முடியாதவைதானென்றும் பஷீர் புரிந்து கொள்கிறார். மற்றவர்களிடம் இதுபற்றிக் கூறினால், ஒரு வேளை சிரித்து ஒதுக்கிவிடலாம் என்பதால் இந்த யதார்த் தங்களை பஷீர் அனுதாபத்தோடு நெருங்குகிறார். சக உயிர்களின் மேலுள்ள சகிப்புத்தன்மை நிறைந்த நேரடிப் பார்வைதான் அது.

'நீல வெளிச்சம்' கதையில் பஷீர் பார்கவி குட்டியிடம், 'நீ யாராகயிருந்தாலும் என்னை மட்டும் இம்சிக்காதே. இது உனக் கொரு கட்டளை இல்லை. சாதாரணமானதொரு வேண்டுகோள் தான். நீ என்னை இன்றிரவே கழுத்தை நெரித்துக் கொன்று விடுவாய் என்றால் கூட உன்னிடம் கேள்வி கேட்பதற்கு இங்கு யாரும் இருக்கமாட்டார்கள். உன்னைக் கேள்வி கேட்க முடியும் என்பதல்ல அதற்கு அர்த்தம்; யாரும் இருக்க மாட்டார்கள் என்பதுதான் அதற்கான பொருள். ஏனென்றால் எனக்கு யாருமேயில்லை...' என்று கூறுகிறார்.

உண்மையில், பார்கவிகுட்டி எப்போதோ தூக்குப்போட்டு இறந்துபோன பெண். அதன்பின்புதான் பஷீர் அந்த சக்தியையே அறிகிறார்.

'நான் அறையைத் திறந்து உள்ளே சென்றேன். அப்போது எல்லாவற்றையும் நான் ஒரு திடுக்கிடலோடுதான் அறிந்தேன்...

அதற்காக நான் பயந்து நடுங்கவில்லை. அன்பும் அரவணைப்பும் சேர்ந்த தோற்றம்தான் என் மனத்தில்...'

நீலவெளிச்சம்?

'...மண்ணெண்ணெய் இல்லாமல் அணைந்துபோன விளக்கு இங்கு எப்படி யாரால் கொளுத்தப்பட்டது. இந்த 'பார்கவி நிலை'யத்தில் இந்த நீல வெளிச்சம் எங்கிருந்து உண்டா யிற்று?...' என்றுதான் பஷீர் இந்தக் கதையை முடிக்கிறார்.

இதே கேள்வியைத்தான் பஷீர் மற்றொரு கதையிலும் வெளிப் படுத்துகிறார்.

'நிலாவைக்காணும்போது' என்னும் கதையில்.

'... அவள் என் சைக்கிளைத் தாண்டி நடந்தாள். என் மார்புக்கு நேராக வந்ததும், விரிந்த அந்த முடிகளுக்கிடையே என்னை வெறுப்புடன் ஒருமுறை நோக்கினாள். மீண்டும் நடந்தாள். நான் உற்று நோக்கினேன். ஆளைக் காணவில்லை. என் உடல் முழு வதும் குளிர் படர்ந்துவிட்டது. இது என்னவாக இருக்கும் என்று நான் நினைத்தேன். அவள் எங்கு போயிருப்பாள்? சூனிய விசால மான கடல்... அவள் எங்கே? ... அப்போதும் எனக்குத் தோன்றியது:

'அதன் அர்த்தம் என்ன?...' என்று.

இந்தக் கதைகள் பேய்க்கதைகளோ?

இல்லை. தான் சாதாரண கதைதான் எழுதுவதாகவும், ஆனால் அது வாகவே அப்படி மாறுகிறது என்றும் பஷீர் கூறுகிறார். எந்தவொரு கதையையும் முன்கூட்டியே இது இன்னதுதான் என்னும் தீர் மானத்துடன் பஷீர் எழுதியதில்லை. தன்னுள் ஏற்படும் கிளர்ச்சியை தான் வெளிப்படுத்தியே தீரவேண்டும் என்னும் அவஸ்தையில் அவர் கதை எழுதிச் செல்கிறார். தனக்கு நேரிடை யான அனுபவம் உள்ளதை மட்டும் மிகவும் யோசித்து அளந்து முடிவாகச் சொல்கிறார். அப்போதுதான் அவருடைய அனுபவ சேர்க்கைகள் யாருக்கும் தெரியாமல் கதையாக வெளியே வருகிறது...

வல்லப்புழை மனநல மருத்துவமனையில் சிகிச்சையிலிருந்த போது சோபனா பரமேஸ்வரன் நாயர், தான் நேரில் கண்ட ஒரு நிகழ்ச்சியை நினைவு கூர்கிறார்:

ஒருநாள் பஷீர் தனக்குத்தானே தனியாக, 'கொச்சுராமா, நீ போய் விடு... உன்னை போய்விடும்படி முன்பே சொன்னேனே...' என்றெல்லாம் பேசிக் கொண்டிருந்தார். இதைப்பற்றி பரமேஸ் வரன் நாயர் கேட்டபோது மிகவும் லாகவத்துடன், 'அவர் களெல்லாம் என்னைக் காண்பதற்காகவே வந்தவர்களாக்கும்...' என்று பஷீர் சொன்னார். கொச்சுராமன் பஷீரின் விளையாட்டுத் தோழனாக இருந்தவன். அவன் இறந்து பல வருடங்களாகி விட்டன...

பின்பு ஒருமுறை பஷீர் கழிவறையிலிருந்து இடைவேட்டி யில்லாமல் வெளியே வந்தார். அதற்கு அவர் சொன்ன காரணம், 'பரமு அவர்களுக்கெல்லாம் என் இடை வேட்டி தேவை. அதனால் நான் அதைக் கொடுத்துவிட்டேன்...' என்று சொன்னார்.

இந்த அவர்கள் யார்?

'அந்தக் காலத்தில் என்னோடு பள்ளியில் படித்துக் கொண்டிருந்த என் ஊர்க்காரர்களில் சிலர்...' என்று பஷீர் சொன்ன பெயர்களில் யாரும் அப்போது உயிருடன் இருக்கவில்லை என்பதை பரமேஸ்வரன் நாயர் பின்பு புரிந்துகொண்டார்.

பல ஆண்டுகள் கழித்து, பேப்பூரில் மனைவியுடனும் பிள்ளை களுடனும் பஷீர் வசித்துக் கொண்டிருக்கும்போது டாக்டர். சுகுமார் அழீக்கோடு வழக்கம்போல் அவரைக் காண்பதற்கு வந்தார். அவர் வீட்டுப் படியைத்தான் ஏறினார். அதற்குள் பஷீரின் வார்த்தைகள்: 'அழிக்கோடு, நான் இப்போது ஒரு பெண்ணைக் கண்டேன். அவள் இங்கே வந்தாள். பெரும் கை கால்களை யுடைய ஒரு உடல்பெருத்த அசாதாரணமான பெண். இங்கே வந்து என்னைப் பார்த்தபின்பு, தோ, அந்த மதிலின்மேல் காலை அகட்டி வைத்து நடந்து சென்றாள்...' பஷீரின் இந்த நிலையை அழீக்கோடு 'உபயஜீவிதம்' என்று குறிப்பிடுகிறார். பேப்பூரில் வசிக்கும்போதுதான் பஷீருக்கு மீண்டும் பைத்தியம் பிடித்தது. அத்துடன், 'அவன் பல உருவத்திலும் வருவான்!' என்று கூறுகிறார். அப்போது, எம்.டி. வாசுதேவன் நாயரும், புதுக்குடி பாலனும், பட்டத்துவிளை கருணாகரனும் சேர்ந்து பஷீரை மருத்துவமனைக்கு அழைத்துச் செல்வதற்காக வீட்டுக்குப் போனார்கள். அப்போது பஷீர் தன் கையில் கத்தியும் கட்டாரியு மாக நிற்கிறார்...'

பஷீருக்கு உள்ளுணர்வு (Intution) அல்லது மறை பொருள் (Occult) என்னும் விசேஷ சூழ்நிலைகள் உண்டான சந்தர்ப்பங்களும் உண்டு.

பஷீரின் மனத்தில் எம்.பி.பால் குரு ஸ்தானம் வகித்தவர். பஷீரின் வாழ்க்கையில் நடந்த திருப்பங்களிலெல்லாம் ஓர் ஆலமரத்தைப் போன்று நிழலும் குளிர்ச்சியும் அளித்த மாபெரும் மனிதர். அவர் இறக்கும்போது பஷீர் வெகுதூரத்தில் (சென்னையில்) இருந்தார். அங்குதான் எம்.பி. பாலின் மரணச் செய்தி பஷீருக்குக் கிடைத்தது.

அந்தச் செய்தியை அறியும்போது பஷீரும் எம்.பி. பாலைப் பற்றிய ஒரு வேள்வியில்தான் இருந்தார். அதன் சுருக்கம்:

சென்னையிலுள்ள ஒரு பெரிய கட்டடத்தின் டெரஸில் ஒரு சிறிய அறையில் பஷீர் தங்கியிருந்தார். திருவாளர் எம்.பி. பால் எம்.ஏ. என்னும் ஒரு சிறிய புத்தகத்தை எழுதிக் கொண்டிருக்கும் போதுதான் எம். கோவிந்தன் அறைக்கு வந்தார். அப்போது, எம்.பி. பாலைப் பற்றி தான் ஒரு புத்தகம் எழுதுவதாகவும், அது தற்போது பாதி முடிந்துவிட்டது என்றும் கோவிந்தனிடம் கூறினார் பஷீர். அப்போதுதான் கோவிந்தன் மிகவும் சங்கடத்துடன்,

''பால் இறந்துவிட்டார், பஷீர்!'' என்று கூறினார்.

பஷீர் திகைத்துவிட்டார். தான் மனத்தில் பெரிதும் தியானித்த எழுதிக்கொண்டிருந்த அந்தப் பெரிய மனிதர் தற்போது இறந்துவிட்டார் என்பதை அப்போது பஷீரால் நம்பவே முடியவில்லை. கோவிந்தன் ஆறுதல் அளித்தார்.

'உங்களுக்குத் தெரிவிக்கச் சொல்லி ஸி.ஜே.தாமஸ்தான் தந்தி கொடுத்திருக்கிறார் பஷீர்' என்று அறிவித்தார்.

பாலின் மகள் ரோஸியின் கணவரும், சிறந்த நாடக ஆசிரியரும், விமரிசகருமாவார் இந்த ஸி.ஜே.தாமஸ். கோவிந்தன் வெளியேறியதும், பஷீர் பாலைப் பற்றி எழுதியவற்றையெல்லாம் டெரஸுக்கு கொண்டு சென்று சுக்கு நூறாகக் கிழித்து கீழே வீசினார். அந்தக் காகிதத் துண்டுகள் வண்ணத்துப் பூச்சிகளைப் போல் காற்றில் பறந்து தரையில் விழுவதைப் பார்த்துக் கொண்டு நின்றார்.

... உடனே திருவனந்தபுரம் செல்வதற்கு அவரிடம் காசு இல்லை. கடைசியில், தான் எழுதிக் கொண்டிருந்த பார்க்கர் 61 பேனாவை ஒரு கடையில் அடகுவைத்து, அந்தப் பணத்தினால் மிஸ்ஸஸ் பாலுக்கு ஒரு தந்தி அனுப்பினார்.

இதேபோன்றுதான் பஷீரின் வாப்பா இறந்த சமயத்திலும் நேர்ந்தது.

அப்போது பஷீர் திருச்சூரில் வசித்த நேரம். ஒருநாள் மாலை பஷீரும் சங்கம்புழையும் முண்டச்சேரியும் வடக்குநாதர் கோயிலின் மேற்குப் பக்கத்திலுள்ள ஓர் ஆலமரத்தின் கீழே அமர்ந்து உரையாடிக் கொண்டிருந்தார்கள். சும்மா வெறும் கதைகள்தான். நிறுத்த முடியாத சுவையான உரையாடல், பஷீர் இப்படி சங்கம்புழையையும் முண்டச்சேரியையும் ரசிக்க வைத்துக் கொண்டிருக்கும்போது திடீரென்று வாயைத் திறந்தவாறு கண்களை உருட்டி மௌனமாகி விட்டார்.

என்ன நேர்ந்ததென்று யாருக்கும் புரியவில்லை. என்னவோ நேரக்கூடாதது நேர்ந்துவிட்டது என்பதைப் புரிந்து கொண்ட சங்கம்புழை, பதற்றத்துடன், ''பஷீரு, உனக்கு என்னடா ஆச்சு... என்ன?'' என்று கேட்டார்.

இதயம் பலமாகத் திணறுவது போன்று இருந்தது. சிறிது நேரம் கழிந்த பின்தான் ஆசுவாசம் தோன்றியது. சுவாசமும் நிதானமாக வந்தது. இதயத்தின் துடிப்பும் இயல்பு நிலைக்குத் திரும்பியது.

பஷீர் நிதானத்துக்கு வந்ததும், ''என்னவோ தெரியவில்லை; உடம்பில் சுகமில்லாததுபோல் தோன்றுகிறது'' என்று கூறினார்.

இந்த நிகழ்ச்சியின் பின்னணி விவரம் மறுநாள்தான் புரிந்தது. பஷீருடைய பாப்பா இறந்த செய்தி மறுநாள்தான் அவருக்குத் தெரிந்தது. முதல்நாள் வாப்பா இறந்துகொண்டிருந்த நேரத்தில்தான் பஷீரின் உடல்நிலையும் மோசமடைந்தது.

பஷீருக்கு தன் வாப்பாவிடம் மிகுந்த நேசமும் கனிவும் இருந்தது. அதேபோல், உள்ளுக்குள் வாஞ்சையை வைத்திருந்த வாப்பா பஷீரிடம் வெளிப்படையாக அதைக் காட்டியதில்லை. பெரியவரானபோதுதான் வாப்பாவின் வாஞ்சையை பஷீர் புரிந்துகொண்டார்.

இளம் பருவத்துத் தோழியான 'சுஹாரா' எப்போதுமே பஷீருக்கு ஒரு வேதனையாகத்தான் இருந்தாள். துன்பியலில் முடிந்த சொந்த காதல் கதையின் நாயகி இறந்ததையும் பஷீர் வெகுதொலைவில் இருந்தபோதுதான் அறிந்தார். ஆனால், அதுவும் இதேபோன்றுதான் இருந்தது.

கல்கத்தாவின் லோவர் சித்தூர் ரோடிலுள்ள ஓர் ஆறுமாடி கட்டடத்தின் மூன்றாவது மாடியில் ஓர் அறையில்தான் பஷீர் தங்கியிருந்தார். தொழிலாளியாக இருந்த சில மலையாளிகள் சேர்ந்து ஓர் அறையில் அருகருகே படுத்திருப்பார்கள். அங்கு பயங்கர வேக்காடு. ஒருநாள் இரவில் பஷீர் டெரஸில் படுத்துக் கொள்ள தீர்மானித்தார்.

தீர்மானத்தின்படி அன்று இரவு டெரஸில் உறங்கும்போதுதான் கனவு. கருத்த நிறமும் தடித்த உருவமுமுடைய ஒருவன் முன்னால் நிற்கிறான். அவனுக்கு கழுத்துவரையில் முடி நீளமாக இருந்தது. அவன் பஷீரை நேருக்கு நேர் யுத்தம் செய்ய அழைத்தான். பயங்கர சத்தம். கடைசியில் அவன் பஷீரை அலாக்காகத் தூக்கினான். அவ்வளவுதான், அவனுடைய கழுத்தில் ஒருமுறை பலமாகக் கடித்ததும் புலி உதறுவதைப் போல் உலுக்கிவிட்டு பஷீரைக் கீழே எறிந்தான்...

பஷீர் உறக்கத்திலிருந்து திடுக்கிட்டு எழுந்தார். விழித்தெழுந்து பார்த்தபோது ஆறாவது மாடியிலுள்ள கைப்பிடிச் சுவரில் அமர்ந்திருப்பது தெரிந்தது. கால்களைத் தரையில் வைத்து கீழே குதிப்பதைப்போன்ற தோரணையில் தான் இருப்பதையும் அறிந்தார். கீழே விழுந்தால் ஒரு துண்டு எலும்புகூட கிடைக்காது. பஷீர் மிகவும் நிலைகுலைந்து போய்விட்டார். இங்கே தான் வந்தது எப்படி?

மீண்டும் கண்களை மூடி படுத்தார்; தூங்கிவிட்டார். அப்போதுதான் சுஹாரா தன் அருகில் வருவதுபோல் கனவு கண்டார்.

''நான் உங்களை எங்கெல்லாம் தேடினேன் தெரியுமா?'' என்று கேட்டாள் சுஹாரா.

''என்ன விஷயம்?'' பஷீர் கேட்டார்.

''நான் செத்துப் போயிட்டேன். பள்ளிவாசலின் வடக்குப் பக்கத்திலுள்ள பலாமரத்தின் கீழேதான் என்னை இப்போத

அடக்கம் செய்து இருக்கிறார்கள்'' என்று சுஹாரா இவ்வளவும் சொல்லி முடித்த பின்தான் பஷீர் கண்களைத் திறந்தார்.

உண்மையிலேயும் அதுதான் நேர்ந்தது. பஷீர் கனவு கண்டு கொண்டிருக்கும்போது சுஹாரா இறந்து கொண்டிருந்திருக்கிறாள். கனவில் அவள் சொன்ன அதே இடத்தில்தான் அவளை அடக்கம் செய்ததும்!

அதேபோல்தான், பஷீரை சற்றும் அறியாதவர்கள் கூட 'குரு' என்று பார்த்தவுடனேயே அழைப்பார்கள். திருவனந்தபுரம் மத்திய சிறையில் ஆயுள் தண்டனை கைதிகளில் பலரும் 'குரு' என்றுதான் பஷீரை மரியாதையுடன் அழைத்தார்கள். வல்லப்புழை மனநல மருத்துவமனையிலும் ஒரு பைத்தியக்காரன் பஷீரை ஆராதிக்கவே செய்தான். பேப்பூரில் தங்கி வசிக்கும் போது ஒரு பிக்பாக்கெட்காரன் பஷீரிடமிருந்து தட்சணைப் பெறுவான். தன் 'வேலை'யை கச்சிதமாக முடிப்பதற்காக!

பஷீரின் கையில் எப்போதும் ஒரு கட்டாரி பாதுகாப்புக்காக வைத்து இருப்பது வழக்கம். சிறிய வயதில் பேனாக்கத்தியாக இருந்ததுதான், பெரியவரானதும் கட்டாரியாக மாறியிருந்தது. அந்தக் கட்டாரியினால் யாரையாவது குத்த வேண்டும் என்ற எண்ணத்தில் இல்லை; ஒரு வழக்கத்துக்காகத்தான். எங்கே சென்றாலும் கட்டாரியைக் கண்டுவிட்டால் போதும் அதைக் கேட்டு வாங்குவது வழக்கம். இப்படியொரு அனுபவம் பி.அப்துல்லாவுக்கு ஏற்பட்டது. 'பார்கவி நிலைய'த்தின் முன்னுரையில் அவர் கீழ்வருமாறு சுட்டிக்காட்டுகிறார் -

ஓரடி நீளமுள்ள கலைமான் கொம்பின் பிடியுடன் கூடிய மின்னுகின்ற கட்டாரி ஒன்றை வெளியில் எடுத்து வீசியவாறே, ''வழிப்பறிக் கொள்ளைக்காரர்களே, நீங்கள் இனிமேல் என்னைத் தொந்தரவு செய்தால் இந்த அலங்கார கட்டாரிதான் உங்களுக்குப் பதில் சொல்லும்.''

இந்தக் கட்டாரிக்குப் பின்னாலும் ஒரு கதை உண்டு.

''நான் ஒருபோதும் வேட்டைக்குப் போனதில்லை. அந்தக் கட்டாரியும் ஒருபோதும் இரத்தத்தைச் சுவைத்ததில்லை. ஆனால், அதை என் புத்தகங்களுக்கிடையே பத்திரப்படுத்தி வைத்திருந்தேன். அநேக வருடங்களாக அது அப்படியேதான் இருந்தது. ஒரு கொல்லனின் கலைநேர்த்திக்கு மகுடம் என்ற

நிலையில் ஒரு கசின் பிரதர்தான் அதை எனக்குச் சன்மானமாக அளித்திருந்தான்.''

ஒருநாள் மதிய உணவுக்காக பஷீர் அந்த கசின் வீட்டுக்குப் போனார். சாப்பிட்டு முடிந்ததும் அவர் அந்தக் கட்டாரியை எடுத்து பஷீரிடம் காட்டினார். அழகான ஒரு தோல் உறையிலிருந்து உருவ முடியாத அளவுக்கு படிமானப்பட்டுக் கிடந்த கட்டாரியை நோக்கியவாறே, ''பஷீர், நீங்கள்தான் ஒரு பயில்வானாயிற்றே! இதை இந்த உரையிலிருந்து உருவ முடியு மானால் உருவுங்கள், பார்க்கலாம். அப்படி உருவிவிட்டால் இதுவே உங்களுக்கு என்னுடைய பரிசு'' என்று கசின் கூறினார்.

பஷீர் கத்தியை உறையிலிருந்து ஒரே இழுப்பில் உருவினார். அந்தக் கட்டாரியும் பஷீருக்கு அன்றுமுதல் சொந்தமாகிவிட்டது.

பேப்பூரில் இருக்கும்போது ஒருமுறை பஷீருக்குப் பைத்தியம் பிடித்தது. எப்போதும், தன் இரண்டு கைகளிலும் கத்தியையும் கட்டாரியையும் பிடித்துக்கொண்டுதான் நிற்பார்! அவரை மருத்துவமனையில் சேர்ப்பதற்கென எம்.டி.யும், புதுக்குடி பாலனும் சேர்ந்து மெல்ல காரின் முன் சீட்டில் பஷீரை அமர வைத்தார்கள். 'கட்டாரியைப் பிடுங்க முடியுமா!' என்று சாடையாக எம்.டி.யிடம் ஆலோசித்தார் பாலன். பெரிய கட்டாரி பாலனின் இடப்பக்க விலா எலும்பையும், சிறிய கத்தி எம்.டி.யின் வலப்பக்க விலா எலும்புகளையும் தொட்டு உராய்ந்து கொண்டிருந்தன. கோழிக்கோடு மனநோய் மருத்துவமனையை அடைந்து பஷீருக்கு ஊசி தூங்குவதற்காக போட்டு படுக்க வைத்தபோதுதான் பெரிய கட்டாரியை எடுத்துக்கொண்டார்கள். ஆனால் சிறிய கத்தியை மட்டும் காணவில்லை. கடைசியில் மனநோய் மருத்துவமனைக்குப் போகும் வழியில் பாலனின் வீட்டிலுள்ள சோபாவில் பஷீர் அதை மறைத்து வைத்திருந்தது பின்புதான் தெரிந்தது.

பூந்தோட்டம் உருவாக்குவது என்பது பஷீருக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு என்று சொன்னேனல்லவா! அதேபோல் ஆரம்ப காலங்களில் தன் உடல் ஆரோக்கியத்தைப் பாதுகாக்கவும் பஷீர் மிகவும் கவனம் செலுத்தியிருந்தார். மதுப்பழக்கமும் புகைப்பிடிப்பதும் பட்டினியுமெல்லாம் அவரிடம் இருந்தது என்றாலும். தினசரி உடற்பயிற்சியையும் தவறாமல் செய்வார். குஸ்தி செய்யவும் தெரியும். சிரசாஸனமும் செய்வார். முதல் நாள்

இரவு முழுவதும் குடித்தாலும் பிரச்னை இல்லை. மதுவின் தூஷணத்தைக் களைவதற்கான வித்தைகூட இந்த சிரசாஸனத்தில் உள்ளதாம். உண்மையிலேயே இளமையில் பஷீர் ஒரு பயில்வானாகத்தான் இருந்தார். உறுதியான தசைநார்கள், சரியான உயரம், கன கம்பீரமான நடையும் பார்வையும் அவரிடம் உண்டு. யாராக இருந்தாலும் திரும்பிப் பார்க்க வைக்கக்கூடிய ஆணழகன்! உணவு சரிவர இல்லையென்றாலும் உடலின் ஆரோக்கியத்துக்கு மட்டும் குறை நேர்ந்ததில்லை.

ஆனால் இரவு நேரங்களில் அவருக்கு உறக்கம் குறைவாகத்தான் இருந்தது அதிகாலை மூன்று மணி வரையில் தூங்காமலேயே படுத்திருப்பார். காலை பத்துமணிவரை தூங்கவும் செய்வார். இரவில் எதையோ நினைத்துப் பயப்படுவதுபோல் விளக்கைப் போட்டுக் கொண்டுதான் படுத்திருப்பார். இப்படி இருளில் கண்களைத் திறந்தவாறு படுத்திருப்பதற்கும் சிரமம்தான்! என்ன செய்வது?

# பதினான்கு

பஷீரின் இலக்கிய வாழ்வில் தொடக்கக் காலங்களிலும் சரி, பிற்காலங்களிலும் சரி, எதிர்ப்பையும் ஆதரவையும் சரிசமமாக ஏற்க வேண்டியதிருந்தது. கடுமையான விமரிசனம் கடைசி எல்லைவரை போகும். அதேபோல் புகழும் அபரிமிதமாக வந்து சேரும். நாகரீக மில்லாத எழுத்து என்று ஆட்சேபிக்கும் போதே, மகத்தான இலக்கியம் என்னும் வரவேற்பும் கிடைத்தது. அவ்வாறு, உற்சாக மின்மையையும் ஊக்கத்தையும் ஒரே மாதிரி பஷீர் ஏற்றுக்கொண்டார்.

பஷீரின் முதல் நாவலான 'பால்யகால சகி' (இளம் பருவத்துத் தோழியின், வரலாறையே முதலில் ஆராய்வோம்.

எம்.பி.பால் கோட்டயத்திலுள்ள தன் னுடைய டுட்டோரியல் கல்லூரியில் இலக் கியச் சந்திப்பு என்னும் பெயரில் இலக்கிய ஆர்வலர்களின் சங்கம் ஒன்றை உருவாக்கி யிருந்தார். இந்தச் சங்கத்துக்கு பால் தலைவ ராகவும், டாக்டர் எஸ்.கே. நாயர் செயலாள ராகவும் செயல்பட்டார்கள். முதலில் ஆங்கி லத்தில் எழுதி பின்பு மலையாளத்தில் மாற் றிய 'பால்யகால சகி'யை இந்த இலக்கியச் சந்திப்பில் பஷீரே அரங்கேற்றினார். ஐம்பதுக் கும் மேற்பட்ட அங்கத்தினர்கள் அதைக் கேட்பதற்காக வந்திருந்தார்கள்.

அந்தக்கூட்டத்தில் 'பால்யகால சகி' ஓர் இலக்கியப் படைப்பே இல்லை என்று சிலர் கூறினார்கள். மொழிநடை ஒரே கிராமியப் பாணி. இதில் என்ன புதுமை என்று விமரிசனம் எழுந்தது. அதுமட்டுமல்ல, இதில் ஆபாசம் உள்ளது என்றும் கூறப்பட்டது. இதற்குக் காரணமாகச் சுட்டிக்காட்டிய பகுதி, மஜீத்தினுடைய சுன்னத் கல்யாணத்தைத்தான். அன்று புகழ்பெற்ற விமரிசகராக இருந்த பி. தாமோதரன் பிள்ளை 'சுன்னத்' செய்வதால் வெளியேறும் இரத்தத்தைப் பற்றிக்கூடச் சொன்னார். அன்றைய கூட்டத்திலிருந்த முக்கால்வாசி நபர்களும் இந்த வாதத்தை அங்கீகரித்தார்கள். ஆனால் கூட்டத்துக்கு தலைமை தாங்கிய பால் இவற்றுக்கெல்லாம் பதிலளித்தார்: 'இரத்தத்தைக் கண்டால் தலைசுற்றக் கூடியவர்கள் இந்த புத்தகத்தைப் படிக்காமல் இருப்பதே நன்று. நம்பூதிரிகளும் மற்ற உயர்ந்த ஜாதி இலக்கியவாதிகளும் எழுதிய உரையாடலிலும் சமுதாய அமைப்பியலிலும் மகிழ்ச்சி கண்டு தழும்பேறிவிட்ட கூட்டத்தார்களுக்கு, பஷீரின் கோழி இறைச்சியும் பிரியாணியும் மனத்துக்குப் பிடிக்கும் என்று தோன்றவில்லை. அவர்கள் ஒன்றை மட்டும் நினைவில் வைத்துக்கொண்டால் நல்லது. இலக்கியம் உயர்ஜாதி முதலாளிகளின் குத்தகை இல்லை. அது யாராலும் சொந்தமாக்கப்படக்கூடிய சொத்துதான்...'

அன்றைய சமுதாயத்திலும் இலக்கியத்திலும் பாலுக்கு உள்ள முக்கிய பொறுப்பின் காரணமாக எதிர்தரப்பு எண்ணம் கொண்டவர்களும்கூட அதன்பின் ஒன்றும் சொல்லவில்லை. பால் 'பால்யகால சகி'யின் முன்னுரையில், 'மஞ்சள் நீராட்டு விழா'வை மட்டும் இலக்கியமாக்கலாம்; ஆனால், 'சுன்னத் கல்யாணத்தை' இலக்கிய குலப் பெருமைக்கு ஒத்துவராது என்று நினைப்பவர்களிடம் நான் ஒன்றும் சொல்வதற்கில்லை...' என்றொரு வாசகத்தையும் இணைத்துக் கொண்டார்.

பாலைப் போலவே பஷீரை உற்சாகப்படுத்திய இன்னுமொரு விமரிசகர்தான் கேஸரி பாலகிருஷ்ணப் பிள்ளை. கேஸரி விமரிசனம் பஷீரின் இலக்கியத்திலுள்ள குறைகளையும் எடுத்துக் காட்டியிருந்தார்.

'அனர்க நிமிஷ'த்தைப் பற்றி எழுதிய கேஸரி, 'அனர்க நிமிஷம் (விலை மதிப்பற்ற நேரம்) என்னும் இந்தப் படைப்பு பஷீரை, முற்போக்கு சிறுகதை எழுதுவதில் ஒரு குறியீட்டு தொழில் நுட்பமுறையை முதன்முதலாகக் கொண்டு வந்த வழிகாட்டி

யாகவும் உருவாக்கியிருக்கிறது. சிறுகதை என்னும் இலக்கிய வடிவத்தின் பரிணாமப் போக்கில் ஏறக்குறைய லிரிக் - எஸ்ஸேஸ் வடிவம் கொண்டிருப்பதை இன்றைய சோவியத் கதாசிரியன் போரிஸ் கார்ப்பட்டோவின் கதைகளிலும், பஷீரின் அனர்க நிமிஷத்திலும் காணலாம். உலக இலக்கியத்தில் அப்பட்டமான சிறிய உபன்யாச வடிவம் அழிந்து வரும்போது பஷீரின் சிறுகதையை உபன்யாசவடிவம் கொண்டதாகவே நாம் காணுகிறோம்...'

'அனர்க நிமிஷம் குறியீடாகவோ அல்லது உணர்ச்சி வெளிப் பாடாகவோ ஒரு தொழில்நுட்பமுறை பயன்படுத்தப்பட்டுள்ள முற்போக்கு இலக்கிய வகையைச் சேர்ந்த சிறுகதைகளின் தொகுப்பாகும்...'

நாடகாசிரியரும் விமரிசகருமான சி.ஜெ. தாமஸ், 'படித்தே தீர வேண்டும் என்று உறுதியாகச் சொல்லும்படியான ஒரு சிறுகதைத் தொகுப்புதான் 'விட்டிகளுடெஸ்வர்க்கம்' (முட்டாள்களின் சொர்க்கம்). இது பஷீரை சின்னாபின்னமாக விமரிசிக்க வைக்கும் என்றாலும், சொல்வது என்னவென்று புரிந்து கொண்டு குற்றம் சொல்வதுதானே வசதியானது...' ஒவ்வொன்றுக்கும் ஒவ்வொரு உபன்யாசத்தை உரிமை கொண்டாடும் அந்தச் சிறுகதைகள் அனைத் தும் ஒருமித்துள்ளவைதான் 'முட்டாள்களின் சொர்க்கம்'. இவைகள் பல்வேறு விஷயங்களைப் பற்றி உறுதிப்படுத்துகின்றன.

இன்றுவரையில் ஏராளமானவர்கள் இந்த உலகத்தில் வாழ்ந் திருக்கிறார்கள்; சிந்தித்துமிருக்கிறார்கள். அவர்களில் பலரும் பலவற்றைப் பற்றியும் எழுதவும் செய்திருக்கிறார்கள். அவற்றில் சிலவற்றையெல்லாம் அவர் புரிந்து கொண்டிருந்தாலும், அவற்றில் எதிலாவது ஒன்றின் கார்பன் காப்பியாக எழுதுவதால் மட்டுமே திருப்தி கொள்ளும் சுபாவம் பஷீரிடம் இல்லை. சமுதாய கட்டுமானத்தை கண்டுகொள்ளாத ஒரு தனித்தன்மை யுடையவர்தான் பஷீர். சமுதாய கட்டுமானத்துக்கு தனிநபர் களின் குண இயல்புகளிலுள்ள பங்கை அவர் அறிவதுமில்லை. அங்கீகரிக்கப்பதுமில்லை. ஆனால், தானாகவே தனித்துவிட்ட மனிதன் காண்பிக்கும் தவறுகளையெல்லாம் சமுதாய சங்கத் தின்மேல் உத்திரவாதமாகச் சுமத்துகின்ற ஏற்பாட்டை மட்டும் அவர் வெறுக்கிறார் என்று சொல்லமுடியும்.

1931-ல் சட்டமெரிப்புப் போராட்டமும், இரத்தக் கையெழுத்து வழக்கும், திருவிதாங்கூர் போராட்டமும் எல்லாம் முடிந்தபின்

அதிகாரத்துக்கு வந்த காங்கிரஸ்காரர்களையும், மாக்ஸிம் கார்க்கியின் மேல் சத்தியம் செய்து கேசவதேவை 'துரோகி' என்றழைக்கும் கம்யூனிஸ்டுகளையும் பார்க்கும்போது, மனிதன் தனிமையாகிவிட்ட நிலையிலும் கொஞ்சமாவது நல்லவ னாகியே தீருவான் என்று பஷீருக்குத் தோன்றுகிறது போலும். இந்தப் பார்வைதான் 'முட்டாள்களின் சொர்க்கத்தின்' பின்னணி யில் உள்ளது. இதனை நீங்கள் மதவெறி என்று வேண்டுமானா லும் அழைத்துக் கொள்ளுங்கள். ஆனால் பஷீர் அப்படிப்பட்ட வார்த்தை விளையாட்டுகளில் நம்பிக்கை வைப்பதில்லை. விவேகமில்லாதவனின் அபிப்பிராயத்தைக் கேட்கும்போது அவன் மீது கோபிக்காமல் இருப்பதற்கு மட்டும் பஷீருக்கு பக்குவம் வந்திருக்கிறது.

கேரள அரசியலில் ஒரு தொழிற்சங்கப் புள்ளியாக இருந்த கேளப்பன் சொல்கிறார்:

'...இந்தச் சமுதாயத்திலுள்ள ஒவ்வொரு பகுதியினருடைய வட்டார வழக்கு மொழியைப் பேசுவதற்கும், எண்ணங்களை நினைப்பதற்குமான திறமையுள்ள ஒரு கலைஞன் கதாசிரியர் களில் அதிகமில்லை. ஆனால், மேலே சொன்ன திறமைகள் அனைத்தும் அடங்கியுள்ள ஓர் அபூர்வமான கலைஞர்தான் பஷீர்.

'கலையின் ஆதிக்கம் என்பதே அதுவொரு கலைப்படைப்புதான் என்னும் உண்மையை மறைத்து வையுங்கள் என்பதாகும். நம்நாட்டில் எங்குமுள்ள வாரச் சந்தைதான் நம் கண்களின் முன்னே தெரிகிறது. ஆனால் அங்கே சமுதாயத்தின் பல அடுக்குகளிலு முள்ள சில தனிநபர்கள் மட்டுமே உள்ளார்கள் என்று வைத்துக் கொள்வோம். அதனுடைய ஊடும் பாவும் முழுமையும் அடங்கக் கூடியதுதான் ஓர் அடுக்கு. அந்த அடுக்கைச் சேர்ந்த ஒரு சமுதாயப் பிரிவினரைத்தான் பஷீர் சித்திரிக்கிறார். பஷீரும் அவர்களில் ஒருவ ராக மாறியிருக்கிறார். அதுதான் அவருடைய சாமர்த்தியம். அதைத் தான் மற்ற சாதாரண கலைஞனால் சாதிக்க முடியவில்லை...'

'...ஒப்பிட இயலாத ஒரு கலைப்படைப்பு என்னும் வகையில்தான் நான் இந்தச் சிறு புத்தகத்தை (முச்சீட்டுக்களிக்காரன்டெ மகள்) இரண்டு மூன்று முறை மீண்டும் மீண்டும் படித்து முடித்தபோது என் மனத்தின் மேலெழும்பிய அபிப்பிராயமாகும்.'

பிரபல விமரிசகரான எஸ். குப்தன் நாயர் 'ஜன்ம தினம்' என்னும் கதையைப் பற்றி எழுதியது:

'பஷீர் ஒவ்வொன்றையும் அனுபவித்து எழுதுகிறார். பஷீரின் படைப்புகளின் வழியாக நாம் அவரையும் அவர் மூலமாக மனிதத் துன்பங்களையும் காண்கிறோம். இப்படி வாழ்க்கையின் வேதனைகளை தன் கலைச்சிற்பத்தினால் அவர் இன்பமயமாக்கு கிறார். உள்ளார்ந்த நிராசையின் சூடான சுவாசங்களை அந்த வரிகளின் மூலம் நாம் கேட்பதில்லை. தீவிரமான எதிர்ப்பின் ஆக்ரோஷங்களும் அவற்றில் இல்லை. குனிந்த முகத்துடன் அமர்ந்து சிந்திக்கும் ஓர் அகமுக நோக்காளரைத்தான் நாம் பார்க்கிறோம். அந்த சித்திரம் நம் இதயத்தை மரத்துப்போக வைக்கும் ஒன்றாகும்.'

பஷீர் வாசகர்களைச் சிந்திக்க வைப்பதற்காகவே எழுதுகிறார். வாழ்க்கையிலுள்ள முதுமைகளை வெளிச்சத்துக்கு கொண்டு வருவதற்குத்தான் அவர் முயற்சிக்கிறார். இந்த விஷயத்தில் மிகவும் திருப்தியடைந்த ரஷ்ய இலக்கியவாதியான தாஸ்த யேவ்ஸ்கியுடன் பஷீருக்கு சில ஒப்புவமைகளைக் காணலாம்.

பஷீர் தன் படைப்புகளில் சிறை வாழ்க்கையின் சித்திரங்கள் சில வற்றை வரைந்துள்ளார். அவை யாவும் அவருடைய அனுபவத்தி லிருந்து உருவம் பெற்றதுதான். குற்றவாளியினுடைய மன இயல்பின் சங்கேதப் பக்கங்களைப் பற்றி விவாதித்து தங்களுடைய அறிவியலின் மறதிக்குள் வாசகர்களை இழுத்துச் செல்லும் எழுத்தாளர்களை நமக்குத் தெரியும். அந்தக் கூட்டத் தில் பஷீர் இல்லை. தான் பார்த்ததையும் அனுபவித்ததையும், இதயபூர்வத்தோடும் மற்றவர்களின் துக்கத்தில் பங்கு பெறுவ தோடும் சேர்த்து பதிவு செய்வதை மட்டுமே அவர் செய்துள்ளார்.

சில கவிஞர்களுக்கு கண்ணீரின்மேல் அபரிமிதமான வாஞ்சை இருக்கும். அதேபோல் பஷீருக்கோ இரத்தத்துடன் அன்பு அதிகமுண்டு. இந்த வகையில்தான் அவருடைய ஏராளமான கதைகளிலிருந்து இரத்தம் பீறிட்டு அடிக்கிறது. இது வாழ்க்கை யிலிருந்து அவரை வெளியே இழுத்துக் கிழிக்கப்பட்டதால் இருக்கலாம் என்றும் சமாதானம் சொல்லலாம். இருந்தாலும் எப்போதும் இந்த இரத்தத்தைப் பார்த்துக் கொண்டிருப்பது என்பது மனித நேயர்களுக்கு உரிய குணமுமில்லையே.

...பஷீரின் கதைகளை புத்தக உருவத்தில் காண்பதற்கு வாசகர்கள் மேலும் ஆசைப்படலாம்.'

இவ்வாறு பஷீரினுடைய படைப்புகளைப் பற்றி சொல்லிச் சொல்லி விமரிசகர்களுக்குள்ளேயே குழுக்கள் உண்டாயிற்று. மேலும் கொஞ்சம் காலம் சென்றதும் 'பால்யகால சகி', 'மதிலுகள்', 'விசப்பு' (பசி) முதலிய கதைகள் அயல் மொழிகளிலிருந்து திருடப்பட்டது என்ற வாதமும் கிளம்பியது. ஆனால் பஷீரோ இவற்றையெல்லாம் கோபப்படாமலேயே எதிர் கொண்டார்.

'...ஹிட்லருக்கு ஒரு தலை, ரெண்டு கைகள், ரெண்டு கால்களும் உண்டு... அதனால், நீங்கள் ஹிட்லரின் மகன்தான் என்று யாராவது சொன்னால் நம்பிவிடுவார்களா? ஹிட்லரைப் போலவே ஒரு மூக்கு, ஒரு தலை, ரெண்டு கண்ணு, ரெண்டு கைகள், ரெண்டு கால்கள் உங்களுக்கும் இருக்கின்றனதான். ஆனால் புதுசாக உங்களுக்கு ஒண்ணும் இல்லையே என்று கேட்பதைப்போல்.'

பஷீர் வேற்றுமொழி இலக்கியத்தை திருடி விட்டார் என்று சொன்னவர்களுக்கு பஷீரின் பதில் இப்படித்தான் இருந்தது.

டாக்டர் ஆஷர் என்பவர் பஷீர் படைப்புகளை மொழியாக்கம் செய்து எடின்பரோ பல்கலைக் கழகத்துக்கு அனுப்பி வைத்தார். அதற்கும் அவர் மேல் ஒரு கடுமையான விமரிசனம் கிளம்பியது - டாக்டர் ஆஷர், ஒரு புண்ணியமுமில்லாத கல்வியறிவு சிறிதுமில்லாத ஒரு வெள்ளை துரை என்று.

பஷீரின் நாவல்கள் - 'பால்யகால சகி', 'பாத்தும்மாவின் ஆடு', 'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது' என்பவை - எழுதப் பட்டதே ஒரு வித்தியாசமான காலகட்டத்தில்தான். 'பால்யகால சகி'யை மலையாளத்தில் எழுதியபோது 500 பக்கங்கள் இருந்தன. ஆனால் அதை அப்படியே வெளியிடவில்லை. நான்காண்டுகள் வரை அதை அவர் பாதுகாத்து வைத்திருநதார். எம்.பி. பால் சொல்லியும்கூட அவர் அதைப் பிரசுரிக்கவில்லை. ஆனால் அது புத்தக உருவில் வெளிவந்தபோது வெறும் 75 பக்கங்களாக மட்டுமே இருந்தது. இதற்கும் மேல் மொழி விஷயத்திலும் பஷீர் சிரத்தை வெளிப்படுத்தியதாகவே காணோம்.

'பால்யகால சகி'யை எர்ணாகுளத்திலிருந்த ஓர் அச்சகத்தில்தான் அச்சடிக்கக் கொடுத்தார். அவர்கள்தான் பதிப்பாளர்களும். முதல்பதிப்பு ஐநூறு பிரதிகள். நல்ல உயர்ரக காகிதத்தில் சில பக்கங்கள் அச்சடிக்கவும் பட்டன. ஆனால் 'பால்யகால

சகி'யிலிருந்த தனித்தன்மைமிக்க கிராமிய வார்த்தைகளை பதிப்பாளர்கள் மாற்றியிருந்தார்கள். 'நம்பளை' 'நாம்' என்றாக்கியிருந்தார்கள். அதுமட்டுமல்ல, மஜீது, சுஹாரா, உம்மா, வாப்பாக்களின் வார்த்தைகளையும் பேச்சு வழக்கில் இல்லாமல் இலக்கிய வழக்கில் மாற்றிவிட்டிருந்தார்கள். இவற்றைக் கண்டதும் பஷீருக்குக் கோபம் வந்துவிட்டது. அதுவரையில் அச்சடித்த பக்கங்கள் முழுவதையும் தீயிட்டு அழித்தார். அதன்பின் தன் கையெழுத்துப் பிரதியிலுள்ளதைப் போன்று அச்சடித்தாலே போதுமென்றும் கூறிவிட்டார். அச்சகத்தாரும் பின்பு அப்படியே அச்சடித்தார்கள்.

இவ்வாறு இலக்கியப் படைப்பை மிகவும் நுணுக்கமும் கம்பீரமும் ஆக்குவதற்கு பஷீர் எப்போதும் முயன்று கொண்டிருந்தார். 'பால்யகால சகி' இப்போதைய வடிவம் அழியாமைக்கு உதாரணமே. அது இந்த அரை நூற்றாண்டுக்குப் பின்பும் நிலைத்து நிற்பதுவேயாகும். சங்ஙம்புழையின் 'ரமணனு'க்கு பின்பு மிகக்குறைந்த காலத்தில் மிக அதிகமாக விற்பனையான நூல் 'பால்யகால சகி'யேயாகும். முற்றிலும் தன் வரலாறாக பரிணமித்திருந்த இந்த நாவலுக்குப் பின் பல ஆண்டுகள் கழித்து எழுதியதே மற்றுமொரு சுயவரலாற்று நாவலான 'பாத்தும்மாவின் ஆடு.'

1954 ஏப்ரல் 27-ம் நாள் எழுதி முடித்த இந்த நாவலின் கருவுக்கும் ஒரு தனித்தன்மையுண்டு. அதாவது ஒரு மனநல மருத்துவமனையில் அமர்ந்து ஒரு மனநோயாளியாக எழுதப்பட்ட முதல் கலைப் படைப்புத்தான் இந்த நாவல். என்றாலும், அது அச்சில் வருவதற்கு ஐந்து வருடங்களை எடுத்துக் கொண்டது. சாதாரண பஷீர் எதை எழுதினாலும் ஏராளமான முறைகள் அடித்துத் திருத்தி எழுதுவதுதான் வழக்கம். ஏறக்குறைய இருபது முறைகள் மாற்றி மாற்றி எழுதியதே 'பால்யகால சகி'. சில சமயம் கதைகளை எழுதி எடுத்துவைத்துவிட்டு, சிறிதுகாலம் சென்றபிறகு அவற்றைப் படித்துப் பார்த்து அவர் கிழித்தெறிந்ததும் உண்டு. இவ்வாறு கிழித்து எறிந்த கதைகளே நூற்றுக்கணக்கில் இருக்கும். தாம் எழுதும் கதைகளை, தமக்கு வெகுவாக தரித்திர நிலை இருந்தாலும், உடனடியாக பிரசுரமாகி அதில் வருமானம் வரவேண்டும் என்று அவர் நினைப்பதில்லை. பல ஆண்டுகள் கழித்து, தம்மால் எழுதப்பட்ட கதை மோசமில்லை என்று

அறிந்த பின் மட்டுமே அவர் அதை அச்சேற்றுவதற்கு அளிப்பார்.

ஆனால் 'பாத்தும்மாவின் ஆடு' நாவலையோ மீண்டும் நகலெடுக்காமல், திருத்தம் செய்யாமல் அப்படியே அச்சேற அளித்தார்.

இந்த நாவல் எழுதப்பட்டு ஐந்தாண்டுகள் வரையில் எந்தத் திருத்தமும் செய்யாமலேயே பாதுகாத்து வைத்திருந்தார். தன்னுடைய சகோதரியை முக்கிய கதாபாத்திரமாகக்கொண்ட 'பாத்தும்மாவின் ஆடு' என்ற நாவலை எழுதும்போது பஷீருக்கு பைத்தியம் பிடித்திருந்தது என்பதும், திருச்சூரிலுள்ள வல்லப்புழை பி.ஸி. கோவிந்தன் நாயரின் சிகிச்சையில் சிறிதுகாலம் இருந்தார் என்பதும் இந்த வாழ்க்கை வரலாற்றில் முன்பே சொல்லப்பட்டது நினைவிருக்கலாம்.

மூக்கு மற்றும் கண்களின் மூலம் சிகிச்சைப் பெற்று மனநல மருத்துவமனையில் இருந்த காலத்தில்தான் 'பாத்தும்மாவின் ஆடு' நாவலை பஷீர் எழுதிக் கொண்டிருந்தார். ஒரு மணி நேரம் தொடர்ந்து எழுதினால், அதன்பின் மனநலம் குன்றியவர்களின் அருகில்சென்று நேர்காணலை நடத்துவார். இப்படி எழுதிய அந்த 'பாத்தும்மாவின் ஆடு' நாவலை சிகிச்சை முடிந்து வெளியேறியபோது தன் பெட்டிக்குள் வைத்துப் பத்திரப்படுத்தி னார். அதன்பின் அது 1955-ல் தான் அச்சேறியது. பஷீரின் வீட்டிலுள்ள நிகழ்ச்சிகளின் சித்திரிப்புதான் இந்த நாவலாகும்.

'பாத்தும்மாவின் ஆடு' நாவலின் முன்னுரையில் பஷீர் எழுதியது-

'ஆமாம்... அப்போது என் மனம்... நிலையில்லாமல் ஆர்ப்பரிக் கும் பெருங்கடலில் மூழ்கத் தொடங்கும் சிறியதொரு தீவைப் போல்... என்று சொன்னால் சரியாக இருக்குமோ என்னவோ? எது எப்படியிருந்தாலும் இருளில், 'பேடி ஸ்வப்னங்கள்' நிறைந்த இருளில் என் மனம் மூழ்கிப்போயிருந்தது. நானேதான் மனம்... சுற்றிலும் நோக்கும்போது வெளிச்சம் கொஞ்சம் மட்டுமே... கடவுளே நான் எங்கேயுள்ளேன்? உண்மை எது? பொய் எது? வெளிச்சம்... இந்த வெளிச்சம் மட்டும்போதும். ஆனால் பயங்கர கனவுகள் நிறைந்த கொடூரமான கும்மிருட்டு மட்டுமே எங்குமுள்ளது. இதோ அது எட்டு திசைகளிலுமிருந்தும் ஆர்ப்பரித்து உறுமியவாறு நெருங்குகிறது.

நிரந்தரமாக நான் இதில் மூழ்கிவிடுவேனோ?

ஒரு வித்தியாசமான கற்பனைத் தளத்தை - தீவிரமான எண்ணத்துக்குப் பதில் அமைதியான நினைவுகளை - அளித்த 'பாத்தும்மாவின் ஆடு' நாவலுக்குப் பிறகு 'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது!' வெளியானது. இது பஷீரின் படைப்பு களிலிருந்து வேறுபட்டு நிற்கிறது. முஸ்லிம் சமுதாயத்திலுள்ள அனாச்சாரங்களுக்கு எதிரிடையான வலிமை மிக்க நையாண்டி தன்மையில்தான் இந்தப் படைப்பு அமைந்துள்ளது. மற்ற இரண்டு நாவல்களை விட சமுதாய விமரிசனத்தை வெகுவாக ஏற்க வேண்டியதாகிவிட்ட நாவல் இது. 1957-ல் கம்யூனிஸ்ட் அமைச் சரவை இந்த நாவலை பாடநூலாக்கியபோது சட்டசபைக்கு உள்ளேயும் வெளியேயும் மிகவும் கூச்சலை உண்டாக்கியது.

மொழிப்புலமை, கதைக்கரு, நடை ஆகிய இம்மூன்றையும் நுணுக்கமாகக் கையாண்டுள்ள 'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது' என்னும் நாவலை தலையோலைப் பறம்பில்தான் பஷீர் எழுதினார். இஸ்லாத்திலுள்ள நன்மையையும் உயர்பண்பையும் எடுத்துக் காட்டுவதுடன், அதிலுள்ள பழைமையான ஆச்சார முறைகளையும் ஃப்யூடல் சிந்தனைப் போக்கையும் இந்தப் படைப்பில் கணக்கற்ற வகையில் விமரிசிக்கவும் செய்கிறார்.

பஷீரினுடைய நாவல் இலக்கிய உலகிலுள்ள இந்த படைப்பு கள், காலங்களுக்கு அப்பாலும் நிலைத்து நிற்கின்றன. அதற் கான காரணம், பஷீர், மன நிறைவில் நம்பிக்கை கொண் டிருந்ததுவே. இதனாலேயே அவர் அதிகப் பக்கங்களுடைய நாவல்களையும் கதைகளையும் எழுதவில்லை. தன்னால் சிறிய படைப்புகளைத்தான் எழுத முடிகிறது என்று பஷீர் கூறும்போது, அவர் சுட்டிக் காட்டக்கூடிய ஒரு சம்பவமுமுண்டு -

'நான் அப்போது வட இந்தியாவில் பயணித்துக் கொண்டிருந் தேன். இந்தியா - பாகிஸ்தான் எல்லையிலுள்ள ஒரு நகரத்தில் தாற்காலிகமாகத் தங்கியிருந்தேன். ஹோட்டலிலிருந்துதான் உணவுகள். நான் காலை டீ அருந்துவதற்குச் செல்லும்போது அங்கே தினந்தோறும் சமேலி என்றொரு ஹிஜ்டாவும் காப்பி குடிப்பதற்காக வருவான். அங்கு சமேலி இருபத்தைந்து முட்டைகள் தின்பான். நான் ஒரேயொரு முட்டைதான் உண்பேன்!'

## பதினைந்து

தான் ஓர் எழுத்தாளன் ஆவோம் என்று பஷீர் எண்ணியிருக்கவில்லை. ஒரு தேவைக்காகத் தான் அவர் அப்படி ஆனார். இன்னும் சொல்லப்போனால் மலையாள மொழியி லுள்ள எழுத்துகளைக் கூட அவர் முழுமை யாகத் தெரிந்திருக்கவில்லை; படிப்பும் சொல்லத்தக்க வகையில் அமையவில்லை. (இவையெல்லாம் பஷீரே தன் வாயால் பல இடங்களில் மனம் திறந்து சொன்னவை யாகும்). ஆனால் பஷீரின் படைப்புகளைப் படிப்பவர்களால் இந்த உண்மை நிலையை ஒத்துக்கொள்ள முடியாதுதான். அதற்கான காரணம், மலையாள இலக்கியத்தில் பஷீர் புதியதொரு மொழியைக் கண்டுபிடித்திருந் ததுவே. இந்த 'பஷீரின் மலையாளம்' இப் போதும் மனங்கவரும் விதத்தில் மலையாள மொழியில் நிலைத்துள்ளது.

இதை எப்படி அவர் கண்டுபிடித்தார்?

எழுத்திலும் வாழ்க்கையிலும் காண்பிக்கின்ற நேர்மை, சொல் மாறாமை, பொய்யற்ற தன்மை - இந்த முறைகளைத்தான் பஷீரின் மொழி படைக்கின்றது. சொல்ல வேண்டி

யதை நேரடியாகச் செவ்வனே சொல்வார். அதில் சிறிது கூட செயற்கைத் தன்மையில்லை. தனக்குத் தெரியாத விஷயங்களைச் சொல்லாமல் இருப்பதும், தெரியாது என்று வெளிப்படையாகக் கூறுவதும் அவரின் இயல்பாகும். தன் வாழ்க்கையைத் திறந்து காண்பித்து, அதிலுள்ள குறைகளைக் கூட விவரித்தது அவரின் குணம். இவ்வாறு ஒவ்வொருவரைப்பற்றியும் சிறிதளவும் திரைபோடாமல் சொன்னதால்தான் 'பஷீரின் மலையாளம்' தோன்றியது.

புகழ்பெற்ற கதாசிரியரான டி. பத்மநாபன் பஷீரின் நாவல்களைப் பற்றிய விமரிசனத்தில் இந்த மொழியழகைப் பற்றிச் சொல்கிறார்:

'வெளிச்சத்துக்கு எதற்கொரு வெளிச்சம்!' - இந்த சிறு வாக்கியத்தில் நாம் சிரமப்பட்டு அர்த்தத்தைப் புரிந்து கொள்ள வேண்டிய வார்த்தைகள் எதுவுமில்லை. ஆகக்கூடி, இந்த வாக்கியத்தில் மூன்றே வார்த்தைகள் தான். அதிலும் கூட ஒரு வார்த்தை மறுமுறையும் வருகிறது. வேறு யாராக இருந்தாலும் இப்படி ஒரு வாக்கியம் எழுதுபவராக இருந்தால் - பலரும் எழுதவில்லை என்பது வேறு - 'வெளிச்சத்துக்கு எதற்கொரு ஒளி!' என்றேதான் எழுதியிருப்பார்கள். ஆனால், பஷீரோ மலையாள மொழியில் கேவலம் 'வேறொரு' எழுத்தாள னல்லவே! அவர் மொழியின் வல்லனரல்லவா? அதனால்தான் அவர் எழுதுகிறார். எழுதிச் செல்கிறார்.'

'வெளிச்சத்துக்கு எதற்கொரு வெளிச்சம்!' - நம்முடைய பழைய குருநாதர்கள், சிலர் எழுதும்போது அதற்கான அர்த்தம் அவர்களை அறியாமலேயே அவர்களின் வார்த்தைகளின் வழியாக ஓடி வரும் என்று சொல்லியிருக்கிறார்களல்லவா! ஆனால் அப்படி ஓடி வரவேண்டுமென்றால் அவர்கள் வாக்குதேவியின் அருளைப் பெற்றவர்களாக இருக்கவேண்டும். முக்காலமுமுணர்ந்த ரிஷிகளாக இருக்கவேண்டும். மகான்களாக கவிஞர்களாக இருக்க வேண்டும்.

ஆங்கிலத்தில் சொல்வதுண்டல்லவா, 'Pregant with meaning' என்று. அதுபோன்று -

தொடக்க காலத்தில் தன் மொழியைக் கொஞ்சம் செழுமைப் படுத்த வேண்டும் என்று பஷீருக்குத் தோன்றியிருக்கிறது.

அந்தக்காலத்தில், எர்ணாகுளத்திலிருந்த 'ஜயகேஸரி' இதழின் ஆசிரியர் பத்மநாபையிடம் பஷீர்,

'என் மொழி நடை ரொம்பவும் மோசமாக்கும். மலையாளத்தை நான் ஒன்பது பத்து வருடங்களாக மறந்துவிட்டேன் என்றே சொல்லலாம். நான் இந்தக் காலத்துல இங்கிலீசையும் இந்துஸ்தானியையும்தான் உபயோகிச்சிக்கிட்டிருந்தேன். இன்னும் சொல்லணும்னா சிந்திக்கிறதே கூட அந்த மொழியிலதான். அதனால, மலையாளத்த நல்லா செய்யணும்னா என்ன வழி?'

பத்மநாப பைதான் பஷீரின் இலக்கிய வாழ்க்கையில் முதல் கதையை - என் தங்கம் - பிரசுரித்தார். அதேபோல் முதன்முதலில் கதைக்கான சன்மானம் பெற்றதும் பையிடமிருந்துதான். மிகவும் உதார மனம் படைத்தவராக இருந்தார் அந்த ஆசிரியர்.

பஷீரின் கேள்விக்கு உடனே பதில் கூறினார் பை:

'மொழியை நல்லா செய்யணும்னா மலையாளப் புத்தகங்களை அதிகம் படிக்கணும் பஷீர். சங்ஙம் புழை கிருஷ்ணப்பிள்ளைங் கறவர் 'ரமணன்' என்றொரு புத்தகம் எழுதியிருக்கிறார். அதைப்படித்தால் புதிய வார்த்தைகள் கிடைக்கும்...'

சங்ஙம் புழையின் இரண்டு நண்பர்கள்தான் முதன்முதலில் 'ரமணன்' நூலை வெளியிட்டவர்கள். துணி வியாபாரியும் கவிஞருமான ஏ.கே. ஹமீதும், இரும்புக்கடை நடத்தும் சி.கே. பாவவும்தான் அவர்கள். 'ரமணன்' ஆயிரம் பிரதிகள் அச்சடிக்கப் பட்டது. சங்ஙம் புழை 250 பிரதிகளை எடுத்துச் சென்றார். அவற்றில் ஒன்று கூட செலவாகவில்லை...

பஷீர், பாவவின் இரும்புக் கடைக்குச் சென்றார். 'ரமணன்' அங்கே தூசு படிந்து கட்டிவைக்கப்பட்டிருந்தது. அதிலிருந்து ஒரு புத்தகத்தை பஷீருக்கு அளித்தார் பாவ. அதைப் படித்துப் பார்த்தபோது புதிய வார்த்தைகள் எதுவும் பஷீருக்குக் கிடைக்கவில்லை.

மலையாள மொழி ஆசிரியரும், தனக்கு நேர் இளைய தம்பியு மான அப்துல்காதர், பஷீரின் புத்தங்கங்களைப் படித்துவிட்டு, 'இதில் பயனிலை எங்கே இக்காக்கா?' என்று கேட்ட நிகழ்ச்சி மிகவும் புகழ்பெற்றதாகும்.

ஒருநாள் பஷீரின் தம்பி எர்ணாகுளத்துக்கு வந்தார். பஷீரின் புத்தகங்களைப் படிப்பதற்கு எடுத்தார். படித்த புத்தகங்களிலெல்லாம் சில அடிக்கோடுகளையும் சில சின்னங்களையும் இட்டு விட்டு பஷீருடன் கேட்டார் அந்த வாத்தியார்:

''இய்க்காக்கா, இதுல பயனிலை எங்கே?''

அதைக்கேட்டதும் பஷீருக்குக் கோபம்தான் வந்தது.

''போடா, நீயும் உன்னோட அகராதி புடிச்ச பயனிலையும்? நொண்டி காலா! பெரிய வாத்தியாரு, வந்துட்டாரு! மொடவா!''

''இய்க்காக்கா, உங்க இஷ்டம்போல் திட்டுங்க. ஆனா, நீங்க எங்கேயாச்சும் ரெண்டு வருஷம் போயி மலையாள இலக்கணத்த படிங்க. மலையாள மொழிக்கு எத்தனை எழுத்துங்க இருக்குன்னாவது உங்களுக்குத் தெரியுமா இய்க்காக்கா?'' என்று அப்துல் காதர் உபதேசித்தார்.

அதற்கு பஷீரின் பதில்: ''போடா, உன் பொண்டாட்டிக்கு வரதட்சணையா வந்ததாடா இந்த மலையாள மொழி? எனக்கு என்ன இஷ்டமோ அதைத்தான் எழுதுவேன். எனக்குத் தெரிஞ்ச எழுத்துகளைக் கொண்டே எழுதுவேண்டா, நான். உன்னோட ஏட்டு எலக்கணத்த நீயே வச்சுக்கடா!''

பஷீர், வார்த்தைகளைச் சத்தங்களாக மாற்றவும், சந்தர்ப்பங்களையும் எண்ணங்களையும் செழுமைப்படுத்தி உணர்வு பூர்வமாக்கவும் செய்தவர். 'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது' என்ற நாவலிலுள்ள மொழி நடையைப் பார்த்தாலே அது தெரியும்.

நிஸார் அகமது தன் தங்கை ஆயிஷாவுக்கு கல்லூரியின் ஊர்வலத்தில் பாடுவதற்காக எழுதிக்கொடுத்த ஒரு பாடல் உண்டு:

'குத்தினி ஹாலிட்ட லித்தாப்போ
ஸஞ்சினி பாலிக்கா லுட்டாபி
ஹாலித்த மாணிக்கா லிஞ்சல்லோ
ஹுஞ்சினி ஹுலத்த ஹூத்தல்லோ
ஃபானத்த லாக்கிட ஜிம்பாலோ
ஹா... ஹா... ஹா...
ஹோ... ஹோ... ஹோ...'

இது, ஆயிஷா குஞ்ஞூ பாத்தும்மாவுக்குப் பாடிக் கொடுப்பது.

இதைப்போல், சத்தங்கள் வாக்கியங்களாக மாறும் ஏராளமான சந்தர்ப்பங்கள் இந்த நாவலில் உண்டு. இன்னுமொரு உதாரணமும் உண்டு. பாத்தும்மாவின் ஆடு பிரசவிக்கும் காட்சியைக் கூட மிகவும் இதயத்தைத் தொடும் விதத்தில் பஷீர் கூறுவதும் இவ்வாறுதான்:

'டும்! பாத்தும்மாவின் ஆடு பெற்றது!'

மற்றொரு சத்தம்...

'பிரிய ஹுந்த்ராப்பி... என்னோட பட்டு ஹுந்த்ரர்ப்பி... என் பொன்னு ஹுந்த்ராப்பி!...'

'என் ஜீவனின் நாயகனே புஸ்ஸாட்டோ?'

(ஹுந்த்ராப்பி புஸ்ஸாட்டோ என்னும் கவிதையிலிருந்து)

'பிரேமலேகன'த்தில் கேசவன் நாயரும் சாராம்மையும் தங்களுக்குப் பிறக்கும் குழந்தைக்கு பெயர் சூட்டும் விஷயத்தைப் பற்றி இப்படி விவாதிக்கிறார்கள்:

- சாரம்மை தீரத்தன்மையுடன் மகனின் பெயரை கூப்பிட்டார்:

'மிடாயி ஆகாசம்! டேய் மவனே, மிடாயி ஆகாசம்...! டேய் மவனே, மிடாயி ஆகாசம்!'

'தப்பு!' என்ற கேசவன் நாயர் அதைச் சரியாகச் சொன்னார். தன் தங்க மகனின் பெயரை கம்பீரத்துடன் அழைத்தார்:

'ஆகாச மிடாயி!... மவனே ஆகாச மிடாயி'

மிஸ்டர் ஆகாச மிடாய், ஸ்ரீஜித் ஆகாச மிடாயி, சகாவ் ஆகாச மிடாயி!...

- ஒரு பெயரில் என்ன இருக்கிறது என்னும் கேள்விக்கான பதிலை பஷீர் இங்கே கண்டுபிடிக்கிறார்.

'ப்ர்ர்ர்...' என்னும் சத்தத்தையே ஒரு கதைக்கு தலைப்பு வார்த்தையாக அளித்து, அதற்கான அங்கதச் சுவையை இனிமையாகச் சொல்ல பஷீரால் மட்டுமே முடியும்.

- சட்புக்கோன்னு, சரபரான்னு, ரப்பேன்னு ஊரி, டிம் ஆயி, பிட்டோன்னு வுழுந்து, குனுகுனா குத்தித் துளைக்கிறான், பே என்று அழுதான், குர்ர்ர்-குர்ர்ர், படாபடான்னு வெடித்தது, க்லிம் என்று முட்டியது, ஸ்யர்ர்ரென்னு சீட்டுக்கள், கரமுரான்னு கடிச்சித் தின்னான், க்ளோம் சலோம், கப்புன்னு விழுங்கினான், சுளுசுளா வேதனை, மியாக் மியாக் கூக்குரல், வெளுவெளு வெனவுள்ள மண்டையோடு - இவ்வாறு ஏராளமான உதாரணங்களை பஷீரின் கதைகளிலிருந்தும் நாவல்களிலிருந்தும் எடுக்கலாம். இவையெல்லாமும் பஷீர் ஸ்டைலின் தனித்தன்மையாகும். -

தன் கிராமிய கதாபாத்திரங்கள், கதையினுள்ளே வரும்போது அவர்களின் உரையாடலை அப்படியே கொடுக்கிறார். முஸ்லிம் கதாபாத்திரங்களுக்கு அவர்களுக்கேயுரிய மலையாளத்தைத்தான் அதாவது அரபி ஒலி கலந்த தனி மலையாள மொழியைத்தான் பயன்படுத்துகிறார். இதை 'ன்டுப்பூப்பா...' (தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது)வில் பாருங்கள்:

...'ப'வை முதலெழுத்தாவச்சி ஒரு வார்த்தைய சொல்லு!

'பயி'

'புத்தூஸே! வழின்னு சொல்லணும்!'

'இன்னொன்னு சொல்லு.'

'பயிதனங்ஙா!'

'வழுதனங்ஙான்னு சொல்லு!'

பஷீரின் நூல்களிலுள்ள கதாபாத்திரங்களில் அநேகமானவை தம்முடைய இளம் பருவத்தில் அறிந்திருந்த தலையோலைப் பறம்பைச் சேர்ந்தவர்களும், அந்தக் கிராமத்துக்கு அருகிலுள்ள மற்ற கிராமத்துக்காரர்களும்தான். ஆனவாரி ராமன் முதல் நத்த தாமு வரையில் ஒரு லிஸ்டே நீளுகின்றது.

முச்சீட்டுக்களிக்காரன் (மூன்று சீட்டு சூதாடி), ஒற்றைக்கண்ணன் போக்கர், மண்டன் முத்தபா, ஸைனபா, ஆனவாரிராமன் நாயர், பொன்குரிசு (பொன்சிலுவை) தோமா, எட்டுக்காலி மம்மூஞ்ஞு முதலிய கதாபாத்திரங்கள் குறிப்பிட்ட அரசியல் சொற்பொழிவு களில் புகுந்து வருவதுண்டு; முக்கியமாக எட்டுக்காலி மம்மூஞ்ஞு முதலிய கதாபாத்திரம் அதிகம் பேசப்படுவதாகும்.

'முச்சீட்டுக் களிக்காரன் மகளி'ல் வரும் உரையாடல் முறை பின்வருமாறு இருக்கும்:

'மண்டனராம் பரன்னோன் நம்மளுக்கு பத்தரையணா தர வேண்டியிருக்கு!' என்ற ஒற்றைக்கண்ணன் போக்கரு, 'மூக்கு வழியா பொகை விட கத்துத் தந்ததே நம்மளாக்கும்!' என்றேன்.

இன்னொரு முறை -

மண்டபன் முத்தபா கூறினான்:

'நம்மளுக்கு இந்த மாசத்துலேயே நிக்காஹ் முடிக்கணும்.'

அதற்கு ஒற்றைக்கண்ணன் போக்கர், 'என்னோட ரூஹொள்ள காலம் வரைக்கும் நீ அதுக்கு ஆசைப்பட வேணாம்' என்று அலறினான்.

'ஸ்தலத்தெ முக்கிய திவ்யனி'ல் ஒரு காட்சி:

'விஷயம் தெரியுமா? என்ற பீடிகையுடன் எட்டுக்காலி மம்மூஞ்ஞு அறிவித்தான்: 'புஸூ! சொரியம் புஸூ?

'புஸூ. புயூ, புஷூங்கற இந்த மூணுமே சரியில்ல!' என்ற முழயன் நாணு கடைசி தீர்ப்பைக் கூறினான்: 'புழு! சொரியம்புழு!'

என்று செல்லும் இக்கதையில் ஒரு தமிழ்ப் பாட்டையும் குறிப்பிட்டுள்ளார்:

'ஆண்டிப்பண்டாரம் உன்னை

வேண்டிக்கொண்டேனே

தனனா தன: தனனா தன:'

இதற்கு உண்டக்கண்ணன் பதிலளிக்கிறான்:

'ந... ந... நம்மளுடெ நாலுபொட்டைக் கோழிகளைக் கொ... கொ... கொன்னுட்டேன்!'

'யாரு சொன்னாங்க?'

'ஜொ... ஜொ... ஜொரியம்புடு!'

இவற்றில் தாளக்கதியுடனான கிராமிய மொழியில் இப்படி பார்க்கலாம். ஆஞ்ஞிலித்தடி சேன்னன் மைதானத்தையடையும் போது மெல்லிய ராகத்துடன் பாடுகிறான்:

'ஹயே மாலி ஐலஸா
ஏரே மாலி ஐலஸா

.....

ஆனவாரி ஐலஸா
பொன்குரிசும் ஐலஸா
மண்டன் முத்தபா தடி தப்பி
லெச்சிப் பெண்ணே என்ன பாக்றே

.....

எட்டுக்காலி தள்ளிவிடு
பாண்டிக்காரன் பண்டாரம்
கொச்சிரேஸ்யா நோக்கி நிக்கணோ
ஹயே மாலி ஹேலேஸா
போலீஸுகாரே தள்ளிவிடு

.....

ஒற்றைக்கண்ணா நம்மளுக்கொரு பீடி கொடு
ஹயே மாலி ஹேலஸா
ஏலே மாலி ஏலேஸா!'

- இந்த ஏலேஸா பாட்டில் அந்த இடத்தில் நடந்த முக்கியமான ஒரு காதலையும் சண்டையையும் மிக அழகாக சுட்டிக்காட்டுகிறார்:

'எட்டுக்காலி மம்மூஞ்ஞூ' என்றும் கதாபாத்திரம் மிகவும் பிரபலமான பெயராகிவிட்டது. அந்தப் பெரியவர் இடையிடையே புகுத்துகின்ற ஒரு வசனம் இன்னும் கிராமங்களிலும் நகரங்களிலும் மிகச் சாதாரண வார்த்தைகளில்கூட இடம் பிடித்து விடுவதுண்டு.

'அது நம்மளேதான்' என்று கூறிவிட்டு, 'சங்கதி தெரியுமோ?' என்னும் கேள்வியுடன்தான் சொல்வார்: (எங்கேயாவது ஒரு

பெண்ணுக்கு கர்ப்பம் என்று தெரிந்துவிட்டால்போதும்) 'அது நம்மளேதான்!'

இவ்வாறு உண்மையின் நாலாபுற வரைமுறையுமில்லாத விஷயத்தைத் தனக்குச் சொந்தமாக்கிக் கொள்பவர்களை இப்போது எல்லா மலையாளிகளும் எட்டுக்காலி மம்மூஞ்ஞு என்றே அழைக்கிறார்கள். அரசியலில்தான் இந்த இரட்டைப் பெயர் அழைப்பை மிகவும் பயன்படுத்துகிறார்கள்.

இதற்குமேல் ஆனவாரி ராமன் நாயர், மண்டன் முத்தபா போன்ற பஷீரின் கதாபாத்திரப் பெயர்களும் பிரபலமானவைதான். உண்மையிலேயே முழையன் நாணு, நத்துதாமு போன்றவர்கள் எல்லாம்கூட தலையோலப் பறம்பில் வசிப்பவர்களே. ஒவ்வொரு பெயருக்கும் முன்னாலுள்ள காரணப் பெயர்கள், அக்கதாபாத்திரங்களின் குண இயல்புகளையும், அவர்கள் செய்த குறும்புகளையும் சுட்டிக் காண்பிப்பதற்காகவே சேர்த்திருந்தார். கிராமப்புறங்களில் இவ்வாறு பெயருக்கு முன்னால் ஏதாவது அடைமொழிப் பெயர்களைச் சேர்ப்பது என்பது ஒரு சாதாரணமான விஷயமில்லைதான். ஆனால், பஷீர் மிகவும் மனோகரமாக இந்த முறையை கதாபாத்திரங்களுக்குள் கொண்டு வந்தார்.

நத்துதாமு பஷீரின் இளம்பருவ நண்பர். பஷீரும் அவரின் தம்பிகளும் 'அம்மா' என்று அழைத்துக் கொண்டிருந்த நங்ஙேலியின் மகன். தாமுவை வர்க்கக் கலவரத்துக்குப் பயன்படுத்திய சுவையான சம்பவக் கதைகளையும், அதனால், நத்துதாமுவுக்கு நேர்ந்த தண்டனையையும், அதற்குப் பிரதிபலனாகத் தன் தாயும் தந்தையும் செமத்தியாக அடித்துத் துவைக்கும்போது நங்ஙேலி வந்து தன்னைக் காப்பாற்றிய கதையையும் பஷீர் சொல்வதுண்டு. அந்த பால பருவ மனத்தில் வக்கிரத்தன்மை செலுத்திய சுவாதீனமும், அதை வெளியேற்றுவதற்காக தன் தந்தையும் தாயும் சேர்ந்து அளித்த தண்டனையும் இப்போதும் கூட மிகச்சுவையான நிகழ்ச்சியாகவே இருக்கின்றன.

இவ்வாறு தன்னைச் சுற்றியுள்ள நிகழ்ச்சிகளையும் கதாபாத்திரங்களையும் மிகவும் ஒரேமாதிரியாக வெளிப்படுத்தும்போது, பஷீர் மட்டும் தனித்தன்மையில் தலையோலைப் பறம்புக்காரனாகவே மாறுகிறார். அதுவும், குறிப்பாக முஸ்லிம் கதாபாத்திரங்களைப் படைக்கும்போது, வார்த்தைகளிலுள்ள ஏற்ற இறக்கத் தொனி,

சத்தம், நகைச்சுவையுணர்வு போன்ற இந்த அங்கங்களை மிகவும் பொறுப்புணர்வோடு படைக்கின்றார். காவியபூர்வமான மொழியினால் ஒதுக்கித்தள்ள முடியாதது, இதய கானமும் தொனி இனிமையும் தானென்று பஷீரின் படைப்புகள் தெளிவுபடுத்துகின்றன. வசன கவிதையின் தாள லயம் குறைபாடில்லாமல் மாறுகின்றன.

இதை எப்படி அவர் சொந்தமாக்கினார்?

பஷீரின் கல்வியறிவோ, படிப்போ குடும்பப் பாரம்பரியமான பாண்டித்தியமோ இதன் பின்னணியில் இல்லை என்பது மட்டும் உறுதி. பின்னே எப்படி? தனக்குத்தானே நேர்ந்தது என்னும் நிலைதான்: ஓர் எழுத்தாளனுக்கு கிடைக்கும் அனுக்கிரகம்தான். எழுதி முடித்துவிட்டால் விமரிசகர்கள் பலவற்றையும் உபதேசம் செய்வார்கள் என்றாலும், எழுதும்போது பஷீர் தனியொருவராகி விடுகிறார். தனக்குத் தெரிந்த மொழியில் தான் அறிந்த விஷயங்களைச் சொல்கிறார். பஷீரின் இலக்கியத்துக்குப் பின்னால் ரகசியமோ மற்றெதுவுமோ இல்லை; அனுபவம்தான் அவரின் குரு. தனக்குத் தெரிந்ததை மட்டும்தான் எழுதுகிறார். அதுதான் பின்பு உயர்ந்த இலக்கியமாக மாறுகின்றது என்பது மட்டுமே உண்மை!

## பதினாறு

ஆயிரத்து தொள்ளாயிரத்து ஐம்பத்தியெட்டு டிசம்பர் பதினெட்டாம் நாளன்றுதான் பஷீருக்கு திருமணம். செறுவண்ணார் கோயக்குட்டி மாஸ்டரின் மகள் ஃபாத்திமா பீபி என்னும் ஃபாபி என்பதுதான் பஷீரின் மனைவி பெயர். இந்தத் திருமணத்துடன், 'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது' என்னும் நூலுக்கு ஓர் உறவு உண்டு. 1957-ல் ஈ.எம்.எஸ். அமைச்சரவையை உருவாக்கியதற்காக 'கோழிக்கோடு கேரள சங்கீத நாடக அகாதெமி' ஒரு கலைவிழா நடத்துவதற்குத் தீர்மானித்தது. இதற்கு முன்பு, வி. அப்துல்லா, எம். அப்துல் ரஹ்மான் முதலிய சில நண்பர்கள் இணைந்து கேந்திர கலாசமிதி என்றொரு சங்கத்தை நிறுவி கலைவிழா நடத்துவது உண்டு. அதனுடைய வழிகாட்டுதலில்தான் இப்படியொரு கலைநிகழ்ச்சியை அகாதெமி தயாரித்தது. இந்த விழாவில் நாடகப் போட்டி, ஓவியம் வரைதல், ஓவியக் கண்காட்சி, கிராமியப் பாடல்களுடையதும் நடனங்களுடையதுமான கண்காட்சி, பிரபலமான இசைமேதைகள் அளிக்கும் பாட்டுக் கச்சேரி என்பவை உட்படுத்தப்பட்டிருந்தன. இதனுடைய முடிவு விழாவில் சம்மேளனத்தின் ஒரு நாடகம் நடத்தவேண்டும் என்ற தீர்மானம் உண்டாயிற்று. அதன்படி, 'என்

தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது' என்னும் நாவலை நாடக மாக்குவதற்காக நண்பர்கள் யோசித்தார்கள். இக்காலத்தில்தான் பஷீர் தலையோலைப் பறம்பில் குடும்பத்தோடு சேர்ந்து வசித்து வந்தார். பஷீரின் மூலமாகவே நாடகத்தையும் வடித்துக்கொள்ள வேண்டும் என்னும் ஆவலில் திக்கோடியன், சோபனா பரமேஸ்வரன் நாயர், அப்துல் ரஹ்மான் என்பவர்கள் இணைந்த ஒரு கும்பல் தலையோலைப் பறம்பை அடைந்தது.

பஷீர் நண்பர்களை வரவேற்றார். அதன்பின் சிறிதுநேரம் கிராமங் களைப் பற்றி சில விஷயங்களைப் பேசிவிட்டு, தாங்கள் வந்த உத்தேசத்தைப் பற்றி தெளிவாக்கினார்கள். முதலில் பஷீர் அதற்குச் சம்மதிக்கவில்லை. வீட்டில், ஓர் ஒய்வான வாழ்க் கையை மேற்கொண்டிருந்ததையும், மற்றவற்றையும் கூறி பேச்சை மாற்றினார். ஆனால், நண்பர்கள் விட்டபாடில்லை. கடைசியில், கோழிக்கோடுக்கு வருவதாகவும், நாடகப் பயிற்சி முடிந்து அரங்கேற்றுவது வரையில் அங்கேயே தங்கியிருப்பதாக வும் ஒப்புக்கொண்டார். அதன்படி, பயணத்துக்காக ஓர் இரும்புப் பெட்டியை கையில் எடுத்துக்கொண்டார். அதனுள், கொஞ்சம் துணிமணிகள், மரத்தாலான மிதியடி, ஒரு போர்வை, ஒரு மின்சார மேஜை விளக்கு என்பவை மட்டுமே இருந்தன.

தலையோலைப் பறம்பிலிருந்து புறப்பட்ட பஷீரும் நண்பர்கள் குழுவும் நேரே கோழிக்கோடுக்குச் சென்று எஸ்.கே. பொற்றெக்காட்டின் புதியறையிலுள்ள 'சந்திரகாந்தம்' என்னும் வீட்டில்தான் தங்கினார்கள். 'சந்திரகாந்த'த்தில் இலக்கியவாதி கள் கூட்டம் தங்கத் தொடங்கியது அவ்வாறுதான். எம்.டி. வாசுதேவன் நாயர், வி.கே.என்., என்.பி. முகம்மது, ஓவியர் எம்.வி. தேவன், சோபனா பரமேஸ்வரன் நாயர்... இப்படி ஒரு ரசிக்கும்படியான கூட்டமாக மாறியது சந்திரகாந்தம். சந்திர காந்தத்தில் எல்லோருடைய முக்கியமான வேலையே உணவு தயாரித்தல்தான். தேவன் மசாலாவையும் மிளகையும் அரைப் பார். எம்.டி. சோறு வேக வைப்பார். வி.கே.என். நெருப்பை ஊதி அடுப்பைச் சரி செய்வார். இதற்கிடையில்தான் பஷீர் நாடகத்தைச் சொல்லிக் கொடுப்பார். அடுக்களை சமையல் வேலையின் மேற்பார்வைக்கிடையே வரவேற்பறைக்கும் அடுக்களைக்கும் இடையே அங்குமிங்குமாக பஷீர் ஓடி நடமாடும்போது பரமு காகிதத்துடன் அப்படியே உட்கார்ந் திருப்பார். காரணம், பரமுதான் செயலாளர், பஷீர் சொல்வதை

எழுதுவதுதான் பாமுவின் முக்கிய வேலை. நாடகத்தின் வசனங்களை எழுதுவது. அதேசமயம், அடுக்களை சமையலுக்குச் சொல்வதை கட்டளையாக பிறப்பிப்பது என இவை இரண்டையும் வேறுபடுத்தி எழுதுவது என்பது பாமுக்கு ஒரு சிரமமிக்க வேலையாகவும் இருந்தது. காரணம், 'என் தாத்தாவுக்கு...' நாடக வசனம் சொல்லிக் கொண்டிருக்கும் போதே, 'அரிசி வெந்துவிட்டதா?' என்றொரு கேள்வியும் பஷீரிடமிருந்தும் கிளம்பும். இந்தக் கேள்வி, நாடகத்தில் உள்ளதல்ல; அடுக்களைக்கு உரியதாகும். இதைப் புரிந்து கொள்ளவில்லை என்றால் பஷீருக்கேயுரிய கெட்டவார்த்தைகளைக் கேட்க வேண்டியதாகிவிடும்...

இவ்வாறு சந்திரகாந்தத்தில் நாடகம் எழுதுதலும், சமையல் செய்தலுமாக பஷீரும் குழுவும் நாடக மேடையைத் தகர்க்கும் போது ஒருநாள் வீட்டின் உரிமையாளர் எஸ்.கே. பொற்றெக்காட் உள்ளே வந்தார். அப்போது, பஷீர் வீட்டுக்கு முன்னால் உடற்பயிற்சி எடுத்துக்கொண்டு ஒரு பயில்வானைப் போன்று நின்றிருந்தார். பொற்றெக்காட்டைக் கண்டதும் யாரோ ஓர் அறிமுகமில்லாதவரிடம் கேட்பதுபோல் கேட்டார்:

''உம், என்ன?''

அதற்கு பொற்றெக்காட், ''ஒண்ணுமில்ல. சும்மாதான் வந்தேன்!'' என்று கூறினார்.

''நீங்கதானே எஸ்.கெ. பொற்றெக்காட்... வேணும்னா இந்த வூட்ல ஏதாச்சும் ஒரு அறையில் தங்கிக்குங்க'' என்றார் பஷீர். பொற்றெக்காடுக்கு சிரிப்புதான் வந்தது. அப்படித்தான் பொற்றெக்காட் சந்திரகாந்தத்துக்கு இடையிடையே வந்து பஷீரும் குழுவும் செய்யும் வேலைகளைப் பார்த்து ரசித்துக்கொண்டு அமர்ந்திருப்பார். ஒருநாள் அப்துல் ரஹ்மான் பஷீரிடம் ஒரு ரகசியம் கூறுவதுபோல், ''தாங்கள் ஒரு திருமணம் செய்துகொள்ள வேண்டும்'' என்று சொன்னார்.

அப்துல் ரஹ்மான் இப்படிச் சொல்வதற்கு ஒரு காரணம் உண்டு. பஷீரை அவருடைய வீட்டிலிருந்து அழைத்து வரும்போது, உம்மா அப்துல் ரஹ்மானை அழைத்து ஒரு விஷயத்தை முக்கியமாக நினைவூட்டியிருந்தார்: ''இனி என் மகனை தலையோலைப் பறம்புக்குத் திருப்பி அனுப்பும்போது ஒரு பெண்ணை கல்யாணம்

பண்ணி அவளோடதான் அனுப்பி வைக்கணும். இதை நீ நல்லா நெனப்பு வச்சிருக்கணும் கொழந்தே...'' - அப்துல் ரஹ்மானும் உம்மாவுக்கு உறுதியளிந்திருந்தார்.

அப்துல் ரஹ்மான் மட்டுமல்லாமல் மற்ற நண்பர்களும்கூட நிர்ப்பந்தித்துக் கொண்டிருந்தார்கள். அதனால் இனி தப்பிக்க முடியாது என்னும் நிலை வந்தது; திருமணம் செய்து கொள்வதாக பஷீரும் சம்மதம் அளித்தார். செறுவண்ணூரிலுள்ள தொடக்கப்பள்ளியின் தலைமையாசிரியரான கோயக்குட்டி மாஸ்டருக்கு ஒரு மகள் உண்டு என்பதையும், அந்த பெண் டைப்ரைட்டிங் கற்றுக்கொள்கிறாள் என்பதையும் பஷீர் அறிந்து கொண்டதுடன், அவளின் போட்டோவை ஒருமுறைப் பார்க்க வேண்டும் என்றும் பிரியப்பட்டார்.

செறுவண்ணூரிலுள்ள ஒரு ஸ்டுடியோவிலிருந்து இரண்டு காஃப்பிரிச்சிகளுக்கு நடுவில் சேலைத்தலைப்பால் தலையில் முக்காடு போட்டுக்கொண்டு நிற்கும் பெண்ணின் படத்தைக் கண்டதும் பஷீருக்குப் பிடித்துவிட்டது. அந்தப் பெண்ணை திருமணம் செய்து கொள்வதாக பஷீர் சம்மதமளித்தார். இருந் தாலும், ஒரு நிபந்தனை போட்டார். தனக்கு வயதாகிவிட்டது. வழுக்கைத் தலையாகவும் உள்ளது. இனிமேல் தலையில் முடி முளைக்கப் போவதுமில்லை. அதனால் இவற்றையெல்லாம் அவளிடம் நேரில் கூறி அதற்குமேலும் அவளுக்கு தன்னை திருமணம் செய்துகொள்ள சம்மதமா என அறிய வேண்டும் என்றார்.

நண்பர்களும் பெண் பார்க்கும் சம்பிரதாயத்தை விரைவில் ஏற்பாடு செய்வதாக ஏற்றுக் கொண்டார்கள். ஒருநாள் ஒரு நண்பர் பஷீரின் போட்டோவை அந்தப் பெண்ணின் வீட்டுக்குக் கொண்டுபோய்ச் சேர்ந்தார். கோயக்குட்டி மாஸ்டருக்கு அப்போது இரண்டு மனங்களாக இருந்தன. கசப்பதால் விழுங் கவும் முடியவில்லை; இனிப்பதால் துப்பவும் முடியவில்லை என்னும் நிலைதான் அவருக்கு அப்போது! இவ்வளவு பெரிய பெயரும் பெருமையுமுள்ள ஓர் எழுத்தாளருக்கு தன் மகளை திருமணம் செய்யப் போகிறோம் என்னும் மகிழ்ச்சி ஒருபுறம்; அதோடுகூட பஷீருக்குச் சிறிது வயதும் அதிகமாகிவிட்டதே என்பதை நினைத்து சின்ன அதிருப்தியும் மறுபுறமிருந்தது. ஆனாலும், கடைசியில் திருமணத்துக்குச் சம்மதம் கொடுத்து விட்டார்.

அப்துல் ரஹ்மானின் சகோதரர் டாக்டர் முகமதினுடைய செறுவண்ணூர் வீட்டில் வைத்துதான் பெண்பார்க்கும் படலம் நிறைவேறியது. பஷீர், அப்துல் ரஹ்மான், தேவன், என்.பி. முகம்மது, எம்.டி.வி., அப்துல்லா, பரமு ஆகியோர் அடங்கிய குழு செறுவண்ணூரை அடைந்தது. பஷீரையும் பெண்ணையும் ஓர் அறைக்குள் அனுப்பினார்கள். எம்.வி. தேவனை மட்டும் அவர்களுடன் அனுப்பினார்கள். எம்.வி. தேவனுக்கு பிரத்தியேக அனுமதி அளித்ததற்குக் காரணமே, இந்தக் காட்சியை வரைவதற்காகத்தான். என்றாலும், ஒரு நிபந்தனை போடப் பட்டிருந்தது. அதாவது, அவர்களுக்குள் பேசப்படுவதை வேறு யாரிடமும் சொல்லக்கூடாது என்பதாகும். இந்த பெண் பார்க்கும் படலத்தைப்பற்றி ஃபாபி பஷீர் 'என்டெ சுல்தான்' என்னும் கட்டுரைத் தொடரில் பின்வருமாறு எழுதினார்:

'...அவர் அறைக்குள் நுழைந்தபோது நான் எழுந்து திறந்து கிடக்கும் ஜன்னலுக்கருகில் நகர்ந்தேன். என்னுடைய ஒரு கை ஜன்னல் கம்பியைப் பிடித்துக் கொண்டிருந்தது. மற்றொரு கையினால் ஜன்னல் பிரேமில் கிடந்த சீப்பை நான் தொட்டேன். பயமும் பிரமையும் சேர்ந்ததால் நான் அந்த சீப்பினால் ஜன்னல்மேல் எதையோ கிறுக்கிக் கொண்டிருந்தேன். அவருக்கு நேர் எதிரில் நிற்பதற்கு எனக்குத் தைரியமில்லை. அவர் முகத்தைப் பார்க்கவும் எனக்குத் திராணியில்லை. அதனால், ஏதாவது செய்து கொண்டிருக்க வேண்டுமே என்று எண்ணிய நான் சீப்பினால் என் கைத் திறமையை மட்டும்...'

அப்போது அவர், 'சீப்பை அங்கேயே வைத்துவிட்டு தைரியமாக நில்லு. நான் யாரையும் திங்கப்போறதில்லை' என்று கூறிவிட்டு சாந்தமாகக் கேட்டார்:

'என்னை உனக்குத் தெரியுமா?'

நான் ஆமாம் என்று சொல்லமுடியுமா?

உடனே அவர் அப்துல் ரஹ்மானை அழைத்து, 'டேய் அப்துல் ரஹ்மான், இவ ஒரு கோல்டன் கேளாச்சேடா! ஆனா நான் இவள ஒரு கருப்பின்னுல்லடா நெனச்சேன்' என்றவர் மீண்டும் என்னை நோக்கித் திரும்பி கூறினார்: 'இங்கே பார், என்னை பார். உனக்கு இஷ்டம்னா சொல்லு. எனக்கு கொஞ்சம் வயசாயிட்டுது. நீ நினைச்சிக்கிட்டு இருக்கிற மாதிரி நான் ஒரு இளைஞனல்ல. அதனால் என்னைப் பார்த்துட்டு இஷ்டம்னா சொல்லிடு!'

வெளியில் அவருடைய நண்பர்கள் இருந்தார்கள். அவர் வெளியே பார்த்து தேவனை அழைத்தார்: 'டேய், தேவா, இங்கே வாடா. நாங்க ஒண்ணா நிக்கற மாதிரி ஒரு படத்தை வரைஞ்சுடு...' என்றபோதுதான், நான் நகைகள் எதுவும் அணிந்திருக்கவில்லை என்னும் விஷயத்தை அவர் கவனித்தார்.

'அட, உன் கைகளில வளையலில்ல போலிருக்கே, எதுவும் அணிந்திருக்கல போலிருக்கே. பரவாயில்ல, ஒண்ணும் வேணாம். நம்மால் அதையெல்லாம் உண்டாக்க முடியும். தேவா, நீ வரையும்போது அவ கையில் வளையலு, வாட்சு, கழுத்துல தங்கமாலையையெல்லாம் சேர்த்து வரைஞ்சுடு.'

இவற்றையெல்லாம் சொல்லிவிட்டு அவர் என்னருகில் வந்து நின்றார். தேவனும் வரையத் தொடங்கினார். இவ்வளவு நடந்தும் நான் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. அவர் முகத்தையும் பார்க்கவில்லை. அடி பாதம் முதல் தலை உச்சி வரை நடுங்கிக் கொண்டிருக்கும் நான் அங்கிருந்து எப்படி தப்பிப்பது என்னும் சிந்தனையிலிருந்தேன். என் உடல் முழுவதும் வியர்த்து மோசமாகிவிட்டது.

அதற்குள், தேவன், நானும் அவரும் சேர்ந்திருப்பதுபோல் ஓர் ஓவியத்தை வரைந்து முடித்துவிட்டிருந்தார். அதை வாங்கிய அவர் என் கையில் கொடுத்து, பெயரையும் முகவரியையும் எழுதி கையொப்பமிடச் சொன்னார். நான் நடுங்கிக்கொண்டே கையெழுத்திட்டு கொடுத்தேன். அதன்பின் கே.ஏ. கொடுங்ஙலூர், எம். அப்துல் ரஹ்மான், வி. அப்துல்லா, என்.பி. முகம்மது, எம்.டி. வாசுதேவன் நாயர், எம்.வி. தேவன், சோபனா பரமேஸ்வரன் நாயர், திக்கோடியன் ஆகியோரையும் படம் வரையப் பட்ட காகிதத்தின் அடியில் கையொப்பமிடச் சொன்னார். அவையெல்லாம் முடிந்தபின்தான் அவர் வெளியேறினார். அதன்பின், டாக்டரின் மனைவி மூலம் டீயும் பலகாரங்களும் கொடுக்கப்பட்டது. பெண்பார்க்கும் படலம் முடிந்தது. ஓவியம் வரைதலும் ஒப்பமிடலும் முடிந்தது...

இந்த பெண் பார்க்கும் படலத்தைப் படமாக வரைந்த தேவன் நினைவு கூர்கிறார்:

'ஓவியம் வரையும் சமயத்தில் எப்படியோ நான் ஃபாபியின் காலைத் தொட்டுவிட்டேன்.' அப்போது பஷீர், 'என் பட்ட மகிஷியின் காலைத் தொட்டது எதற்காகடா' என்று கேட்டார்:

பஷீரின் திருமணம் ஒருவாறு நடந்து முடிந்தது. 1958 டிசம்பர் 18-ல் தான் அந்த மகத்தான நிகழ்ச்சி நடந்தது. பஷீரை இப்படி ஒரே இடத்தில் கட்டிப் போட்டதில் நண்பர்களுக்கு மிகவும் மகிழ்ச்சி யாக இருந்தது. இதற்குள், 'என் தாத்தாவுக்கு' - நாவல் நாடக மாக்கப்பட்டு ஒத்திகையும் தொடங்கியாகிவிட்டது. பஷீரும் அவர் மனைவியும் சிறிது காலம் வரையில் சந்திரகாந்தத்திலேயே தங்கியிருந்தார்கள். அந்த நாள்களில்தான், அப்போது கல்வி அமைச்சராக இருந்த பேராசிரியர் முண்டச்சேரி பஷீரைப் பார்த்த ஒரு சுவையான நிகழ்ச்சியும் நடந்தது.

பஷீரின் நாடகத்தைக் காண்பதற்காக முதலமைச்சர் ஈ.எம்.எஸ். நம்பூதிரியும் அமைச்சர் முண்டச்சேரியும் வந்திருந்தார்கள். நாடகம் முடிந்தபோது நடுநிசியாகிவிட்டது. அப்போதுதான் பஷீரையும் அவர் மனைவியையும் சந்திரகாந்தத்துக்குப் போய்ப் பார்க்க வேண்டுமென்னும் தன் ஆசையை முண்டச்சேரி வெளிப் படுத்தினர்ர். ஆனால், அப்படிச் செய்வது புதுமணத் தம்பதி களுக்கு நாம் செய்யும் துரோகமாக இருக்குமென்று வி.அப்துல்லாவும் மற்றவர்களும் சொல்லிப் புரிய வைத்தார்கள். இருந்தாலும், விடியற்காலை நான்கு மணிக்கு முண்டச்சேரி அங்கு போகவே செய்தார்.

அந்த நிகழ்ச்சியும் பின்வருமாறு நிகழ்ந்தது:

அமைச்சரின் ஸ்டேட் கார் சந்திரகாந்தத்துக்கு முன்னால் வந்து நின்றது. காரிலிருந்து இறங்கிய உடனேயே முண்டச்சேரி பஷீரை உச்சஸ்தாயியில் பெயர் சொல்லி அழைத்தார். கடைசியில் எப்படியெல்லாமோ சத்தம் போட்டு உறக்கத்திலிருந்து எழுப்பி வீட்டுக்கு வெளியே பஷீரை வரவழைத்துவிட்டார். ஆனால் வெளியே வரும்போதே சுத்த பட்டிக்காட்டு மொழியில் பஷீர் திட்டினார். அதைக் கேட்டும் கூட முண்டச்சேரிக்கு எவ்வித மனவேதனையும் உண்டாகவில்லை. அப்போதே பஷீரின் மனைவியை தான் பார்க்க வேண்டுமென்று முண்டச்சேரி அடம் பிடித்தார். ஆனால் இப்படி பலவந்தமாக மற்றவர்கள் நுழைவதை தான் வெறுப்பதாக பஷீர் கூறினார். இவை எதையும் பொருட் படுத்தாமல் முண்டச்சேரி வீட்டுக்குள் நுழைந்து படுக்கையறைக் குள்ளும் சென்றார். அப்போது ஃபாபி துள்ளியெழுந்து பயத்தால் நடுங்கியவாறு ஒரு மூலையில் சென்று நின்றுவிட்டார். அதைக் கண்ட பஷீர், 'மாப்பிளே, இது ஷாஜஹானின் அரண்மனை யாக்கும், ஜாக்கிரதை!' என்று கூறினார்.

அதற்கு முண்டச்சேரி, 'சுல்தானுக்கும் சுல்தானிக்கும் வாழ்த்துகள். மங்களமுண்டாகட்டும்!' என்று பதிலளித்தார்.

நாடகவிழா முடிந்ததும் பஷீர் தலையோலைப் பறம்புக்கு மனைவியுடன் திரும்பிச் சென்றார். இந்தக் காலகட்டத்தில்தான், 'என் தாத்தாவுக்கு' பாடப் புத்தகமாயிற்று. அந்தத் தொகையினால் தலையோலைப் பறம்பில் ஒரு மனையை வாங்கி அங்கே ஒரு வீட்டையும் கட்டினார் பஷீர். 1960 பிப்ரவரி 2-ம் நாளன்று பஷீரும் ஃபாபியும் புதிய வீட்டில் வசிக்கத் தொடங்கினார்கள். பின்பு அந்த வீட்டையும் பறம்பையும் 25,000 ரூபாய்க்கு ஃபெடரல் வங்கிக்கு விற்றார்கள். அப்துல் ரஹ்மானின் உதவியுடன் பேப்பூரில் இரண்டு ஏக்கருக்கும்மேல் தென்னந்தோப்பும் ஒரு பழைய வீடுமுள்ள பறம்பை விலைக்கு வாங்கினார்கள். இங்கேயும் சுவையான விஷயம் உண்டு. தலையோலைப் பறம்பிலிருந்த வீட்டையும் பறம்பையும் விற்றதினால் கிடைத்த பணம் ரூபாய் இருபத்தைந்தாயிரத்தால்தான் பேப்பூர் பறம்பையும் வீட்டையும் வாங்குவதற்கு முடக்கினார்கள். இதில் ஒரு ரூபாய்கூட அதிகமுமில்லை, குறைவுமில்லை. அப்படித்தான் பேப்பூரை தன் நிரந்தர தங்குமிடமாக்கினார் பஷீர். பஷீரின் மொழியில் சொல்வதானால், மலபாரிலுள்ள 'காட்டு மலையாளி'களின் நடுவில் வாழத் தொடங்கினார்.

பஷீரை 'பேப்பூர் சுல்தான்' என்று முதலில் அழைத்தது முண்டச்சேரிதான். பின்பு, அதற்குப் பத்திரிகைகளின் மூலம் நல்ல விளம்பரமும் கிடைத்தது. இரண்டு குழந்தைகள் பிறந்தனர். ஷாபீனா பஷீர், அனீஸ் பஷீர் என பெண்ணும் ஆணும். ஷாபீனாவின் கணவர் முகமது ஹபீப் சவூதி அரேபியாவிலிருந்து கிராமத்துகுத் திரும்பும் வழியில் மும்பையில் காலமானார். ஷாபீனாவுக்கு இரண்டு குழந்தைகள் உண்டு.

திருமணத்தைப் போலவே நண்பர்களின் நிர்ப்பந்தத்தால் பஷீர் திரைப்படத்துக்குள்ளும் புகுந்தார். 'பார்கவி நிலையம்', 'பால்ய கால சகி', 'பிரேம லேகனம்', 'முச்சீட்டுக் களிக்காரன்டெ மகள்', 'மதிலுகள்' என ஐந்து படங்கள் எடுக்கப்பட்டன. இவற்றில் 'பார்கவி நிலையம்', 'மதிலுகள்' என இவ்விரண்டு படங்கள் மட்டுமே கவனத்தில் கொள்ளப்பட்டன. 'பால்யகால சகி' கலாப்பூர்வமாக தோல்வியுற்றது. 'பிரேம லேகனம்' வெளிவரவே இல்லை. 'முச்சீட்டுக் களிக்காரனின் மகள்' முற்றிலும் கவனிக்கப்படவே இல்லை.

'பார்கவி நிலையம்' கலாபூர்வமாகவும் வசூலின் அடிப்படையிலும் வெற்றி பெற்றதற்கான காரணம், அதில் திரைப்பட நுணுக்கம் அறிந்த பல நண்பர்களும் ஒன்று சேர்ந்து பலமுறை விவாதித்து தயாரித்ததினால்தான். பார்கவி நிலையம் திரைக்கதை எழுதியதற்குப் பின்னாலுள்ள நிகழ்ச்சியை இப்படி சுட்டிக் காட்டலாம்:

1964 ஏப்ரலில் சென்னையிலிருந்து வி. அப்துல்லாவும் சோபனா பரமேஸ்வரன் நாயரும் கோழிக்கோட்டுக்கு வந்து சேர்ந்தார்கள். அப்போது அவர்கள் இருவரும் திரைப்பட உலகில் பெயர் சொல்லும்படியானவர்களாகவும் இருந்தார்கள். கோழிக்கோட்டில் சில அத்தியாவசியமான வேலைகளைச் செய்து முடித்த பின் பரமுவும் அப்துல்லாவும் காலையில் காரில் சென்னைக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். ஃபரோக் பாலம் தாண்டி பஸ் ஸ்டாண்டுக்கு அருகில் வந்தபோது ஒரு குடையும் ப்ரீஃப்கேஸுமாக பஷீர் அங்கே நிற்பதைக் கண்டார்கள். உடனே இருவரும் சேர்ந்து பஷீரைப் பிடித்து வந்து காரில் அமர்த்தினார்கள். அப்போது செறுவண்ணூரிலுள்ள மனைவியின் வீட்டுக்கு பஷீர் வந்திருந்தார். பஷீரை அழைத்துக்கொண்டு அப்துல்லாவும் பரமுவும் நேராக பெங்களூருக்குப் போனார்கள். அங்கே ஒருநாள் தங்கிவிட்டு சென்னையை அடைந்தார்கள்.

அப்போது, டி.கே. பரீக்குட்டி சாயபுவின் 'சந்திரதாரா புரொடக்ஷன்ஸ்' பிரபலமான திரைப்பட கம்பெனியாக இருந்தது. சந்திரதாராவின் அலுவலகத்தில் பஷீர் தங்குவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. பிரபல கேமராமேன் ஏ. வின்சென்ட் அடிக்கடி அந்த அலுவலகத்துக்கு வந்து சென்று கொண்டிருந்தார். அவருக்கு பஷீரை மிகவும் பிடித்திருந்தது. அதனால் அவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருப்பார்கள். பஷீர் ஒருநாள் பரிக்குட்டியிடம்,

''வின்செட்டை வைத்து ஒரு படத்தை தயாரிக்கணும். அவன் ரொம்பவும் கெட்டிக்காரன்'' என்றார்.

பரீக்குட்டி சாஹேபும் அதற்குச் சம்மதித்தார்.

ஆனால் இந்த விஷயத்தில் வின்சென்ட்டுக்கு மட்டும் ஒர நிபந்தனை இருந்தது.

''குரு, தாங்கள்தான் ஒரு கதை எழுதித்தரணும். நான் முதன் முதலா டைரக்ஷன் செய்யற படம் குருவினுடையதாகத்தான் இருக்கணும்.''

அதைக்கேட்டவுடன் பஷீரும் முதலில் திடுக்கிட்டார். வின் செட்டுக்கு உதவ வேண்டுமென்றுதான் அவர் முதலில் கருதி னார். அதுவே இப்போது தன் தலையில் வந்து விழுந்துள்ளது! என்ன செய்வது?

இறுதியில், அந்த வேண்டுகோளுக்கு பஷீர் ஒத்துக்கொள்ள வேண்டியதாகிவிட்டது. உடனே, பரமுவிடம், ''எந்தக் கதை வேணும், பரமு? என்று கேட்டார்.''

சிறிது ஆலோசனைக்குப்பின் 'நீல வெளிச்சம்' கதையைப் படமாக்கலாம் என்று தீர்மானிக்கப்பட்டது.

இக்கதையை எடுத்துக் கொண்டதற்கு மற்றொரு காரணமும் உண்டு. வின்சென்ட் திறமையான கேமராமேன் தேர்ந்தெடுத்த கதையும் விஷுவல்ஸ் அதிகம் தேவையுடையதாக இருந்தது. ஒரு நல்ல தொழில்நுட்ப அறிஞரால் மட்டுமே நீல வெளிச் சத்தைப் படமாக்க முடியும். வின்சென்ட்டும் இக்கதையைப் பலமுறை படித்துள்ளார்.

இதன்படி பஷீர், தொழில்நுட்ப அறிஞரும் நன்கு உதவக்கூடிய நண்பர்களும் அடங்கிய கூட்டத்தின் நடுவில் தங்கிக்கொண்டு திரைக்கதை எழுதத் தொடங்கினார். திரைக்கதை எழுதுவது என்பது பஷீருக்கு முதல் முயற்சியானதால் எழுதும்போதே பல சந்தேகங்களும் வந்தன. அவற்றை அவ்வப்போதே தொழில்நுட்ப அறிஞர்களிடமிருந்து கேட்டு புரிந்துகொண்டார். ஒவ்வொரு சீனைப் பற்றியும் கூட்டாக விவாதித்துக் கொண்டிருந்தார். ஆனால் சில சமயங்களில் பஷீர் எதையும் எழுதவும் இல்லை. வேறு சில சமயங்களில் எழுதிய காகிதங்களை கிழித்தும் எரித்தும் வீசினார். (ஒன்றிரண்டு சீன்கள் கொஞ்சம் நீண்டு விட்டது என்றறிந்தால் போதும். அது ஒத்துப் போகவில்லை என்று தெரிந்துகொண்டு அப்போதே எழுதிய காகிதங்களை எரித்து தொலைத்தார்.) சில நாள்கள் கழிந்ததும் ஊருக்குத் திரும்ப வேண்டும் என தன் ஆசையை வெளியிட்டார் பஷீர்.

ஒரு மாதம் முடிந்தும் திரைக்கதை முழுமையடையவில்லை என்றறிந்ததும் பரீக்குட்டி சாஹேப், ''பஷீர் இந்தக் கதையை

முடித்துத் தருவார் என்று தோன்றவில்லை. அந்த ஆளு உழப்புகிறார்'' என்று கூறினார்.

அதனால் நண்பர்களின் நிர்ப்பந்தத்தினாலும், பரீக்குட்டி சாஹேபின் நெருக்குதலினாலும், பஷீர் திரைக்கதையை முழுமையாக்கினார். ஏ. வின்சென்ட்டும் தான் முதன்முதலாக இயக்கும் படம் நல்ல கிளிக் ஆக வேண்டுமே என்னும் ஆவலில் இருந்தார்.

*1954*-ல் வெளியிடப்பட்ட நீலக்குயிலுக்குப் பின் சந்திரதாரா புரொடக்‌ஷன்ஸ் தயாரித்த திரைப்படம்தான் பார்கவி நிலையம். அவர்களின் முதல் படமே தேசிய விருது பெற்று மலையாள திரைப்படவுலகில் ஒரு புதுமையை புகுத்தி இருந்தது. அதன்பின் பத்தாண்டுகள் கழிந்துதான் பார்கவி நிலையத்தை அவர்கள் எடுத்தார்கள். பி. பாஸ்கரனும் இதற்கு அருமையான பாடல்களை எழுதினார்.

'ஏகாந்ததயுடெ அபார தீரம்...' என்னும் பாடலில் பஷீரின் 'அனர்க நிமிஷ'த்திலுள்ள சில வரிகளையும் சேர்த்திருந்தார். படத்துக்கு பாபு ராஜா இசையமைத்திருந்தார். பிரேம்நசீர், விஜயநிர்மலா, அடூர் பாஸி, மது, பி.ஜே. ஆண்டனி, குதிரை வட்டம்பப்பு என்னும் நடிக நடிகையர்களும் நன்றாக நடித்திருந்தார்கள். படம் ஹிட்டாகவும் செய்தது. அதன்மூலம் பஷீரின் திரையுலக கால்பதிப்பும் கவனத்துக்குரியதாயிற்று.

சில ஆண்டுகள் கழித்து உலகப்புகழ்பெற்ற அடூர் கோபால கிருஷ்ணன் இயக்கிய 'மதிலுகள்' திரைப்படமும் இந்தியாவுக் குள்ளும் வெளியிலும் கவனத்துக்குரிய படமாக இருந்தது. ஏராளமான விருதுகள் பெற்ற இந்தப் படத்தில் பஷீராக நடித்த மம்முட்டிக்கு சிறந்த நடிகருக்கான தேசிய விருதும் கிடைத்தது. உலகப்பட விழாக்களில் 'மதிலுகள்' ஒரு விவாத விஷயமாகவும் இருந்தது.

பஷீரைப் பற்றியும் ஒரு டாக்குமெண்டரி எடுக்கப்பட்டது. எம்.ஏ. ரஹ்மான் இயக்கிய 'பஷீர் த மேன்' என்ற இந்த டாக்கு மெண்டரியில் பஷீரின் சுயவரலாறு மிகவும் அப்பட்டமாக அப்படியே சித்திரிக்கப்பட்டது. இதற்கும் தேசிய மற்றும் வெளிநாட்டு விருதுகள் கிடைத்தன.

# பதினேழு

'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது!' துணைப்பாட நூலாக அங்கீகரிக்கப்பட்ட போது, கேரள சட்டசபையில் அதுவே பெரும் கூச்சலை உண்டாக்கியது. ஓர் இலக்கிய நூலை சட்டசபை உறுப்பினர்கள் மதிப்பிட்ட முறை விமரிசனக் கட்டுப்பாடாக இருந்தது. புத்தகத்தைப் படிக்காமல், அதி லுள்ள கலாசார வீழ்ச்சியைப் பற்றி நீண்டு முழக்கியது மிகவும் சுவையானதொரு நிகழ்ச்சியாகவும் பிற்காலத்தில் அறியப் பட்டது.

பஷீருக்கு நெருங்கிய நண்பரான பேராசிரியர் ஜோஸப் முண்டச்சேரி மாநிலக் கல்வி அமைச்சராக இருந்தபோதுதான் 1958-ல் அவருக்கு உதவுவதற்காக அந்தப் புத்தகத்தை துணைப்பாட நூலாக்கினார். உண்மையில், பஷீர் இந்த முடிவுக்கு எதிர்ப்பாகத்தான் இருந்தார். அரசாங்க உத்தரவு வந்தபோது, 'தயவு செய்து அந்த நாவலை ஒதுக்கிவிடுங் கள்' என்றுதான் பஷீர் ஒரு கடிதத்தையும் எழுதினார். இதற்குக் காரணம், அந்தப் புத்த கத்தின் விலையை இரண்டு ரூபாயிலிருந்து ஒன்றரை ரூபாயாக்க வேண்டுமே என்பதால் தான். 25 சதவிகிதம் கமிஷன் அரசாங்கத் துக்குக் கொடுக்கவேண்டும். இதற்குச் சம்மதமானால் ஒரு லட்சம் பிரதிகள் வரை

அரசாங்கம் எடுத்துக்கொள்ளும் என்பது உத்தரவு. பஷீருக்கோ இதில் சம்மதமில்லை.

இரண்டு ரூபாய் விலையில் ஏழு பதிப்பு வரையில் அது போயிருந்தது. காகிதத்துக்கும் அப்போது பற்றியெறியும் விலை. ஆனால் குற்றிப்புழை கிருஷ்ணப் பிள்ளையும், காரூர் நீலகண்டப்பிள்ளையும் நிர்ப்பந்தித்து தான் ஒத்துக்கொள்ளச் செய்தார்கள். சாகித்ய ப்ரவர்த்தக ஸஹகரண ஸங்கம்தான் அந்த நாவலை வெளியிட்டவர்கள்.

இறுதியில், அதைத் துணைப்பாட நூலாக்கியபோது பல முக்கியமான அரசியல் கட்சிகளும் எதிர்த்தன. அதே நேரத்தில், பிரபலமான எழுத்தாளர்களும் பத்திரிகைகளும் பஷீரின் நூலுக்கு எதிர்ப்பாக இருந்த விமரிசனங்களை எதிர்கொண்டன.

பி. கேசவதேவ்,

'பஷீரின் என் தாத்தாவுக்கு...ப் பற்றி சட்டசபையில் எதிர்ப்பு காட்டியதை மிகவும் வேதனையுடன் படித்தேன். பஷீரின் நாவலில் ஆபாசங்கள் உண்டென்றும் அது மதவாதிகளை வேதனைப் படுத்துகிறது என்றுமான வாதங்களை நான் எதிர்க்கிறேன். அந்த நல்ல நாவலைப் பாடநூலாக்கிய கமிட்டியினரை நான் வாழ்த்துகிறேன்' - என்று எழுதினார்.

விமரிசகர்களின் ஏகமனதான புகழுக்குப் பாத்திரமான அந்த நாவலின் விலை இரண்டு ரூபாயாக இருந்தது. அதையே பாடநூலாக்கியபோது ஒன்றரை ரூபாயாக குறைக்க வேண்டியதாயிற்று.

இதையே தகழி சிவசங்கரப்பிள்ளை,

'என் தாத்தாவுக்கு... என்னும் நூலைப்பற்றி சட்டசபையில் நடந்த வாதப் பிரதிவாதங்கள் ஒரு துரதிருஷ்டமாகி விட்டது. அரசியல்வாதிகளை இப்படியே விடுவது என்பது நம் கலாசாரத்துக்கும் இலக்கியத்துக்கும் பொதுவாக ஆபத்தாகும்' என்று எழுதினார்.

அன்றைய கல்வியமைச்சர் ஜோஸப் முண்டச்சேரி,

'இந்தப் புத்தகத்தைப் பற்றி ஆட்சேபம் எழுந்ததும் நான் ஆச்சரியப்பட்டுவிட்டேன். சாகித்ய அகாதெமி விருது பெற்ற

நாவலாகும் அது. ஒரு நல்ல புத்தகத்துக்கு சாதாரணமாகவே விலை அதிகரிக்கும்தான். வாணியங்குளம் சந்தையிலிருந்து இஞ்சியை நிறுத்து வாங்குவதுபோல் புத்தகம் வாங்குவது என்பது இல்லை...' என்று கூறினார்.

'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது என்னும் புத்தகம் உயர்நிலைப் பள்ளி வகுப்புக்கு பாடநூலாக ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது என்றும், அந்தப் புத்தகத்தை தான் நன்கு படித்துள்ள தாகவும், அதனுடைய மொழிநடை மாணவர்கள் பின்பற்று வதற்கு தகுதியானது என்றும், அந்தப் புத்தகத்துக்கு அரசின் விலை ஒன்றரை ரூபாய்தானென்றும் அமைச்சர் முண்டச்சேரி சட்டசபையில் விளக்கமளித்தார்' (மாத்ருபூமி ஜூலை 1958).

'முஸ்லிம் சமுதாயத்தை அடித்தளமாக்கி மலையாள மொழியில் எழுதப்பட்ட மிகவும் முற்போக்குத்தனமான கலைப்படைப்பு களில் ஒன்றான அந்தப் புத்தகத்தை வாசிப்பதால் கலாசாரம் சீரழியவில்லை என்பதுடன், கலாசாரம் என்னும் பெயரில் எழுப்பப்படும் சில தவறுகளுடனும், அநீதிகளுடனும் வெறுப்பு தோன்றுகிறது என்பது மட்டுமே...' (கேரள கௌமுதி).

கே. பாலகிருஷ்ணன் (கௌமுதி ஆசிரியர்):

'மலையாள மொழி இலக்கியத்தில் இவ்வளவு இனிமையான ஒரு நாவலை நான் இதற்கு முன்பு படித்ததில்லை. ஒரு சமுதாய மக்களின் வாழ்க்கை உள்ளறைகளுக்குள் இறங்கிச் சென்று கவிதையழகுடன் கூடிய ஒரு மொழிநடையில் பஷீர் நடத்திய வாழ்க்கைக் கல்வியை பொதுவாக வாழ்த்தத்தான் வேண்டும். சர்வகலா சாலைகளிலிருந்தும் அதிகார ஸ்தாபனங்களிலிருந்தும் என் தாத்தாவுக்கு... ஏராளமான பரிசுகளையும் பெற்றுள்ளது.'

மாத்ருபூமி கூறியது:

'அனுக்கிரகிக்கப்பட்ட கதாசிரியர் பஷீரின் நூல்கள் கேரளி யருக்கு நன்கு அறிமுகமானதுதானே! அவருடைய என் தாத்தா வுக்கு... ஒரே மூச்சில் படித்து முடிக்கக்கூடிய சிறியதொரு சுவையான நாவலாகும்.

கேரள முஸ்லிம் சமுதாயத்தின் பழைய ஆசார நம்பிக்கைகளும், புதிய நாகரீகத்தின் அலையும் ஒன்றோடொன்று பிணைந்துள்ள இந்நாவல் மிகவும் பொழுதுபோக்காக இருக்கிறதென்றாலும்,

அதுவும் இதில் விஷயத்தனத்துடன்தான் சித்திரிக்கப் பட்டுள்ளது...'

'ஜன யுகத்'தில் திரு. நல்லூர் கருணாகரன்:

'... இந்தப் புத்தகத்தில் கலாசாரமும் தார்மீகமான மூலக்கருவும் கொஞ்சம் கம்மி என்று கூறுவது சரியில்லை. வேத புராண இதி காசங்களிலுள்ள கலாசாரமோ தார்மீகமோ இதில் இல்லைஎன்பது உண்மைதான். ஆனால், இதுவொரு நாவலாகும். பதினோராம் வகுப்புக்கான துணைப்பாட நூலாகும்... சுருக்கமாகக் கூற வேண்டுமானால் முதல்தரமான நாவல். ஒரு முதல்தரமான துணைப்பாட புத்தகம். சந்தேகமுள்ளவர்கள் கொஞ்சம் மன்னிக்க வேண்டும். இந்தக் கல்வியாண்டின் முடிவில் நம்முடைய மாணவர்கள் அதைத் தெளிவுபடுத்துவார்கள்...' (நவ. 1958).

'என் தாத்தாவுக்கு...' துணைப்பாட நூலாக்கியதற்குப் பின் பஷீர் லட்சாதிபதியானார் என்னும் ரீதியில் எதிரணியில் சட்டசபையில் வாதாடியிருந்தார்கள். உண்மையில், பின்பு என்ன நேர்ந்தது என்பது பற்றி அப்போது அந்தப் பதிப்பகத்தின் பொது நிர்வாகியாக இருந்த டி.சி. கிழக்கேமுறி பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:

'...அரசாங்கத்துக்குத் தேவையான பிரதிகளை பதிப்பகம் அச்சிட்டது. முதலில், சில ஆயிரம் பிரதிகள். அதில் பாதிக்கும் மேலாக அரசு வாங்கியது...'

சில சமுதாயங்களும் அவர்களைச் சேர்ந்த பத்திரிகைகளும் 'என் தாத்தாவுக்கு...' எதிராக ஆர்ப்பாட்டத்தை அவிழ்த்துவிட்டன. இப்படிப்பட்ட புத்தகங்கள் மாணவர்களை வழிதவறி செயல் படுத்தும் என்பதுதான் அவர்களின் வாதம். அதன் பலனாக பதினாயிரக்கணக்கான மாணவர்கள் புத்தகத்தை வாங்கவில்லை.

என்றாலும், உத்தரவு அளித்தபடி புத்தகத்தை வாங்குவது என்பது சட்டப்படி அரசின் கடமையாகும். அதனால், வழக்குக்குப் போகாமல் இருக்க முடியாது என்னும் நிலை வந்தது...

1959 ஜூலையில் அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்டது. ஸாஹித்ய ப்ரவர்த்தக ஸஹகரண ஸங்கம் அரசைப் பிரதிவாதி யாக்கி வழக்கை ஃபைல் செய்வதற்கு தீர்மானித்தது. தலைமைச் செயலாளருக்கு நோட்டீஸும் அனுப்பப்பட்டது.

('என் தாத்தாவுக்கு...' நாவலின் பதினாயிரக்கணக்கான பிரதிகளை அரசு வாங்கவேண்டிய நிலை வந்தது. அதனால், அரசாங்கம் அவைகளை வாங்கி எடை போட்டு விற்றார்கள் என்று தோன்றுகிறது. எது எப்படியோ, நடைபாதையெங்கும் ஓரணாவுக்கும் இரண்டணாவுக்குமாக அந்தப் புத்தகத்தை விற்றுக் கொண்டிருந்தார்கள்.)

'என் தாத்தாவுக்கு...' துணைப்பாட நூலானபோது நடந்த எல்லா விவரங்களையும் இங்கே எழுதுவதற்குக் காரணம், பஷீரின் இலக்கிய வாழ்வில் எதிர்கொள்ள வேண்டியதாகிவிட்ட எதிர்ப்புகளைப் பற்றி சுட்டிக்காட்டுவதற்காகத்தான்.

சுதந்தரப் போராட்டத்துக்காக சிறைச்சாலையில் அடைந்து கிடந்து, ஓர் எழுத்தாளனாக சிறையறைகளில் நாள்களைக் கழித்து, வெளியே வந்தபோது சுதந்தர பாரதத்திலும் ஏராளமான ஆட்சேபணைகளை எதிர்கொண்டு பஷீர் பொறுமை காக்க வேண்டியதாயிற்று. கேரள சட்டசபையிலுள்ள மக்கள் பிரதிநிதிகளே பஷீரின் மேல் சேற்றை வாரியடித்து, பஷீரின் படைப்புகள் கலாசார சீரழிவு என்று கூச்சல் போடவும் செய்தார்கள்.

பஷீர் என்னும் தனிமனிதனும், இலக்கியவாதியும் அனுபவித்த தீட்சண்யமான யதார்த்தங்கள் அப்படித்தான் வரலாற்றுக் குறிப்புகளாக மாறுகின்றன. இருந்தும், தான் எடுத்துவைக்கும் ஒவ்வொரு அடியும் தடுமாறாமல், கோபம் எதுவுமில்லாமல் பஷீர் எழுதிக்கொண்டே இருந்தார்.

இப்படிப்பட்ட எதிர்ப்புகளுக்கு இடையிலும் பஷீருக்கு துணையாகவும் நிழலாகவும் நின்ற ஏராளமான விமரிசகர்களும் பத்திரிகைகளும் உண்டு. அவர்களுக்கும் அப்பால் லட்சக்கணக்கான வாசகர்களும் இருந்தார்கள். அவர்களின் ஆதரவுதான் பஷீருக்கு சக்தியாகவும் உற்சாகமாகவும் இருந்தது.

இனி, சில புத்தக வெளியீட்டாளர்கள் பஷீரை குரங்கு விளையாட்டு விளையாடியதையும் பரிசோதிக்கலாம்:

என்.பி.எஸ்ஸியை நிறுவிய பஷீர் தனக்கு நேர்ந்த வேதனைகளைப் பற்றி டி.ஸி.கிழக்கே முறிக்கு எழுதிய ஒரு கடிதத்தில் இருந்து:

'அன்புள்ள டி.ஸி. நீங்கள்தான் என்னைக் காப்பாற்றணும். என் புத்தகங்களுக்கு என்.பி.எஸ். புதிய பதிப்புகளை பதிப்பிக்கப்

போவதில்லை. நான் அனுப்பிய எந்த ஒரு கடிதத்துக்கும் பதில் அனுப்புவதில்லை. இங்கே நான் வாழ்வதற்கே இப்போது மிகவும் சிரமமாக உள்ளது. என் தாத்தாவுக்கு... துணைப்பாட நூலாக்கிய வகையில் எனக்குச் சேரவேண்டிய சன்மானத் தொகையைக் கேட்டதின் கோபத்தை அவர்கள் இப்போது தீர்த்துக் கொண்டிருக்கிறார்கள்...'

இந்த இடத்தில் சிறிது முன் வரலாற்றையும் சொல்ல வேண்டியதிருக்கிறது. 1950-ல்தான் பஷீரின் ஒரு புத்தகத்தை முதன்முதலாக ஸாஹித்யா ப்ரவர்த்தக ஸஹகரண சங்கம் வெளியிட்டது. 'விட்டிகளுடெ ஸ்வர்க்கம்' என்னும் நூல்தான் முதல் புத்தகம். அதன்பின் பஷீரின் எல்லா புத்தகங்களையும் இதே கூட்டுறவுச் சங்கம்தான் வெளியிட்டது. அதனால் வேறு எந்தவொரு பதிப்பாளருடனும் பஷீருக்குத் தொடர்பு உண்டாகி இருக்கவில்லை. இதற்கு இடையில்தான் முன்பு கூறிய பாடநூல் சர்ச்சை கிளம்பியதும், 'என் தாத்தாவுக்கு...' பாட நூலாகி விற்ற வகையில் சங்கத்துக்கு நல்ல லாபம் கிடைத்தது உண்மையாகும். 1951 ஜூன் 1-ம் தேதி தலையோலைப் பறம்பில் தான் வாங்கிய இடத்தில் ஒரு வீடு கட்டுவதற்கான முயற்சியைப் பஷீர் தொடங்கினார். 'என் தாத்தாவுக்கு...' துணைப்பாட நூலாகி விற்ற வகையில் சங்கத்திலிருந்து கொஞ்சம் தொகை வருமே என்னும் தைரியத்தில்தான் இந்த சாகசத்துக்கு பஷீர் தயாரானது. பணத்துக்கு மிகவும் சிரமப்பட்டபோது தான் காரூருக்கு எழுதியதையும், காரூர் நீலகண்டபிள்ளை (மலையாள மொழியில் சிறந்த சிறுகதை எழுத்தாளர்) பணம் அனுப்பத் தயங்கியதையும் எல்லாம் மாத்ருபூமியில் எழுதிய 'குப்தன் நாயருக்கான பதிலி'ல் பஷீர் விலாவாரியாகச் சொல்லியுள்ளார்.

சுருக்கமாகச் சொல்வதானால், சங்கம் பஷீரின் புத்தகங்களை வெளியிடுவதில் போதுமான ஆர்வத்தைக் காண்பிக்கவில்லை என்னும் நிலை வந்ததும், இலக்கியத்தினால் மட்டும் ஜீவனம் நடத்தக்கூடிய தன்னை இப்படி ஒதுக்கித் தள்ளுகிறார்களே என்னும் வேதனையுடன்தான் பஷீர் டி.ஸி.க்கு எழுதினார். அதற்குப் பதிலாகத்தான் பஷீரின் புத்தகங்களைத் தொடர்ந்து வெளியிடும் பொறுப்பை டி.ஸி. ஏற்றுக்கொண்டார். 1977 ஜூலையில்தான் பஷீரின் புத்தகம் முதன்முதலாக டி.ஸி.புக்ஸில் வெளியிடப்பட்டது. அந்தப் புத்தகத்தின் பெயர் 'பூமியுடெ அவகாசிகள்'. அதன்பின் ஒவ்வொன்றாக பஷீரின் எல்லா

புத்தகங்களுக்கும் டி.ஸி. 'அவகாசி' (வாரிசு)யானார். தொடர்ந்து, மாதந்தோறும் மூவாயிரம் ரூபாயை டி.ஸி. அனுப்பிக் கொண் டிருந்தார். இப்போது பஷீரின் எல்லா புத்தகங்களும் நல்ல விலையில் விற்கின்றன. எந்தப் புத்தகமும் எப்போது வேண்டு மானாலும் கிடைக்கும் என்னும் நிலையும் ஏற்பட்டது.

பஷீர் என்னும் எழுத்தாளரைப் பற்றி பஷீரின் புத்தகங்களுடைய தற்போதைய வெளியீட்டாளர் டி.ஸி. கிழக்கேமுறி மதிப்பிட்டது:

'...ஸாஹித்ய ப்ரவர்த்தக ஸஹகரண சங்கத்தில் எழுத்தாளர் களுக்கு 30 சதவிகிதம் ராயல்டி வழங்கப்படுகிறது. நாங்கள் 15 சதவிகிதம்தான் அளிக்கிறோம். இந்த ஏற்பாட்டில் பஷீருக்கு எவ்விதக் கஷ்டமுமில்லை. 10 சதவிகிதமே போதும் என்றும், சில காலம் தானும் இதுபோல் புத்தகம் அச்சிட்டு விற்றது உண்டென்றும், அதனால், ஒரு பதிப்பகத்தாரின் சிரமம் தனக்குத் தெரியும் என்றும் பஷீர் அடிக்கடி கூறுவார். ஆனால் நாங்கள் 15 சதவிகித ராயல்டிதான் அளிக்கிறோம். பஷீரின் 32 புத்தகங் களையும் தொடர்ந்து டி.ஸி.புக்ஸ் பிரசுரித்தது. எல்லா புத்தகங்களும் எப்போதும் மார்க்கெட்டில் இருக்கவேண்டு மென்று நாங்கள் ஒரு நிர்ப்பந்தத்தையே கொண்டிருந்தோம். நூறு சதவிகிதமும் என்பதை நாங்கள் உரிமை கொண்டாடவில்லை என்றாலும் முடிந்த மட்டில் அப்படி இருப்பதற்கு நாங்கள் கவனம் செலுத்தியிருந்தோம். அதில் இன்னொரு தனித்தன்மை யையும் கூட சொல்ல வேண்டியதிருக்கிறது. மலையாளத்தி லுள்ள வேறு எந்தவொரு எழுத்தாளருக்கும் தான் எழுதிய எல்லா புத்தகங்களும் எப்போதும் ஒரே மாதிரி விற்றுத்தீரும் ஓர் அனுபவம் உண்டாவதில்லை. புகழ்பெற்ற நம்முடைய பல எழுத்தாளர்களுடைய மிகவும் கவனத்துக்குரிய புத்தகங்களுக்கு பரபரப்பான விற்பனை இருந்தபோதிலும், அதைவிட அவர் களின் பல புத்தகங்கள் முற்றிலும் கவனிக்கப்படாமல் போகக் கூடிய நிலையும் உள்ளது என்பதும் ஒரு யதார்த்தமானதே. ஆனால், பஷீருக்கு அந்த அனுபவம் உண்டானதில்லை. எல்லா புத்தகங்களும் எல்லா சமயங்களிலும் ஏறக்குறைய ஒரே மாதிரி விற்பனையாகின்றன.

தன்னுடைய எல்லா படைப்புகளும் ஒன்றாக ஒரே தொகுப் பாகுதல் என்னும் அபூர்வ அனுபவமும் ஒருவேளை மலையாளத்

தில் பஷீருக்கு மட்டுமே கிடைத்த அதிர்ஷ்டமென்றும் சொல்ல லாம். 1992 மே மாதத்தில் பஷீரின் முழு படைப்புகளையும் இரண்டு தொகுதிகளாக டி.ஸி. புக்ஸ் வெளியிட்டது. பல காரணங்களால் பதிப்பக அரங்கில் ஒரு பெரும் சலனத்தை உருவாக்க அந்தப் பதிப்பினால் முடிந்தது என்பதில் எங்களுக்கும் மன நிறைவுண்டு. வெளியிட்ட தினத்தன்றே அவுட் ஆஃப் பிரிண்டான புத்தகம் என்னும் பெருமை இந்த நூலுக்குத்தான் என்றுகூட சொல்லலாம். காரணம், நான்காயிரம் பிரதிகள் அச்சடிக்கும்போதே, ஏறக்குறைய அத்தனைக்கும் முன்வெளி யீட்டு திட்டத்தில் பணம் அனுப்பி காத்திருந்தார்கள் மக்கள். அச்சிடல், காகிதம், பைண்டிங் முதலிய விஷயங்களில் முதல்தரமான நிலையை வெளிப்படுத்திய இந்தப் புத்தகம் தாராளமாக விளம்பரம் பெற்றுக்கொண்டது. வெளிநாட்டு பதிப்புகளுக்கு ஒப்பாக நிற்கும் தயாரிப்பு என பொதுவான அபிப் பிராயம் உண்டாயிற்று. பஷீருக்கு இதில் மிகவும் மகிழ்ச்சி உண்டாயிற்று. மேலும், முழுமையான படைப்புகளின் மறு பதிப்பை வெளியிடும் விஷயத்தையும் யோசித்து வருகிறோம்.

டி.ஸி.புக்ஸில் 'பஷீர் ஃபைலே' உண்டு. நாங்கள் பஷீருக்கு அனுப்பிய கடிதங்களும், பணக் கணக்குகளும், பஷீர் எங்களுக்கு அனுப்பிய கடிதங்களும் அதில் உண்டு. சில காலம் கழிந்து பஷீரை விற்று நாங்கள் பணம் எடுத்துக்கொண்டோம் என்னும் ஆட்சேபம் வராமலிருப்பதற்கு தான் இந்த ஏற்பாடாகும்.

பஷீர் மற்ற எழுத்தாளர்களை விட மிகவும் வித்தியாசமானவர். முதலாவதாக, எத்தனை பதிப்புகள் வெளிவந்த புத்தகமானாலும் புதிய பதிப்பு வெளிவரும்போது அதைப் படித்துப்பார்த்து திருத்த வேண்டும் என்று நிர்ப்பந்தம் பண்ணுவார். தான் பார்க்காமல் ஒரு வரியைக் கூட அச்சிடக்கூடாது என்பார். ஒரு கடிதத்தை அச்சிட வேண்டுமென்றாலும் கூட, வயதாகி இயலாத நிலையும் உண்டென்றாலும் அதைப் படித்துப் பார்த்து திருத்தி அழகாக்கிய பின்பே அனுமதி வழங்குவார். எழுத்தில் இந்தளவுக்குக் கூர்மையை வெளிப்படுத்தும் ஓர் எழுத்தாளரை நான் கண்ட தில்லை.

இன்னுமொன்று, பஷீரின் படைப்புகள் மற்றவைகளோடு ஒப்பிடும்போது சிறியதுதான்! பெரும் படைப்புகளின் மேல் பஷீருக்கு ஆர்வமில்லை. இதற்குக் காரணம் இலக்கியப்

பூர்வமான மேன்மை மட்டுமல்ல. வாசகர்கள் பாவப்பட்டவர்கள். அவர்களுக்கு வாழ்க்கைத் துன்பங்களும் பிரயாசைகளுமெல்லாம் ஏராளமாக உண்டாகும். புத்தகம் படிக்கவில்லை என்றாலும் அவர்களால் வாழமுடியும். அந்த நிலையில் வாழ்க்கை அவர்களுக்கு ஆயாசத்துடன் நகரும்போது, இடையில் படிப்பதற்காக அவர்களுக்கு ஒரு புத்தகம் வேண்டும். முடிந்த மட்டில் அவர்களுக்கு விலை குறைந்த புத்தகங்களை விற்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்த நிபந்தனை.

இதைக் கூறும்போது காரூர் நீலகண்டப்பிள்ளை சொல்லிய ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வருகிறது. ஒரு நாவலாசிரியர் தன்னுடைய புதிய நாவலின் முக்கிய கதாபாத்திரத்துக்கு 'பாரு' என்னும் பெயரைச் சூட்டினார். நாவலை எழுதி முடித்தபோது, பாருவை 'கொச்சுபாரு' என்று பெயர் மாற்ற வேண்டும் என்று அவருக்குத் தோன்றியிருக்கிறது. ஒரு ஐநூறு இடத்திலாவது இந்தக் கதா பாத்திரத்தின் பெயர் மீண்டும் மீண்டும் இடம் பெற்றிருக்கும். இரண்டு எழுத்துகள் கூடுவதால், அதையொட்டி பக்கங்களும் அதிகரிக்கும். பக்கங்கள் அதிகரிப்பதையொட்டித்தானே விலையை நிர்ணயிக்க முடியும். இப்படி விலை கூடினால் ராயல்டியும் அதிகரிக்குமல்லவா...?

பஷீருக்கு இப்படிப்பட்ட 'சொட்டு வித்தைகள்' மேல் விருப்பமில்லை. 500 பக்கங்கள் நீண்டிருந்த 'பால்யகால சகி'யை 75 பக்கங்களாகச் சுருக்கிய பஷீரைப்போல் மலையாளத்தில் இன்னொரு எழுத்தாளன் இல்லை. அதனால்தான், பஷீர் என்பவர் மலையாளத்தில் ஒருவர் மட்டுமே உண்டு...'

இவ்வாறு ஒவ்வொரு படைப்பையும் புதிய பதிப்பாக மாற்றும்போது பஷீர் சில அடிக்குறிப்புகள் எழுதுவதுண்டு. இவற்றையெல்லாம் கூறும்போது வாழ்க்கையையும், மனத்தில் நம்பிக்கைகளையும் பற்றிய பஷீரின் புதிய எண்ணங்களைக் குறிப்பிட முடிகிறது.

இதற்கு 'அனல் ஹக்' என்பதே சிறந்த உதாரணம்.

'... அனல் ஹக்' என்பதின் பொருள் நான் சத்தியமாகின்றேன் என்பதாகும். கடவுளின் ஒரே மாதிரியான அர்த்தங்களில் அதுவும் ஒன்று. சமீபத்தில் மன்சூர் அல்ஹல்லாஜ் என்பவர் தான் ஒரு கடவுள் என்று கூறினார். அப்படி அவர் தெளிவாகக் கூறினாரோ

என்னவோ தெரியாது. அப்படி அவர் சொன்னதில்தான் என்ன தவறு? ஆனால் மன்சூர் பைத்தியமாக இருக்கவில்லை, ஆன்மீகவாதியான ஒரு ஸூஃபி அவர்.'

என்பதை, புதிய பதிப்பில் இந்தக் கதையையே மாற்றி பஷீர் திருத்துகிறார். கதையின் இறுதியில் இந்தக் குறிப்பை எழுதினார் பஷீர்.

**குறிப்பு:** இது நான் நாற்பது ஆண்டுகளுக்கு முன்பு எழுதியது. இப்போது 1982. 'அனல் ஹக்' என்னும் 'அகம் ப்ரம்மாஸ்மி' என்னும் தெய்வத்தின் அநேக படைப்புகளில் ஒன்றான மனிதன் சொல்வது தவறு என்றுதான் நான் நம்புகிறேன். மன்சூரினுடையது என எழுதிய வரலாறும் சரியில்லை. இவை எல்லாவற்றையும் ஒரு ஃபான்டஸிதானென்று மட்டும் கணக்கிட்டால் போதும். அனல் ஹக்... இந்தத் திருத்தல் முறை இலக்கிய ஆர்வலர்களுக்கு விருப்பப்படவில்லை. அனல் ஹக்கின் எல்லா கம்பீரமும் இந்த வார்த்தைகளின் மூலம் சோர்ந்துவிட்டன என்பதுதான் உண்மையாகும்.

'எம்.பி.பால்' என்னும் நூலில், 'அந்தக் காலத்தில் எனக்கு கடவுளின்மேல் மட்டுமே பயம் உண்டாகி இருந்தது...' என்று எழுதினார் பஷீர்.

ஆனால், அதன்பின் பஷீர், 'இன்று நான் கடவுளை மட்டுமல்லாமல் சர்வமும் தன்னகத்தேயுள்ள மனிதனிடமும் பயப்படுகிறேன்' என்று மேலும் சேர்க்கிறார்.

இவ்வாறு இளமைக்காலக் கட்டத்திலிருந்து வயோதிகத்துக்கு வந்தபோது பஷீர் சில திருத்தங்களையெல்லாம் தம் நூலில் வரவழைத்துள்ளார். அதாவது, அனுபவங்களின் கடினத்தன்மையானது பல பாடங்களை பஷீருக்குக் கற்றுக்கொடுத்துள்ளன.

இருந்தும், சில விமரிசகர்கள் வயோதிகத்திலும் பஷீரை வெறுமனே விட்டதில்லை. 'உப்பூப்பான்டெ குய்யானகள்' என்னும் புத்தகத்தின் மூலம் கொடூரமான அந்தச் சிலுவையில் அறைதல் தன்மைதான் நடந்தன. பஷீரின் படைப்புகளிலுள்ள காமம், இயற்கைக்கு விரோதமான உடலுறவுச் செயல்கள் என இப்படிக் குற்றப்படுத்தாமை எதுவும் மிச்சம் ஒன்றுமில்லை என்னும் வகையில் விமரிசனங்கள் இருந்தன. இதற்கு எதிராக 'பஷீரின் ஐராவதங்கள்' என்னும் நூலும் வெளிவந்தது - அது பஷீர்

என்னும் எழுத்தாளரின் தன்னம்பிக்கையை வெளிப்படுத்தக் கூடிய பல பிரபலமானவர்களின் கட்டுரைகளை உள்ளடக்கியது. அதோடு அந்த விவாதமும் முடிந்தது.

வாழ்க்கையின் அந்திமத்தில் பஷீர் ஒரு மதவாதியாக மாறுகிறார் என்னும் ஆட்சேபணையும் பரவலாக இருந்தது. பஷீர், மிகச் சிறு வயதிலேயே தெய்வ நம்பிக்கையுள்ளவர்தான். குர் ஆன் ஓதிக் கொண்டிருந்தவர். பள்ளிவாசலுக்குப் போய் வந்தவர். கடவுளை (அல்லாவை) நிந்தித்தவரில்லை. என்றாலும், மதநம்பிக்கை களிலுள்ள அநாச்சாரங்களையும் முட்டாள்தனங்களையும் விமரி சித்துக் கொண்டிருந்தார். தன்னுடைய அறிவுக்கும், யூகத்துக்கும் ஒத்துவராத எதையும் எப்போதும் அவர் அங்கீகரித்ததில்லை. இஸ்லாம் மதத்திலுள்ள நல்ல பக்கங்களை மட்டுமல்லாமல், எல்லா மதங்களையும் அவர் ஆதரிக்கவும் அங்கீகரிக்கவும் செய்தார்.

அல்லாஹூ என்னும் நம்பிக்கையின் மறுபுறத்திலுள்ள குருட்டு நம்பிக்கைகளை கடைசி வரை எதிர்த்தார். ஆனாலும், பஷீர் சிறிது அதிகமாகவே இஸ்லாம் மதத்தைப் பற்றி கூறினார்தான். காரணம், தன் சமுதாயத்தில் வெளிப்படுத்தவேண்டிய யதார்த் தங்களைப் பற்றிச் சொல்வதற்கு தன் உறுதியை அதன்மூலம் காண்பிக்கிறார். இதற்கும் அப்பால் வர்க்கத்தன்மையோ ஜாதிமத சிந்தனையோ பஷீருக்கு அப்போதுமில்லை, எப்போதுமில்லை.

ஓர் எழுத்தாளன் என்னும் நிலையில் 'பர்ஃபெக்ஷன்' காத்து நிற்கும் பஷீரை, இலக்கியத்துக்கு வெளியேயான விவாதங்கள் எதுவும் பாதித்ததில்லை. அதனால்தான், எந்தவொரு விபரீத மான சுற்றுச்சூழல் நிலைகளையும் தைரியத்துடன் எதிர்கொள்ள அவரால் முடிந்தது எனலாம்.

# பதினெட்டு

‘‘பயணத்துக்கான நேரம் மிக மிக நெருங்கி விட்டது. நீயும் நானும் என்னும் இந்த யதார்த்தத் தன்மையிலிருந்து இறுதியில் நீ மட்டுமே மிஞ்சப் போகிறாய்.

நீ மட்டுமே...

இவ்வளவு காலமாகியும் நீ என்னை அளவற்ற வாஞ்சையோடு நேசித்தாய். என் எல்லா வற்றையும் சகித்துக்கொண்டாய். என்னைப் பற்றி உனக்கு எல்லாமும் தெரியும். இன்னமும் உன் சவுகரியம் போல் படிக்கக்கூடிய ஒரு சிறு கிரந்தமல்லவா நான்...’’

- இது, ‘அனர்க நிமிஷ’த்திலுள்ள வரிகளாகும். ஆரம்பத்தில் ஆங்கிலத்தில் எழுதிய இந்தக் காவிய வரிகள், பஷீரின் இலக்கியத்திலுள்ள இன்னிசையை தெளிவுபடுத்துகிறது.

‘‘அவன் இறுது யாத்திரைக்குத் தயாராகி விட்டான். எங்கே போகப் போகிறான்? இருளின் இந்த மகா சமுத்திரத்துக்கா? இல்லை, வெளிச்சத்தின் புதிய உலகத்துக்கா? ஒன்றையும் அறிந்துகொள்ள முடியவில்லை. எந்தவொரு பிடிப்பும் பிடிமானமுமில்லை. ஒரே நொடியில் மாறக்கூடிய நினைவு மட்டுமே அவன். எல்லையில்லா இடத்தை நோக்கிய பயணம்தான் அந்த வாழ்க்கை...’’

வார்த்தைகள் சங்கீதமாகும்போதும், பிரத்யேக தாளலயங்கள் உண்டாகும்போதும், அவைகள் இதயத்தை வருடுகின்றன. இது, சங்கீதத்தின் பிரத்யேகத் தன்மையாகும். மனமும் சிந்தனையும் ஒரே மாதிரியான அதிர்வளிப்பதற்கு இசையினால் மட்டும்தான் முடிகிறது. இதற்கு வார்த்தைகளின் பிரயோகமும் இடம் பெறலும் துல்லியமாக வரவேண்டியதாகிறது. 'வார்தைகளுக் காக அடை காக்கிறேன்' என்று சில கவிஞர்கள் சொல்கிறார் களல்லவா. அதேபோல், பஷீரின் படைப்புகளிலும் வெளிப்படு கின்ற சாதாரண வார்த்தைகளுக்குக் கூட காவிய அழகு கைவரப் பெறுவது அந்த 'அடைகாத்தலி'ன் மூலம் தேடிக் கொள்கிற கலாபூர்வமான திறமையினால்தான்.

'என் தாத்தாவுக்கு ஒரு யானை இருந்தது' என்றும் நாவலில் வரும் 'வெளிச்சத்துக்கு எதற்கொரு வெளிச்சம்' என்னும் வாக்கியம் அளிக்கின்ற அந்த ரிதமானது சாதாரண பதங்களால் கிடைக்கக் கூடிய சவுபாக்கியமான திறமையாகும். இப்படி இன்னிசையின் மூலமாக காலடி வைப்புகளால் பஷீர் புதிய உலகத்தையே படைக்கிறார். அந்த உலகத்தில் வார்த்தைகளுக்குச் சிறகுகள் முளைக்கின்றன. அவை வாசகனின் இதயத்துக்குள் பறந்து வருகின்றன. அடர்த்தியான அனுபவத்தையே படைக்கின்றன. 'ஏகாந்ததயுடெ அபாரதீபம்' என்னும் பிரயோகத்திலேயே ஓராயிரம் வண்ணச் சிறகுகள் விரிகின்றன.

இவ்வாறு, தியானத்தில் மூழ்கிய மனத்திலிருந்து வார்த்தைகள் ஓடிவருவது என்பது இசைநயமிக்க பயிற்சியினால் மட்டுமே யாகும். பஷீருக்கு இசையும் பூக்களும் எப்போதும் பிடித்த மானவைகளாக இருந்தன. அவர் எங்கே சென்றாலும், அந்த இடம் சிறைச்சாலையாக இருந்தாலும் சரி போலீஸ் ஸ்டேஷனாக இருந்தாலும் சரி, தான் தங்கியிருக்கும் இடத்தில் பூச்செடிகளையும் பூந்தோட்டத்தையும் பஷீர் ஏற்படுத்தி விடுவார். அதே போல், வீடாக இருந்தாலும், சிறைச்சாலையாக இருந்தாலும் அது எதுவும் தனக்கு மாறுபாடு இல்லாதது போன்று, தன் தலை சாய்க்க ஓர் இடம் கிடைத்தால் போதும். அங்கே தன் கிராம போனையும் ரிக்கார்டுகளையும் கொண்டுவந்து விடுவார்.

திருச்சூரில் வாழ்ந்தபோது ஏ.கே.டி.கே.எம். என்பவர் ஒரு நல்ல கிராமபோனை பஷீருக்கு அன்பளித்தார். பங்கஜ்மல்லிக், கே.எல்

ஸேகால், கே.ஸி.டே., தலத் முகம்மது, எம்.எஸ். சுப்புலட்சுமி, முகம்மது ரபி, திலீப்குமார் ராய், பால் ராப்ஸன், பிங் க்ராஸ்பி, பண்டிட் ரவிசங்கர், பிஸ்மில்லாகான், யாஹூதி மெனுஹின், பங்கஜ் உதாஸ், நூர்ஜஹான், முகேஷ்... இப்படி, பஷீரின் கைவச முள்ள எண்ணற்ற இசைத்தட்டுக்களின் பட்டியல் நீள்கிறது. முற்றிலும் படுக்கையில் விழும் வரையில், பேப்பூர் வீட்டின் முன்னாலுள்ள மாமர நிழலில், கஜல் ரிக்கார்டுகளை போட்டுக் கேட்டபடியே லயித்துக்கொண்டிருப்பார் பஷீர். இப்படி, அவர் இந்த இசையுலகத்தை விட்டால், அப்புறம் ஏகாந்தமான தியானம்தான்.

அன்பளிப்பாகக் கிடைத்த கிராமபோனை தான்செல்லும் இட மெங்கும் கொண்டு சென்றார் பஷீர். மது அருந்திய காலகட்டத்தில் இசை கேட்பதற்காக அவர் தனி ஆர்வமே கொண்டிருந்தார். பஷீருக்கு மிகவும் பிடித்த பழைய பாடல்கள் ஏராளம்... 'குஸர் கயா வஹ் ஸமானா கைஸா கைஸா', 'தேரா மந்திர் காஹூ தீபக் ஜல் ரஹா', 'ஸோஜா ராஜகுமாரி...' இவைகளையெல்லாம் பலமுறை மீண்டும் மீண்டும் கேட்பார். சோகமயமான தாளலயங்களில், வாழ்க்கையின் அனைத்து துக்கங்களையும் மறப்பதற்கு பஷீர் முயற்சி செய்துக் கொண்டிருந்தார். அதோடு, நீல நிற நீர்நிலைகளிலுள்ள நிசப்தத் தன்மையில், வாக்குகள் என்னும் சிறு கற்களை எறிந்து சித்தனையலைகளை படைக்கவும் செய்தார்...

பஷீரின் உலகம் இவ்வாறு பலசமயங்களில் தன்னிலை இழப்பாக மாறுவதுண்டு. சங்கீதமும் தனிமையுமும் தனிப்பட்ட சிந்தனையும் ஒன்றோடொன்று பின்னிப் பிணையும் போது நாம் வாழ்கின்ற இவ்வுலகத்தோடான உறவே முறிக்கப்படுகின்ற நிலை. பஷீரின் உலகிலோ, நீல வெளிச்சமும் தனிமைப்பயங்கரமும் சுந்தர சாந்த கம்பீரக் கடலும், கடலலைகளின் இசையும் மட்டுமே ஏற்படு வதுண்டு. அங்கே கல்மிஷமில்லை; சுயநலமில்லை; மனிதனோடு தொடர்புள்ள யாதொன்றுமில்லை. வார்த்தைகள் இசையாக மாறுவதும், ஓசைகள் தாளலயத்தைப் படைப்பதுமான அந்தப் புனிதமான உலகத்தில் மனிதர்கள் உருவமற்றவர்களாக மாறுகிறார்கள்.

இந்த இடத்தில்தான், பஷீர் படைப்புலகத்தைக் கண்ட பிடித்தது. அதன்மூலம், நன்மையினுடையதும் கருணையினுடையதுமான கதைகளைச் சொல்லி கொடுத்தது. அதோடு பார்கவியின் துயரக் காதலையும் நீலவெளிச்சத்தின் அமைதியற்றதான இருத்தலை

யும் வெளிப்படுத்தியதுமாகும். ஒருவேளை, இது மலையாள மொழியில் பஷீருக்கு மட்டுமே கைவந்த அபூர்வமான நிலை எனலாம். இரவின் தனிமையில், கடற்கரையில் ஏகாந்தமாக அமர்ந்திருக்கும்போது ஒரு நிர்வாண அழகி ஓடிவந்து தனக்கு முன்னால் நின்ற நிகழ்ச்சியை வேறு எவரும் சொல்லாதது அல்லவா...!

இந்த நிகழ்ச்சியை விவரிக்கும்போது அந்த வார்த்தைகளில் இசையோடு இணைந்த எதிரொலியைக் கேட்கலாம். நீல ஆகாயத்தையும் கடலின் கர்ஜனையையும், ஏகாந்தத் தன்மையை யும் அந்த நிர்வாண அழகி தண்ணீரைத் தெளித்தவாறு ஓடி வந்ததையும், தன் சைக்கிளை உராய்ந்துக் கொண்டு தாண்டிச் சென்றதையும் பஷீர் கூறும்போது, அந்த வார்த்தைகளில் எங் கிருந்தோ ஓடிவரும் அபூர்வ ராகங்களை உள்ளுக்குள்ளேயே கேட்கலாம். பயங்கரமான நிலைமையில்கூட கூர்நோக்குப் படைப்புள்ள வார்த்தைகளை பஷீர் எப்போதுமே சொல்லி யுள்ளார்.

நட்பும் நட்பற்ற தன்மையும், வேதனையும் மகிழ்ச்சியும் நகைச்சுவையும் கேலியும் எல்லாம் வெளிப்படுத்தும்போது பஷீரின் வார்த்தைகளில் வேறுபாடான ராகங்களின் ஸ்வர லயத்தைக் கேட்கும்படியாக உள்ளது. இதை அவர் தெரிந்தே மனப்பூர்வமாகப் படைப்பதில்லை. உணர்வற்ற தளங்களில் பதிந்து கிடக்கும் இசைஞானம் தன்னை அறியாமல் வார்த்தை களின் வழியே வந்து இணைகிறது. எண்ணங்களின் நரம்புகளில் விரல் மீட்டும்போது ஏழிசைகளின் தடைகளற்ற பிரவாகமாக வழக்கத்துக்கு மாறான அர்த்ததளங்களை இவ்வாறுதான் பஷீர் தீர்க்கின்றார். ஒப்புவமையற்றதான ரசிப்புத் தன்மையின் வானவில்களை வாசகர்களின் இதயத்தில் விரிப்பதற்கு பஷீரிடமுள்ள திறமையானது புதுமைப் படைப்பாளிகள் உள்ள இந்த காலகட்டத்தில் வேறு எந்தவொரு எழுத்தாளனுக்கும் கிடைக்கவில்லை.

பத்தொன்பது

பஷீர் மனிதனுக்குத் தேவையான கதையை எழுதினார். நட்பு, உதாரகுணம், கருணை என இந்த மனிதநேய அம்சங்களில் ஊன்றிக் கொண்டுள்ள படைப்புகள், மலையாள மொழி படைப்புக்கு ஒரு புதிய மரி யாதையையே அளிக்கிறது. வில்லத்தனமான கதாபாத்திரங்கள் கூட பஷீரின் இலக்கியத் தில் சிரிப்பை உண்டாக்குகிறார்களே தவிர பயங்கரமானவர்களாக வருவதில்லை. கொடூரம், பொறுமையின்மை, கோபம், வெறுப்பு, பொறாமை முதலிய மனிதநேய மில்லாத குணங்கள் எதுவும் பஷீரின் படைப்புகளில் காணுவதில்லை. அங்கே அப்பட்டமான மனிதர்களின் மூடதனங் களும் வீழ்ச்சிகளும் வெற்றி தோல்விகளும், காதலும் காமமும் துன்பமும் துயரங்களும் கருணைத்தன்மையும் வாத்சல்யத்தையும் மட்டுமே காணமுடியும்.

ஓர் எழுத்தாளன் என்னும் நிலையில் பஷீர் இந்த 'ஹ்யூமானிட்டி'யை நிலைநிறுத்து வதே தன் பரம்பரைக் குணத்தினால்தான் எனலாம். பஷீரின் உம்மாவும் வாப்பாவும் கருணையும் நேசமும் உள்ளவர்கள். 'ஒரு கருந்தேளின் கதை'யிலிருந்து அவர்க ளுடைய ஜீவகாருண்யம் தெளிவுபடுத்தப்படு கிறது.

அது ஒரு கருந்தேளின் கதை. தலையோலைப் பறம்பில் வெள்ளப் பெருக்கு வந்தது. மூவாட்டுப்புழை ஆற்றிலிருந்து வெள்ளம் கரையைத் தாண்டி பறம்பில் புகுந்தது. சொல்லப்போனால், ஆறு பறம்பில் புகவில்லை; அது கரையைத் தொட்டுதான் சென்று கொண்டிருந்தது. ஆனால், பஷீரின் குடும்ப வீடுதான் வெள்ளத்தின் அடியில் சென்றுவிட்டது. சுற்றுமுற்றும் வீடுகள் எதுவும் இல்லை. இறந்த மிருகங்கள், பாம்புகள் மற்றும் மரங்கள் முதலானவை புழையில் மிதந்து சென்றன. அப்போதுதான், ஒரு கருமையான தேள் எங்கிருந்தோ ஓடி வந்து விட்டிலுள்ள தூணில் ஏறியது. வாப்பா, அதை அடித்து கொல்லச் சொன்னார். ஆனால், குஞ்ஞாச்சும்மா அதற்கு சம்மதிக்கவில்லை. 'அல்லாவின் படைப்பு அது. அபயம் தேடி நம் வீட்டுக்கு வந்திருக்கிறதாக்கும்' என்றெல்லாம் உம்மா சொன்னார். விஷமுள்ள ஜீவனாக இருந்தாலும் தேளைக் கொல்வதற்கு பஷீரின் உம்மா சம்மதிக்கவில்லை.

ஆனால், குளிப்பதற்காகச் சென்றபோது தான் கட்டியிருந்த சேலையில் ஏறிக்கொண்ட அந்தக் கருந்தேள் உம்மாவின் காலில் கவ்விப் பிடித்துக்கொண்டிருந்தது. உம்மா அலறிக் கூச்சலிட்டதும் எல்லோரும் ஓடி வந்தார்கள். துணியை அவிழ்த்து உதறினார்கள். அப்புறம்தான் தேள் கீழே விழுந்தது. அப்போது பஷீரின் உம்மா, 'பார்த்தீங்களா, அது என்னைக் கொட்டவில்லை; விஷத்தையும் இறக்கவில்லை' என்று கூறினார்.

அப்பறமும் அந்தக் கருந்தேளைக் கொல்வதற்கு உம்மா சம்மதிக்கவில்லை. வாய்பறம் உடைந்த மண் கலயத்தில் வைத்து அந்தத் தேள் தண்ணீரில் விடப்பட்டது. ஆனால் வெள்ளப் பெருக்கு அதிகரித்ததும், கலயத்திலிருந்த கருந்தேள் திசையற்று அலைந்தது. வீடும் பொருள்களும் கூட தண்ணீருக்குச் கீழே போய்விட்டது. மரணம் மிகவும் நெருங்கியபோதுதான் பஷீரின் குடும்பம் எப்படியோ அதிலிருந்து தப்பியது. அப்போது அந்தக் கருந்தேள் இருந்த கலயம் அவர்கள் கண்முன்னே தெரிந்தது. எங்கிருந்தோ கிடைத்த ஒரு சுமைதாங்கியைப் பிடித்துக்கொண்டு ஆற்றின் மரண முகத்திலிருந்து தப்பித்தபோது, தப்பித்தலின் சின்னமாக கருந்தேளும் அந்தக் கலயமும் அவர்களுக்கு முன்னால் நிற்கிறது! பஷீரின் வாப்பா பொதிமடலை எடுத்து கருந்தேளை அதனுள் விட்டு தண்ணீரில் மிதக்க விட்டார். அதன்பின் தன் மனைவியிடம், 'அடியேய், ஒரு உதவியைச்

செய்யும்போது அது ஒரு உண்மையான உதவியாக இருக்கணும்' என்றார். அந்த மடலும், கருந்தேளும் வெருதூரம் சென்று மறையும்வரையில் வாப்பாவும் உம்மாவும் பிள்ளைகளும் அதை நோக்கியவாறு நின்றார்கள்.

''எதிலாவது அந்த மடல் தடைபடும்போது ஏதாவது ஒரு மரத்தில் ஏறி அந்தக் கருந்தேள் தப்பித்துக்கொள்ளும்!'

இதுதான் பஷீருக்குக் கிடைத்த நன்மையின் பூர்வீகம். தலையோலைப் பறம்பிலிருந்து மிகவும் இளம் வயதிலேயே ஊரையும் வீட்டையும் விட்டு வெளியேறி, விசாலமான இந்த உலகத்துக்குள் கையை வீசிக்கொண்டு நடந்து சென்ற பஷீர், தான் பயணித்த வழிநெடுகிலும், பசியிலும் காமத்திலும் காதலிலும் நன்மை என்னும் நூறு மலர்கள் மலர்வதற்குத்தான் ஒரு தூண்டுகோலாக இருந்தார். கடும் விஷம் நிறைந்த ஒரு கருந் தேளுக்கு ஜீவகாருண்யம் காட்டிய ஒரு தாய்க்கும் தந்தைக்கும் பிறந்த மூத்தமகன், பிற்காலத்தில் தன்னைக் கடித்துக் குதறத் துணிந்தவர்களிடமெல்லாம் - கருணையைத் தான் காட்டினார். நல்லது விதைத்தால் நல்லதையே அறுவடை செய்யலாம் என்பதை பஷீரின் வாழ்க்கைப் பயணத்திலுள்ள அனுபவக் கதைகளே நமக்குச் சொல்கின்றன.

எல்லையோர மாநிலத்தில் வைத்து ஒரு பிக்பாக்கெட்காரன் பஷீரிடம் காட்டிய கருணையின் கதையை 'ஒரு மனிதனி'ல் நாம் படித்தறிந்தோம். இது போன்றுள்ள ஏராளமான நன்மை கள் பஷீருக்குத் திரும்பக் கிடைத்துள்ளன. ஸ்காட்லாண்டி லுள்ள எடின்பரோ பல்கலைக்கழக டீன் டாக்டர் ரொனால்டு இ. ஆஷர் கடல் கடந்து பேப்பூரிலுள்ள பஷீரின் வீட்டுக்கு வந்தார். பஷீரின் படைப்புகளை மொழிபெயர்த்தார். அதோடு மட்டுமல்லாமல், நோபல் விருதுக்காக எடின்பரோ பல்கலைக் கழகத்தின் நாமினியாக பஷீரின் பெயரையும் அளித்தார். அப்போது, நோபல் விருது பஷீருக்குக் கிடைக்கவில்லை என்றாலும், மலையாள மொழியைச் சேர்ந்த ஓர் எழுத்தாள னுக்குக் கிடைத்த ஓர் அபூர்வ வெகுமதியே இது. டாக்டர் ஆஷர், 'பால்யகால சகி', 'பாத்தும்மாயுடெ ஆடு' ஆகிய இரண்டையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்க, எடின்பரோ பல்கலைக்கழகம் ஒரே புத்தகமாக பிரசுரித்தது. இதுவும் பஷீருக்குக் கிடைத்த ஓர் அனுக்கிரகமே...

இதேபோல், நட்பினுடையதும் உதார குணத்தினுடையதுமான கதைகள் பஷீரைப் பற்றிச் சொல்வதற்கு ஏராளமாகவே இருக்கின்றன.

சிறியன பெரியான என்னும் ஒப்பிட்டு நோக்கும் குணம் சிறிதும் இல்லாமல், தான் ஓர் எழுத்தாளனாக ஆகியிருக்காதிருந்தால் ஹோட்டல் பணியாளனாகவோ, மீன் பிடிக்கும் தொழிலாளியாகவோ ஆகியிருக்க முடியும் என்று பஷீர் சொல்வதும்கூட ஒரு ஒப்புக்கான வார்த்தைகளில்லை. இதற்கு உதாரணமாக, சாகித்ய அகாதெமியில் நிர்வாகக் குழு உறுப்பினாராக இருந்த காலத்தில் பஷீரிடமிருந்த மனிதநேயத்தின் ஒரு சிறு நிகழ்ச்சியைக் கூறலாம்:

பஷீர், அகாதெமிக்குச் சென்றால் அங்குள்ள கெஸ்ட்ஹவுஸில் தான் தங்குவார். அகாதெமி கூட்டத்தை முடித்துக்கொண்டு மறுநாள் காலையில்தான் போவார். அதுதான் அவருடைய வழக்கம். ஆனால் இரவில் அவர் தனியாக உறங்குவதில்லை. விளக்கை அணைக்காமல் விடியற்காலை இரண்டு மணிவரை அமர்ந்திருப்பார். இப்பழக்கம் அவருக்கு மனக்குழப்பம் வந்த பிறகு என்னவோ பயமாகிவிட்டது. அதனால், அவர் தனக்குத் துணையாக யாரையாவது வைத்துக்கொள்வார். பல சமயங்களில் சுகுமார் அழிக்கோடுதான் அவருக்குத் துணையாக இருப்பார். அழிக்கோடு இல்லையென்றால் அகாதெமியிலுள்ள தாற்காலிக அட்டெண்டரான பால்தான் வந்து படுத்துக் கொள்வான்.

இரவில் உறங்குவதற்காகப் படுத்ததும் பஷீர், பாலிடம் அவனுடைய குடும்ப விஷயம் முழுவதையும் கேட்டுத் தெரிந்து கொண்டார். அதன்பின், அகாதெமி கூட்டம் முடிந்து வீட்டுக்குத் திரும்பும்போது பாலைத் தேடிச்சென்று ஏதாவது ஒரு தொகையை அளிப்பார். இதை ஒரு நிரந்தர ஏற்பாடாகவே பஷீர் கொண்டிருந்தார். அதோடு மட்டுமல்ல, அழிக்கோடைப் போலவே பாலையும் தன் அருகிலுள்ள படுக்கையிலேயே படுத்துக்கொள்ளச் சொல்வார்.

ஒருமுறை பஷீர் பாலிடம், ''பாலு உன்னை இங்கேயே நிரந்தர அட்டெண்டராக ஆக்கிடுவாங்க. நான் எக்ஸிக்யூட்டிவ்ல சொல்லியிருக்கேன். ஆனா ஒரு நிபந்தனையும் உண்டு. சம்பளம் கிடைத்தால் அதை செலவு பண்ணக்கூடாது. ஒரு பேங்க்

அக்கவுண்ட் தொடங்கணும். கிடைத்த சம்பளத்தை அப்படியே உன் பேரிலேயே போட்டு விடணும். அதன்பின், அந்த பாஸ்புக்கை என்னிடம் காட்டணும்'' என்று கூறினார்.

பால் அதைப்போலவே செய்தான். அப்போது பஷீர் ஒரு தொகையை பாலின் கையில் கொடுத்து ஆசிர்வதித்தார்.

'பாலு, நீ குடும்பத்தை நல்லா நடத்தணும்' என்று.

கொல்லம் கஸ்பா காவல் நிலைய லாக்கப்பில் கிடந்த சமயத்தில் பஷீரைக் காண்பதற்கு இரண்டு இளைஞர்கள் வந்திருந்தார்கள். வித்யாதரனும், பட்டத்து விள கருணாகரனும்தான் அவர்கள். அந்தச் சந்திப்புக்குப் பின் காலம் சென்று ஒருநாள் வித்யாதரன் பேப்பூருக்கு வந்தார். அப்போது அவருக்கு அகாலமூப்பு பாதித்து இருந்தது. பஷீரைப் பார்த்ததும் மிகவும் பரிதாபத்துடன்,

''சார், எனக்கு உங்களைவிட்டால் வேறு கதியில்லை. நீங்க ஒரு புத்தகம் எனக்குக் கொடுத்து உதவணும். உங்களோடு சில கடிதங்களும் மற்ற சில குறிப்புகளும் இன்னும் புத்தகமாகாமல் கிடக்கின்றனவல்லவா - அதாவது, 'நேரும் நுணயும்' (உண்மை யும் - பொய்யும்) - அதை நான் அச்சடித்துக் கொள்ளட்டுங்களா? அதற்காக தாங்கள் சிரமப்படவும் வேண்டாம். நர்மதா, ஜெயகேரளம் முதலிய அச்சகங்களிலிருந்து நானே அவற்றைச் சேகரித்துக் கொள்வேன்.'

- என்று கேட்டார். பஷீர் உடனே அதற்கு அனுமதியளித்தார். மஞ்ஜுஷா பப்ளிகேஷன் என்ற பெயரில் அந்தப் புத்தகம் வெளிவந்தது. அதற்கான ராயல்டியாக சல்லிக்காசைக்கூட பஷீர் பெற்றதில்லை.

எர்ணாகுளத்தில் தங்கியிருந்த காலத்தில் பஷீர் ஒரு பையனைக் காப்பாற்றிய கதையொன்றும் உண்டு. திருவிதாங்கூரில் கைது வாரண்ட் இருந்தமையால் பஷீரால் சொந்த கிராமத்துக்குப் போக முடியவில்லை. அப்போது ஸ்டேட் காங்கிரஸுக்கும் யூத் லீக்குக்கும் சிறுசிறு கட்டுரைகளை எழுதி தான் தன் ஆதாரத்துக்கே பஷீர் வழி கண்டுபிடித்தார். அவ்வாறு மிகவும் சிரமப்பட்டு வாழ்ந்துகொண்டிருந்த காலத்தில்தான் ஒரு பையனைக் கண்டார். அவன் எர்ணாகுளம் பக்கத்திலுள்ள ஒரு தீவுக்காரப் பையன். அப்போது, பஷீர் தங்கியிருந்ததோ ஒரு கட்டடத்தின் குறுகிய ஓர் அறையில்தான். ஒருநாள் அந்தப்

பையன் அந்தக் கட்டடத்தின் வராண்டாவில் சோர்ந்துபோய் படுத்திருந்ததை பஷீர் பார்த்து விட்டார். வெரு நேரம் வரையில் அவன் அப்படியே படுத்திருந்தான். பஷீருக்கு அவன்மேல் இரக்கம் ஏற்பட்டது. அவனை எழுப்பி தன்னோடு தங்கிக் கொள்ளுமாறு சொன்னார். அநாதையான அந்த ஈழவப் பைய னுக்கு 'சாமி' என்கிற பெயரையும் சூட்டினார். பல சமயங்களிலும், 'டேய் சாமி' என்றுதான் அவனை அழைப்பார். இதற்கு ஒரு காரணமும் உண்டு. திருவிதாங்கூரை ஆண்டுகொண்டிருந்த சர்.சி.பி. ராமசாமி ஐயரிடம் அவருக்கிருந்த கோபம்தான் அது. சர்.சி.பி., பஷீருக்கு எதிராக கைது வாரண்ட் பிறப்பித்திருந்த தால்தான் இந்தக் கோபம். இந்தப் பகையைத் தீர்ப்பதற்காகத்தான், 'டேய் சாமி' என்று அழைத்தது. எர்ணாக்குளத்தில் பஷீர் வாழ்ந்திருந்த அந்த ஆரம்ப காலங்களில் எல்லாம் இந்த அநாதைப் பையனும் பஷீரும் ஒன்றாகவே பட்டினி கிடந்தார்கள். காசு கிடைக்கும் போது ஒரே மாதிரியாக சாப்பிட்டார்கள்!

குடும்பப் பாசம் என்பது பஷீரைப் பொருத்தமட்டில் ஒரு பலவீனத்தன்மைதான். மிகவும் இளம் வயதிலேயே ஊரைவிட்டு சென்றுவிட்டார். இந்தியாவுக்குள்ளேயும் வெளியேயும் அவர் அலைந்து திரிந்தபோது கையில் காசு வந்தால் அதை வீட்டுக்கு அனுப்பி வைப்பார். வாப்பாவோ உம்மாவோ சகோதர சகோதரிகளோ எதையாவது விரும்பிக் கேட்டுவிட்டால் போதும், எந்தவிதத்திலாவது அதை பஷீர் சாதித்து விடுவார். தான் பயணம் சென்ற காலத்தில் பஷீர் வீட்டுக்குக் கடிதம் எழுதிக்கொண்டிருப்பார். ஒருநாள், தன் சகோதரி பாத்தும்மா வுக்கு அக்கடிதத்துடன் காஷ்மீரிலிருந்து ஓர் அபூர்வ மலரையே அனுப்பிவைத்தார்.

தன் தாயைப் பற்றி, 'அம்மா', 'என்டெ உம்மா' என இரண்டு கதைகளை பஷீர் எழுதியுள்ளார். மார்க்ஸிம் கார்க்கியின் 'தாயை'ப்போலவே பஷீரின் 'அம்மா'வும் இலக்கிய உலகில் அழியாத படைப்பாக மாறியது. சிறையிலிருந்து திரும்பி வரப்போகும் மகனை, எதிர்நோக்கி ஒவ்வொரு இரவிலும் சோற்றைப் பரிமாறி வைத்துக்கொண்டு உறங்காமல் காத்திருப் பார் அந்தத் தாய். அதற்குப் பிரதிபலனாக, சொந்தக்காலில் நிற்பதற்கான நிலையை அடைந்ததும், பஷீர் வாப்பாவையும், உம்மாவையும் நல்ல முறையில் கவனித்தார். தலையோலைப் பறம்பில் சொந்தமாகப் புதியதொரு வீடு கட்டியதும் உம்மாவை

தன்னுடன் தங்க வைத்தார். மிஞ்சிய காலத்தை தன்னுடனேயே கழிக்குமாறு தாயிடம் கூறினார்.

அப்போது ஒருநாள் 'நீ எப்போதும் உம்மாவையும், வாப்பாவையும் மறக்காதே. நான் சாகும்போது நீ 'அல்கா அஃப்' பத்து வாங்கி என்னோட பேரை எழுதி தலையோலைப் பறம்புலவுள்ள பள்ளிவாசலுக்குக் கொடுக்கனும்!' என்று கூறினார் உம்மா.

அதேபோல், உம்மா இறந்தவுடன் 'அல்கா அஃப்', பதினைந்து பிரதிகளை கே.கே. முகமது அப்துல் கரீமின் மூலம் குண்டோட்டியிலிருந்து வாங்கி வந்து உம்மாவின் பெயரை அவற்றில் எழுதி தலையோலைப் பறம்பு பள்ளிவாசலில் ஒப்படைத்தார்.

பஷீர் தன் வாழ்க்கையைத் தொடங்கியபோது அவருடைய கையில் ஒரு பேனாவும் சில பேப்பர்களும் மட்டுமே இருந்தன. ஆனால், சில காலம் சென்றதும் அவைகளே சில புத்தகங்களாக உருமாறின. முட்டத்து வர்க்கி அவார்டும், வள்ளத்தோள் அவார்டும், அந்தர்ஜனம் அவார்டும் போன்ற ஏராளமான அவார்டுகளோடு, ஃபெலோஷிப்புகளும் தாமிரப் பத்திரமும் தங்கப்பதக்கமும் என அநேக விருதுகள் பஷீரைத் தேடி ஓடிவந்தன. இந்திய ஜனாதிபதி பத்மஸ்ரீ பட்டம் வழங்கினார். காலிக்கட் யூனிவர்ஸிட்டி 'டாக்டர் ஆஃப் லெட்டர்ஸ்' பட்டத்தை வழங்கியது.

பஷீரின் படைப்புகளில் பலவும் இந்தியாவிலுள்ள ஏறக்குறைய எல்லா மொழிகளிலும் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. பிரஞ்சு, ஆங்கிலம், செக், சைனீஸ், ஜப்பானீஸ் ஆகிய அயல் மொழிகளிலும் மொழியாக்கம் பெற்றுள்ளன. சுதந்தரப் போராட்ட வீரர்களுக்கான மத்திய அரசின் பென்ஷன்கள் கிடைத்தன.

இவைகளெல்லாம் தேடி வந்தும்கூட பஷீரிடம் எந்தவொரு மாற்றமும் வந்ததில்லை. பேப்பூரிலுள்ள பழைய வீட்டின் திண்ணையில் குனிந்து அமர்ந்துகொண்டு, படிக்கவும் பேசவும் சில சமயங்களில் ஏதாவது எழுதிக்கொண்டுமிருக்கும் இந்த உலக இலக்கியவாதிக்கு ஆர்பாட்டங்களிலோ அலங்காரங்களிலோ விருப்பமில்லை. ஆம். அவருடைய படைப்புகளைப் போலவே தான் அவரும். அதற்கான காரணம், பிறந்தநாளில்கூட பட்டினி கிடக்க வேண்டியதாகிவிட்ட அந்த காலகட்டத்தை பஷீர் மறந்தில்லை.

பஷீருக்கு அப்படியும் ஓர் அனுபவம் உண்டு.

ஒரு பிறந்தநாள் அன்று நாள் முழுவதும் பட்டினி கிடந்த பஷீர், பக்கத்து அறையிலிருந்த நண்பனின் உணவை திருடித் தின்றார்! பிறந்த நாள் என்னும் கதையில் இந்த நிகழ்ச்சியை பஷீரே விவரிக்கிறார். 'ஒரு நாளைய டைரி' என்பதுதான் அக்கதைக்கு அவர் ஆரம்பத்தில் வைத்த பெயர். கொசுவின் தொந்தரவும் புழுக்கமும் மட்டுமல்லாமல், மண்ணெண்ணெய் வாங்கு வதற்குக்கூட காசு இல்லாமையால், இரவில் தெரு விளக்குக்குக் கீழே அமர்ந்து கொண்டுதான் அக்கதையை பஷீர் எழுதினார்.

வயதான காலத்தில் சம்பாதிக்கும் திறமை கைவந்தபோது மற்றவர்கள் எல்லாம் ஆசைப்படுவதுபோல ஓய்வெடுக்கும் வாழ்க்கையை பஷீர் மேற்கொள்ளவில்லை. அதற்கு பதில் அந்த மனம் எப்போதுமே குழப்பமாகவே இருந்தது. மகானான ஒரு கலைஞரின் குழப்பத்தன்மை... பஷீரின் மகள் ஷாபினா பேப்பூரில் பள்ளிக்கூடத்துக்கு அருகில் அழகான வீடு ஒன்றைக் கட்டி தான் தங்குமிடத்தை அங்கே மாற்றினார். அவருடைய மனத்தில் அப்போது ஓர் ஆசை தோன்றியிருந்தது.

'டாட்டாவை (பஷீரை பிள்ளைகளும் பேரப்பிள்ளைகளும் அப்படித்தான் அழைப்பார்கள்) அந்த வூட்ல தங்க வைக்கணும்...'

அதற்காகவே, எல்லா நவீன வசதிகளும் நிறைந்த ஓர் அறையை யும் கட்டினார் ஷாபினா. சாய்வு நாற்காலி, எழுதுவதற்கான மற்ற வசதிகள், புத்தகங்கள் வைப்பதற்கான ஷெல்ப், ஓய்வெடுப் பதற்கான படுக்கை, வெளிச்சமும் காற்றும் நிறைந்திருக்கும் நல்ல அருமையான அறை. அந்த அறையுடன் இணைக்கப்பட்ட நவீன முறையிலுள்ள குளியலறை. இவ்வளவையும் முடித்து விட்டு தன் தந்தையை ஷாபினா வற்புறுத்தினார் - தங்கள் வீட்டிலுள்ள அந்த அறையில் வந்து தங்குமாறு. அந்தப் புதிய வீட்டுக்கு அந்த மகள் குடியேறிய நாளன்று போனதைத் தவிர, பிறகு எப்போதுமே பஷீர் அங்கு போனதில்லை.

தன் பிள்ளைகளை உயிருக்கும் மேலாக நேசித்திருந்த அந்த வாப்பாவுக்கு, தன்னுடைய அந்தப் பழைய திண்ணையும் புத்தகங்களும் அவார்டும் சிற்பங்களும் தூசு படிந்து கிடக்கும் அந்த அறையும் மட்டுமே போதுமானவையாக இருந்தன.

'நான் இப்படியெல்லாம்தான் வாழ்ந்தேன். இனிமேலும், இப்படியே வாழ்ந்தால் போதும்' என்னும் எண்ணம்தான் அவரிடம் இருந்தது.

இன்று பஷீர் வயதான தவத்திலிருக்கிறார். நோயாளியாகவும் சோர்ந்து போனவராகவும் நாள்களைக் கழிக்கிறார். மனைவியும் பிள்ளைகளும் பேரக்குழந்தைகளுமாக, காலத்தின் அந்திமத்தில் திருப்தியுள்ள ஓர் எழுத்தாளன். பஷீருக்கு எப்போதும் பிறந்த நாள்கள் மகிழ்ச்சியை உண்டாக்குவதில்லை. விரக்திதான் பஷீரின் விசேஷத் தன்மையாகும். அழுவதற்குக் கூட முடியாமல் கண்ணீர் வற்றிப்போன காலத்திலிருந்து எவ்வளவோ தூரத்தைக் கடந்தும் பஷீரின் பிறந்தநாள் என்றும் பசியினுடையதுதான். ஆனால், இது வயிற்றின் பசியில்லை. தன்னைச் சுற்றிலும் நடக்கின்ற சலனங்களிலிருந்து பலம் பெற்று, எப்போதும் படைத்துக் கொண்டிருக்கும்படியான செயலைச் செய்ய முடியாமல் போனதினால் வேதனை உருவாக்கும் பசி அது. வயது ஏறுகிறது; நோயும் முற்றுகிறது. ஆனால், பஷீருக்கு இன்னும் எழுதவேண்டுமென்னும் எண்ணமுண்டு. களைப்புற்று படுத்திருந்ததற்கு இடையிலும் பஷீரின் உள்ளுக்குள்ளேயே படைப்புக் கலைஞனான பஷீர் மிகப் பெரும் திறமைசாலிதான். எல்லாவற்றையும் எழுதினாலும், இன்னும் எழுதுவதற்கு மிச்சமுள்ளதை எழுத முடியவில்லையே என்னும் துக்கம்தான் படைப்பிதயப் பசியாக பஷீரினுள் இறுதிநாள் வரையில் நிலைத்து நின்றது.

---

## என் மரணக் குறிப்பு

வைக்கம் முகம்மது பஷீர்

அழகான இந்தப் புவியில் எனக்கு அனுமதித்திருந்த நேரம் முழுவதும் முடிந்துவிட்டது. என்னிடம் நேரம் சிறிதுகூட இல்லை. அல்லாவின் கஜானாவில் மட்டுமே நேரம் இருக்கிறது. ஆமாம், ஒருபோதும் முடிவில்லாத நேரம்... முடிவற்ற... முடிவில்லாத நேரம்.

இதுவரையில் தினந்தோறும் காலையில் படுக்கையிலிருந்து எழுந்திருக்கும்போது - காலை எதுவொன்றையும் பேசுவதற்கு முடியவில்லை; தெரியுங்களா - நான் சொல்லிக் கொண்டிருப்பேன்; சலாம், நேரம் காலங்களின் முடிவில்லாமையிலிருந்து இன்னும் ஒருநாள் அனுமதித்தீர்களல்லவா! நன்றி.

நான் இந்து சாமியார்களுடனும், முஸ்லிம் சந்நியாசிகளான சூஃபிகளுடனும் கழித்த நாள்கள் நினைவுக்கு வருகின்றன. அப்போது எல்லாமே தேடுதலாக இருந்தன. கடவுளின் பெயர் களை முணுமுணுத்துக் கொண்டிருந்தேன். அவை நிரந்தர தியான மாக இருந்தன. தாடியும் முடியும் வளர்த்துக் கொண்டு முழு நிர்வாணமயமான இருப்பு - பத்மாசனம், யோகதண்டம் தெய்வம் தம்புரானை நினைத்துக் கொள்கிறேன். பிரபஞ்சங்களான சர்வ பிரபஞ்சங்களையும் உணர்வு மண்டலத்தில் நிலையுற்றுள்ள தியானத்திலிருந்து விழிப்புற்று புவிக்கும் சூரிய சந்திரர்களுக்கும் நட்சத்திரங்களுக்கும் பால்வீதிகளுக்கும், சூரிய குடும்பங் களுக்கும், அண்ட கடாஷங்களுக்கும் மற்ற எல்லா பிரபஞ்சங் களுக்கும் கேட்கும் வகையில் மிக மெல்ல மனம் முணுமுணுக் கிறது, 'அஹம் பிரம்மாஸ்மி' என்று. அதையேதான் தியானத் திலிருந்து விழிப்புறும் சூஃபிகளும் முணுமுணுக்கிறார்கள், '*அனல் ஹக்!*' என்று.

'அனர்க நிமிஷம்' என்னும் என்னுடைய சிறிய புத்தகத்தில் 'அனல் ஹக்' உண்டு. அன்றொரு நாள் நான் இறக்கப் போகிறேன் என்று எனக்குத் தோன்றுகிறது. நான் இவ்வுலகில் இல்லாமலாகப் போகிறேன்! நானும் நீயும் உள்ள இந்த யதார்த்த நிலையிலிருந்து நீ மட்டும் எஞ்சியிருக்கப் போகிறாய். அதுதான் அனர்க நிமிஷம்.

மரணம் என்னைப் பயப்படுத்துவதுமில்லை; பயப்படுத்தாமல் இருந்ததுமில்லை. மரணம் ஒதுக்கிவிடமுடியாத ஒன்றல்லவா! அது வரும்போது வரட்டுமே.

பிறந்தது முதலே கொஞ்சம் அதிகமான தடவைகள் மரணத்தைத் தொட்டுவிட்டு வந்தவன் நான். ஒருமுறை என் இடதுகாலில் கொடிய விஷமுள்ள பாம்பு ஒன்று சுற்றிக் கொண்டது. அடுத்தமுறை வலதுகாலின் பாதத்தின் வழியாக ஒரு பெரிய விரியன் பாம்பு மெல்ல, மிக மெல்ல ஊர்ந்து சென்றது. இன்னொரு முறை எங்கள் வீட்டில் மூன்று நான்கு தடவைகள் விரியன் பாம்பு நுழைந்தது. அதுவும் இரவில். கடைசிமுறை நான்கு விரல்கள் இடைவெளியில்தான் மரணத்தோடு இருந்தேன். மிதித்தும் இருப்பேன்.

நான் இப்போது மரணித்துவிட்டேன். இனிமேல் யாராவது என்னை நினைப்பார்களா? என்னை யாரும் நினைக்க வேண்டாம் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. எதற்காக நினைக்க வேண்டும்? கோடான கோடி அனந்தகோடி ஆண்களும் பெண் களும் இதுவரையில் இறந்திருப்பார்கள் அல்லவா! அவர்கள் எல்லோரையும் நாம் நினைக்கிறோமா?

அப்புறம் என்னுடைய புத்தகங்கள்... அவையெல்லாம் எவ்வளவு காலத்துக்கு நிலைத்து நிற்கும்? புது உலகம் வந்தால் பழைமை யெல்லாம் புதுமையில் மறைய வேண்டியதுதானே! இங்கே என்னுடையது என்று கூறுவதற்கு என்ன எஞ்சி இருக்கிறது? எனக்கென ஒரு மண் துகளளவு அறிவையாவது நான் இந்த பூமிக்குக் கொடையாக அளித்துள்ளேனா? எழுத்துகள், வார்த்தை கள், எண்ணங்கள் - இவையெல்லாவற்றையும் கோடான கோடி மனிதர்கள் பயன்படுத்தியவைதானே?

இந்த முழு நிலவுக்கும், எண்ணிலடங்கா நட்சத்திரங்களுக்கும் கீழே தெளிந்த, ஏகாந்த, அற்புத அழகோடு கூடிய இரவு நேரங்களில் அடிவானத்தையொட்டி தனிமையில் இரண்டு மூன்று முறைகள் நான் நின்றதுண்டு. எதையும் உண்ணாமல் பயந்து அழுது

கொண்டே நான் ஆடிப்போனதுண்டு. என் முதல் பாலைவனப் பயணத்திலேயே நான் இறக்க வேண்டிய நிலையும் ஏற்பட்டது.

அஜ்மீருக்கு அருகில்தான் அது நடந்தது. ஓர் உச்சி நேரம். நான் தனிமைப்பட்டேன். பாலைவனத்தின் ஒரு மூலையின் ஓரம் தான் வழி. வழி தவறாமல் பயணிப்பதற்காக முன்பெல்லாம் வெட்டுக்கற்கள் போன்ற அடையாளங்கள் இருந்தன. காலப் போக்கில் அவை இப்போது காற்று வீசி மணலால் மூடப்பட்டு விட்டன. அதனால் எனக்கு வழி தவறிவிட்டது. பயங்கர வெப்பத் தகிப்பு. நல்ல தாகம். வலது பக்கமாகப் போக வேண்டும். நான் சென்றதோ இடதுபக்கமாக, முடிவில்லாத பாலைவனத்தை நோக்கி. தலைக்கு மேலே சுட்டெரிக்கும் பயங்கர சூரியன். இலக்கு இல்லாமல் நடந்து கொண்டிருக் கிறேன். கால்கள் மணலில் புதைகின்றன. புதையும்போது குளிர்ச்சி தோன்றுகிறது. மேலே வெப்பம். கொடிய தாகம். நான் சோர்ந்துபோய் கீழே விழுந்துவிட்டேன் - நீளமான ஒரு கரிக்கட்டையாக, நட்ட நடுவே உள்ளுக்குள் ஒரு சிறிய சிவப்பு வெளிச்சம். அல்லா... என்னது இது?

அதுவும் மறைந்துவிட்டது. முற்றிலும் உணர்வே இல்லை. அதேபோல் சுட்டுப் பழுத்துக்கொண்டு எவ்வளவு நேரம் கிடந்தேனோ? நாள்களாகவா? மணிகளாகவா? அதுவும் தெரியாது.

அங்கேயே கிடந்து செத்துவிட்டிருந்தால்?

நினைத்துப் பார்க்கும்போது எல்லாமும் ஒரு நகைச்சுவையைப் போலவே இருக்கின்றன. இந்த இகலோக ஜீவிதம் ஒரு பெரும் நகைச்சுவைதான். எல்லாமும் பகவானின் லீலா விநோதம்தான்.

ஒருமுறை வி.கே.என். (இவர் மலையாள மொழியின் சிறந்த நகைச்சுவை இலக்கியப் படைப்பாளி.) என்னிடம் மரணத்தின் எதிர்வினையைப் பற்றிக் கேட்டார்.

அதற்கு நான் சொன்னேன்: He puts off till the last movement (இறுதி நிமிடம் வரையில் தொந்தரவு இல்லை) என்று.

வைக்கம் முகமது பஷீர் மரணித்தான்; செய்தி வருகிறது. எப்படி செத்தார்? அப்போது ஒரு காரணம் வேணும். அவ்வளவுதான்.

இப்போது இதோ நான் இறந்துவிட்டிருக்கிறேன். போதுமான காரணங்கள் உண்டா என்று நீங்கள்தான் உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும். நான்தான் முன்பே சொன்னேனே, என் பக்கத்தில் முடிவில்லாத நேரம் சிறிதும் இல்லை.

எல்லோருக்கும் சலாம். மாங்கோஸ் ரைட்டன் மரத்துக்கும் அனைத்து வகையான உயிர்களுக்கும் சலாம். ஏதாவது தவறு செய்திருந்தேனேயானால் அண்ட பிரபஞ்சமே மன்னியுங்கள்! எல்லோருக்கும் மங்களம். சுபம்.

---

1994 ஜூலை 5-ம் தேதி செவ்வாய்க்கிழமை அதிகாலை 1.15 மணிக்கு பஷீர் காலமானார்.